

**कडलङ्गुडि नटेशशास्त्री**

**ज्यौतिषिकः**

व्याकरण वेदान्त शास्त्र पारङ्गतः, भागवत भगवद्गीतोपन्यासकः

आर्यमतसंवर्द्धनी पत्रिकासंपादकश्च ॥

# பொருளடக்கம்

# सांख्यतत्वकारिकाणां अकारादिक्रमः

---

## பிழைதிருத்தம்

199வது பக்கத்திற்கு அடுத்த பக்கம் முதற்கொண்டு முறையே 9பக்கங்களில் விழுந்திருக்கின்ற 220, 221, 222, 223, 224, 225, 226, 227, 228, என்ற நம்பர்களை முறையே 200, 201, 202, 203, 204, 205, 206, 207, 208, என்று திருத்திப் படிக்கவேண்டும்.

30வது பக்கத்தில் தமிழில் 2வது வரியில் "குறைவாக இருக்கவேண்டும்" என்றிருப்பதை "குறைவாக இருக்கவேண்டாம்" என்று திருத்திக்கொள்ளவேண்டும்.



# முகவுரை

---

दर्शनम्—दृश्यत इति दर्शनम् 'அறியப்படுவதுபற்றி தர்சனம் எனப்படும்' என்ற உரையால் க்ஞானமும், दृश्यते अनेनेति दर्शनम् 'இதனுல் அறியப்படுகின்றதுபற்றி தர்சனம் எனப்படும்' என்ற உரையால் அறிவுக்கு இன்றியமையாச் சாதனமும் "தர்சனம்" எனப்படும். இரண்டாவது உரைப்படி க்ஞான சாதனங்களான கர்மா முதலியவைகளும், அவைகளை உபதேசிக்கின்ற சாஸ்திரங்களும் தர்சன சப்தத்தால் கூறப்பட்டனவாயாகும். இத்தகைய தர்சனங்கள் 1. சாங்கியம் 2. யோகம் 3. நியாயம் 4. வைசேஷிகம் 5. பூர்வமீமாம்ஸை 6. உத்தரமீமாம்ஸை என ஆறுவகைப்படும். கபிலர், பதஞ்ஜலி, கௌதமர், கணுதர், ஜைமினி, வியாஸர் என்ற ஆறு மகருஷிகள் முறையே இவ்வாறு தர்சனங்களை இயற்றியவராவர். இவ்வாறு தர்சனங்களுள் முதலாவது தர்சனமான சாங்கியத்தையே வியாஸர் தமது உத்தரமீமாம்ஸை என்ற பிரும்ம சூத்திரத்தில் ஆங்காங்கு வெகுவாய்க் கண்டித்திருக்கின்றூர். அதற்குக்காரணம்-வேதாந்தங்களில் கூறப்படும் முக்கிய விஷயங்களுள் சிலபாகம் ஒற்றும், பெரும்பாகம் மாறுபட்டும் வருகின்றதாயினும், வேதாந்த சித்தாந்தமறிய விருப்பமுள்ள ஏனைய ஜனங்கள் சில பாகம் ஒற்றுவருதல் மூலம் ஒற்றுவராத பெரும்பாகத்தையும் வேதாந்த சித்தாந்தம் எனக் கருதி அதனபடி நடந்து வீணுகிவிடக்கூடும் என்பதேயாம். மேலும்,

ऋषिं प्रसूतं कपिलं यस्तमग्रे ज्ञानैर्बिभर्ति जायमानं च पश्येत्"

என்ற சுருதியால் கபிலர் ஸர்வக்ஞரெனக்கொண்டாடப் படுவதாகக்கொண்டு இக்கபிலரால் செய்யப்பட்ட சாங்கியதர்சனமே புருஷார்த்த சாதனமாகு மென்றும் கொள்ளக்கூடும். அவ்விதம் அதைப் புருஷார்த்த சாதனமாய்க்கொண்டு அதன்படி நடந்து உலகில் எவரும் புருஷார்த்தத்தினின்றும் விடுபடவேண்டாம்

எனக் கருணையாலும் கண்டித்தனர். என்று கொள்ளலும் பொருத்தமுள்ளதே. ஆகவே சாங்கியதர்சன கர்த்தர்வான கபிலர் என்ற மஹருஷி ஏனையதர்சனங்களைச் செய்தவர்களான கணாதர் முதலியோரின் காலத்திலேயே இருந்தவரென்றும் "ऋषिं प्रसूतं कपिलम्" என்ற வேதவாக்கியத்தால் ஸ்துதிக்கப்படும் கபிலர் ஸகரபுத்திரர்களை எரித்தவரும், 'வாசுதேவர்' என மறுபெயர்பூண்டவருமான பகவதம்சம் வாய்ந்தவரே யாவர் என்றும் கொள்ளவேண்டும். அத்தகைய பகவதம்சம்வாய்ந்த கபிலரால் மேற்கண்ட தர்சனங்கள் விஷயமாக எவ்விதக் கிரந்தமும் இயற்றப் பட்டிருப்பதாக நாளிதுவரை அனுபவத்திலில்லை. ஆகவே ஷட்தர்சன கர்த்தர்களுள் ஒருவரான இக்கபிலர் தன் மனதிற்குத் தோன்றியபடி புருஷார்த்தம் இன்னதென்றும், அதை யடைவதற்குத் தான் சொல்வதே சிறந்த சாதனமென்றும் கூறியுள்ளார். இவரது சித்தாந்தமாவது—

பிரகிருதி, புருஷன் இவ்விரண்டும் அநாதியானவைகள். அவற்றிற்கும் மற்றொருகாரணமில்லை. இவற்றுள் பிரகிருதி- என்பது சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களின் சமமான நிலையேயாகும். அந்நிலையினின்றும் புருஷர்களான ஜீவர்களின் கர்மம் காரணமாய் பிரகிருதிக்குச் சலனம், ஏற்பட அதனின்றும் அம்முக்குணங்களில் ஒன்று முக்கியமாயும் மற்றவை அதற்கு அடங்கியதாயுமான நிலையிலாகி பிரகிருதி, மஹத் அஹங்காரம், பஞ்சதன்மாத்திரை, பாஞ்ச பௌதிக பிரபஞ்சம் இவைகளாகப் பிரகிருதி தானே மாறுதலையடைகின்றது.

இங்கு உதாஹரணமாய் ஓர் விதையை எடுத்துக்கொள்வோம்—ஒரு விதையை முளைக்கச்செய்யவேண்டிப் பூமியிலிட்டு வைத்தால் முதலில் அவ்விதையின் நெருக்கமான அவயவங்கள் ஜலம், உஷ்ணம், காற்று முதலியவற்றால் தளர்வுற்று ஒப்புலத்தை யடைகின்றது. அதாவது விதையாயிருக்கும் நிலைக்கு மாறான நிலை அவ்விதையில் உண்டாவதை நாம் அனுபவத்திற் கண்கூடாகக் கண்டிருக்கிறோம். இந்நிலையையே வடமொழியில் **उच्छूनावस्था** என்பர். இவ்வித நிலையினின்றும் முளையுண்டாகின்

றது. இதையே "अङ्कुरावस्था" என்பர். பின்னர் அம்முளை மூன்றுவிதமாகப் பிரிதலையடைகின்றது. இதையே "दलावस्था" என்பர். அம்மூன்று விதமான பிரிதலிலிருந்தே விதைக்குத் தக்க மரமுண்டாகி ஓங்கி வளருகின்றது. இதையே **वृक्षावस्था** என்பர். இதைக் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். நாம் முதலிற் கூறிய விதையைப்போல் பிரகிருதி என்றும், இரண்டாவதான உச்சூனவஸ்தைபோல் மஹத்தத்துவமென்றும், மூன்றாவதான அங்குராவஸ்தைபோல் அஹம்தத்வமென்றும், அதனின்றும் பிரியும் தளாவஸ்தைபோல் பஞ்சதன்மாத்திரைகளென்றும், பின்னருள்ள விருக்ஷா வஸ்தைபோல் பாஞ்ச பௌதிக பிரபஞ்சமென்றும் பிரகிருதி, மஹத், அஹங்காரம், பஞ்சதந்மாத்திரை, பிரபஞ்சம் இவைகளை மனதில் வாங்குவது ஒருவாறு பொருத்தமாகும். இவ்விதம் பிரகிருதியானது தன்னிலை விட்டு மாறுவதற்குத் தன்னைவிட வேறானமற்றொன்றை எதிர்பார்ப்பதில்லை. உலகில் ஒரு சேதனன் தான் செய்யப்போகும் காரியம் யாவையும் பகுத்தறிந்து முறைதவறாது எவ்விதம் நடப்பானோ அவ்விதமே இது அசேதனமாயினும் மஹாசக்தி வாய்ந்ததாகையால்முறை தவறாது ஒன்றின்பின் ஒன்றாய் மாறி மாறிக் கொண்டிருக்கிறது.

மேலும் புருஷர்கள் என்ற ஜீவர்கள் அநேகர். அவர்கட்குப் பிரகிருதியை விடத்தான் எக்காரணத்தாலும் எச்சமயத்திலும் வேறுபட்டவன் என்ற பகுத்தறிவின்மையால் பந்தம் ஏற்படுகின்றது. டை விவேகக் ஞானத்தால் மோக்ஷம் உண்டாகின்றது. பிரகிருதியும் அதன் கார்யமான பிரபஞ்சமும் அழிவற்றது. எவ்விதத்தாலும் அவற்றின் சம்பந்தமற்றிருத்தலே நித்தியமான ஜீவனுக்கு "முக்தி" என்று கொள்ளவேண்டும். மேற்கூறிய பிரகிருதி புருஷ விவேக ஸாக்ஷாத்காரம் (பிரகிருதியை விடப்புருஷன் வேறு என்ற பகுத்தறிவு) பிரமேயமானது (பிரமாணங்கள் மூலம் உண்டாகவேண்டுவது) பற்றி அதற்காகப் பிரமாணங்கள் பிரத்தியக்ஷம், அநுமானம், சப்தம் என மூன்றுவிதமாக அங்கீகரிக்கப்படுகின்றன. அவற்றுள் பிரத்தியக்ஷம், அநுமானம், இவற்றின் லக்ஷணத்தை

**प्रतिविषयाध्यवसाय:** என்ற இந்தர்வது சுலோகத்தில் கண்டு கொள்க. சாங்கிய சித்தாந்த மூலாசிரியரான கபிலரால் உபதே சிக்கப்பட்ட வாக்கியங்களும், கர்மக்ஞானகாண்டாத்மகமான வேதமும், சப்தப் பிரமாணமென்றே அங்கீகரிக்கப்படும்.

சங்கை.—அங்ஙனமாயின் கர்மகாண்டமான வேதத்தில் **ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत** என்றும், **अपाम सोमममृता अभूम** என் றும் உபதேசித்தபடி ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களா லேயே சுவர்க்கம், அமிருதம் என்ற சப்தங்களால் சொல்லப்படும் முக்தியை ஒருவன் அடைந்துவிடக் கூடுமாதல்பற்றி தனிமை யாய் ஓர் சித்தாந்தத்தைச் செய்யவேண்டிய அவசிய மென்னே? எனின், உத்தரம்—ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்கள் பசுஹிம்சை செய்து அதன்மூலம் நடைபெறுவதால் பசுஹிம் ஸாத்மகமான பாபகர்மம் கலந்திருப்பதுபற்றி பாபகர்ம பலனை துக்கத்தையும் புண்ய கர்மபலனை சுகத்தையும் சேர்த்தே அனு பவிக்கவேண்டி வருமாதலால் எவ்விததுக்க சம்பந்தமுமற்ற முக்திநிலை கர்மங்களால் சித்திப்பதில்லையாதல் பற்றி கர்மகாண் டம் சப்தப் பிரமாணமாக அங்கீகரிக்கப்படினும் சாங்கிய சித் தாந்தப்படி ஏற்படும் முக்தி நிலையை யடைவதற்குக் கோரிய வைராக்கியத்தை உபதேசிப்பதிலேயே உபயோகத்தைப் பெறு கின்றது.

சங்கை—அங்ஙனமாயின் க்ஞானகாண்டமான உபநிடதங் களால் பிரகிருதி புருஷ விவேகம் உண்டாகக் கூடுமாதல்பற்றி அதற்கெனத் தனிநூல் இயற்றவேண்டிய அவசிய மில்லையே எனின்?

உத்தரம்—यतो वा इमानि भूतानि जायन्ते । येन जातानि जीवन्ति ।
यत्प्रयन्त्यभिसंविशन्ति । तद्विजिज्ञासस्व । तद्ब्रह्मेति ॥

என்ற ஜகத்காரண வஸ்துவை உபதேசிக்கும் உபநிஷத் வாக்கி யத்தில், உத்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றிற்கு உபாதான கார ண மாகக் கூறப்படும் வஸ்து பிரும்மமா? அல்லது பிரகிருதியா? என்று சந்தேகம் உதயமாகின்றது. மேலும் **ब्रह्मविदाप्नोति**

**परम्**" பிரும்மத்தை யறிந்தவன் பரத்தை யடைகிறான் என்று துடங்கி, அறியவேண்டுவதாகக் கூறப்படும் பிரும்மம் என்பது யாது ? என்று சந்தேகம் உதயமாகவே, பிரும்மம் இன்னதென் பதைத் தெளிவுபடுத்தவேண்டி "**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म**" என்று கூறப்பட்டிருக்கிறது. இதினின்றும் மேற்கூறிய சந்தேகம் தெளிவாகாமலே இருக்கின்றது. ஆகவே பிரமாணமா யங்கீகரிக் கப்பட்ட உபநிஷத் பாகத்தின் உட்கருத்தைத் தெளிவுபடுத்தவே கபில மஹருஷி சாங்கிய சாஸ்திரத்தைச்செய்தார் என்று கொள் ளவேண்டும். மேற்கூறிய வாக்கியங்களுக்குச் சாங்கிய சித்தாந் தப்படி பின்வருமாறு பொருள் கொள்ளவேண்டும்.

**सत्यम्**=முக்காலத்திலும் அழிவற்றதும் **ज्ञानम्=ज्ञायते अनेनेति ज्ञानम्**=என்ற உரையால் விவேக சாக்ஷாத்காரம் இதனால் உண்டா கின்றது பற்றி க்ஞானமாயும் **अनन्तम्**=ஒருவனுக்கு மோக்ஷமுண் டான காலத்திலும் தான் அழிவை யடையாததுவுமான வஸ்து எதுவோ அதுவே பிரும்மமெனப்படும். அதாவது **बृहि-वृद्धौ** என்ற வியாகரண சாஸ்திரப்படி **ब्रह्म** என்றபதத்திற்கு சூக்ஷ்ம மான நிலையை விட்டு ஸ்தூலமான நிலையில் விருத்தியையடையும் வஸ்து என்று பொருள் ஏற்படுவதால் அவ்வித நிலையைப் பிரகி ருதியே யடையக்கூடுமாதல்பற்றி பிரகிருதியே "பிரும்மம்" என்றும், அப்பிரகிருதியே ஜகத் சிருஷ்டி ஸ்திதி லயம் இவற்றி ற்குக் காரணமென "**यतोवा**" என்ற வாக்கியம் கூறுகின்றதென் றும் தெளிவு படுத்தவே கபிலர் தமது சித்தாந்தத்தை வெளியிட முன்வந்தார். ஆதலால் பிரமாணமாக ஒப்பிய வேதத்தினும் தனிமையாய்ச் சாஸ்திரம் ஏற்படுத்தவேண்டுவதவசியமாகி விட் டது. மேலும் இந்தச் சித்தாந்தப்படி ஈசுவரன் ஒருவனை யங்கீ கரிப்பதில்லை. ஏனெனில், ஈசுவரனில்லாது அசேதனமான பிரகிருதியைக்கொண்டே யாவையும் சாதித்து விடக் கூடுமாதல் பற்றியும், ஈசுவரனை யங்கீகரிப்பதில் கல்பனா கௌரவம் என்ற தோஷம் வருவது பற்றியுமே என்க. ஈசுவரனை யொப்புகின்ற வாதிகள், அவனை, அடைய வேண்டியவை யாவையும் அடைந் தவனென்றும், மகாபுத்திமான் என்றும், தயையுள்ளவனென்

றும் கூறுகின்றனர். ஈசுவரன் ஜகத்சிருஷ்டியில் பிரவிருத்திப் பாஞகில் **“प्रयोजनमनुद्दिश्य नमन्दो ऽपि प्रवर्तते”** பயனை எதிர்பாராது மந்தனும் பிரவிருத்திப்பதில்லை என்றபடி யாதேனும் ஒருபயனை யெதிர்பார்த்தே சிருஷ்டி யென்றகாரியத்தில் பிரவிருத்திக்கிறுன் என்று ஒப்பவேண்டும். அவ்வித மொப்புவோமாயின் “அடைய வேண்டிவை யாவையும் அடைந்தவன்” என்று அவனுக்குச் சொல்லிய லக்ஷணம் பொருந்தாத தாகவேயாகிவிடும்.

மேலும் துக்கமுள்ளப் பிராணிகளைப் படைப்பதிலிருந்து தயையுள்ளவன் என்று சொல்லும் லக்ஷணமும் பொருத்தமில்லாததாக ஆகிவிடும். பிராணிகளின் கர்மங்களையொட்டியே அவ்விதம் படைக்கிறுன் என்று சொல்லவுமியலாது. அவ்விதமாயின் தனக்குச் சக்தியில்லாது மற்றொன்றின் மூலம் படைத்தல் என்ற காரியத்தைச் செய்யும் ஈசுவரனை அங்கீகரிப்பது பயனற்றதாகவேயாகிவிடும். ஏனென்றுல் ஈசுவரனை யங்கீகரிக்கும் வாதிகளும் அசேதனமானப் பிரபஞ்சத்திற்கு பரிணும்யுபாதான வஸ்துவொன்றை யங்கீகரித்தே தீரவேண்டும். ஆகவே இருவராலும் ஒப்பக்கூடிய அசேதனமான வஸ்துவை நாமும் அங்கீகரித்து ஈசுவரவாதியாலும் அவசியம் ஒப்பவேண்டியப் பிராணிகளின் கர்மாவையும் அங்கீகரித்து அவ்வசேதன வஸ்துப் பிரகிருதி யென்றும், அஃதே பிராணிகளின் கர்மமூலம் அவரவர்களின் கர்மபலானுபவத்திற் குபயோகமான சரீரவடிவமாக பரிணமத்தை யடைகின்றதென்றும் அங்கீகரிப்பதால் ஈசுவரன் ஒருவனைத் தனிமையாய் அங்கீகரிப்பதால் ஏற்படுகின்ற கல்பனு கௌரவம் சாங்கிய சித்தாந்தத்தில் ஏற்படுவதில்லை. ஆகையால் தான் நிரீசுவர சாங்கிய சித்தாந்த மென இதைக் கூறுகின்றனர்.

இத்தகைய சாங்கிய சித்தாந்தத்தைக் கபிலர் சூத்திரவடிவமாய் இயற்றித் தமது சிஷ்யரான ஆஸுரி என்பவருக்கு உபதேசித்தார். அவர் தமது சிஷ்யரான பஞ்சசிகருக்கு உபதேசித்தார். அங்கிருந்து சிஷ்ய பரம்பரையாய் கிடைத்த சாங்கிய சித்தாந்தத்தை ஈசுவரகிருஷ்ணர் என்ற மஹான் சுருக்கமாயும், தெளிவாயும் 72 சுலோகங்களில் எழுதி முடித்தார். இதற்குச்

சாங்கிய தத்துவகாரிகை என்றுபெயர். இதிலுள்ள "मूलप्रकृतिः" என்ற மூன்றாவது சுலோகத்தை ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்ய சுவாமிகளவர்கள் தமது சூத்திரபாஷ்யத்தில் மேற்கோளாக வெடுத்துக் காட்டியதிலிருந்து ஈசுவரகிருஷ்ணர் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் அவர்களுக்கு முந்தியிருந்தவ ரென்றும், சாங்கிய சித்தாந்தத்தை இவரது கிரந்தமூலம் அறி வதே அக்காலத்தில் வழக்கத்தில் இருந்ததென்றும் நன்கு புலப் படுகின்றது. மேலும் இக்காரிகைகளுக்கு "கௌட பாதர்" பாஷ்யம் செய்திருப்பதிலிருந்தும் இக்கிரந்தம் புராதனமான தென்று உறுதி செய்ய இடமிருக்கிறது. பின்னர் ஸர்வதந்திர சுவதந்திரரான வாசஸ்பதிமிச்ரர் என்றமகானும் இதற்கு விரி வான உரைசெய்து அருளியிருக்கிறார். அவ்வுரையே சாங்கிய தத்துவ கௌமுதீ எனப்படும்.

ஆகவே நம்தேயத்தில் மஹான்களால் இயற்றப்பட்ட சிறந்த ஆறுதர்சனங்களையும் ஒருவன் படித்து ஒன்றிற் கொன்றுள்ள மாறுதலை நன்கறிந்து முடிவான சித்தாந்தமான உபநிஷத்தின் மார்க்கப்படி வஸ்துவை அநுஸந்தானம் செய்து நன்மை பெறு வது அவசியமாகின்றமையின் அவ்விதம் நன்மையெய்துவதற்கு இன்றியமையாச் சாதனமான இந்நூல் வடமொழியில் இருப்ப தாலும், இதைப்படித்து சாங்கிய சித்தாந்தம் இன்னதென நிர்ணயமாய்த் தெரிந்த பின்னரே ஏனைய சித்தாந்திகளால் இத னிடத்துக் கூறப்படும் தோஷங்களை இன்னதெனத் தெரிந்து அவர்கள் கூறும் தோஷம் உண்மைதானென வேற்பட்டால் தோஷமான பாகங்களை விலக்கி குணமான வற்றைக் கைக் கொண்டு முடிவானதும்,தோஷமற்றதுவுமான உபநிஷத் சித்தாந் தத்தைப்படித்தறிந்து அதன்படி வஸ்துவையனுசந்தித்து க்ஷேம மடையவேண்டி இருப்பதாலும், அதற்குபகாரமாயிருக்குமெனக் கருதியே இதை நாம் தமிழில் மொழி பெயர்த் தெழுதினோம். ஆகவே நமது சிரமம் பயன்படுமாறு ஆர்யசிகாமணிகள் முன் வருவார்களென்று நம்புகிறோம். இங்ஙனம்,

கடலங்குடி, நடேச சாஸ்திரிகள்
ஆர்யமத ஸம்வர்த்தனீ பத்திராதிபர், சென்னை.

श्रीः

श्रीमते वासुदेवाय नमः

सर्वतन्त्रस्वतन्त्रश्रीवाचस्पतिमिश्रविरचिता

# सांख्यतत्वकौमुदी

प्रारभ्यते ।

अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीः प्रजाः सृजमानां नमामः ।
अजा ये तां जुषमाणा भजन्ते जहात्येनां भुक्तभोगां नुमस्तान् ॥ (१)

कपिलाय महामुनये मुनये शिष्याय तस्यचासुरये ।
पंचशिखाय तथेश्वरकृष्णायैते नमस्यामः ॥ (२)

## சாங்கியம்

### முன்னுரை

ஆஸ்திக தர்சனம் ஆறில் சாங்கிய தர்சனம் ஒன்று. இதனை ஏற்படுத்தியவர் கபிலவாஸுதேவர். இதன் முதல் நூற்களில் தற்காலம் சிறந்ததாய் விளங்குவது "ஈசுவர கிருஷ்ணர்" என்ற மஹானாலியற்றப்பெற்ற 72 சுலோகங்களே. இதற்கு எல்லாச் சாஸ்திரங்களிலும் வல்லுனரான "வாசஸ்பதிமிச்ரர்" என்ற மஹான் "சாங்கிய தத்வ கௌமுதீ" எனப்பெயர்பூண்ட ஒப்புயர்வற்ற வியாக்யானத்தை இயற்றியிருக்கிறார். நமது பெரியோர்களின் அபிப்ராயத்தை உள்ளபடி தெரிந்துகொள்வதற்கு அவர்கள் இயற்றிய நூற்களை நேராக மொழிபெயர்த்தலே சாதனமாதல்பற்றி சாங்கிய காரிகை (ஈசுவர கிருஷ்ணரால் செய்யப்பட்ட 72 சுலோகங்கள்) களைப் பெரும்பாலும் வாசஸ்பதி மிச்ரரின் வியாக்யானத்திற் கிணங்கவே மொழிபெயர்க்கிறோம்.

अवतारिका —इह खलु प्रतिपित्सितमर्थं प्रतिपादयन् प्रतिपादयिता अवधेयवचनो भवति प्रेक्षावताम्। अप्रतिपित्सितमर्थं तु प्रतिपादयन् 'नायं लौकिकः, नापि परीक्षक' इति प्रेक्षावद्भिरुन्मत्तवदुपेक्ष्येत । स चैषां प्रतिपित्सितोऽर्थो यो ज्ञातस्सन् परमपुरुषार्थाय कल्पते इति प्रारिप्सितशास्त्रविषयज्ञानस्य परमपुरुषार्थसाधनहेतुत्वात्तद्विषयजिज्ञासामवतारयति —

---

அவதாரிகை—உலகத்தில் அறிஞர் எக்கார்யத்தையும் செய்ய ஆரம்பிப்பதற்கு முன்னரே இதனைச் செய்வதால் யாது பயன்? செய்யாமலிருப்பதால் யாது பயன்? என்று நன்கு ஆராய்ந்து தெரிந்துகொள்ள விரும்புகின்றனர். அவ்வறிஞர் ஒருவனது உபதேச மொழிகளைக் கவனிக்கவேண்டுமாயின் அம்மொழிகள் அவர்களால் அறியவேண்டுமென விரும்பியபொருளை விளக்கக்கூடியனவாக இருக்கவேண்டும். அவ்விதமவர்களால் விரும்பப்படாத பொருளை எவன் உபதேசிக்கின்றானோ அவனை "இவன் உலகமறிந்த சமான்ய மனிதனுமல்லன், ஆராய்ச்சி செய்பவனுமல்லன், பித்தன்" என உபேக்ஷைசெய்து விடுவார்கள். எதை அறிந்தால் சிறந்த புருஷார்த்தமாகிய மோக்ஷம் என்பது சித்திக்குமோ அதுவே அறிஞரால் ஆவலுடன் அறியவேண்டுமென எதிர்பார்க்கப்படும் விஷயம். ஆதலால் இப்பொழுது ஆரம்பிக்கப்படுகின்ற இச்சாஸ்திரத்தை அறிஞர் ஏற்றுக்கொள்ள வேண்டுமாயின் சிறந்த புருஷார்த்தமாகிய மோக்ஷத்தையடைவதற்குச் சாதனமாயிருப்பதை உபதேசிப்பதாக இருக்கவேண்டும். அவ்விதமே இச்சாஸ்திரம் மோக்ஷ சாதனமாகிய பிரகிருதி புருஷ விவேக சாக்ஷாத்காரம் ஏற்படுவதற்குச் சாதனமான பிரகிருதி புருஷ விவேகக்ஞானத்தை உண்டுபண்ணுவதால் இச்சாஸ்திர விஷயத்தையும் அறிஞர்க்கு அறியவேண்டுமெனவிருப்பமுண்டாதல் பற்றி ஆரம்பிக்கப்படுவதாய்க் கூறுகிறார்.

मू० । दुःखत्रयाभिघाताज्जिज्ञासा तदपघातके हेतौ ।
दृष्टे साऽपार्था चेन्नैकान्तात्यन्ततोऽभावात् ॥ (१)

"दुःख" इति । एवं हि शास्त्रविषयो न जिज्ञास्येत, यदि दुःखं नाम जगति न स्यात्, सद्वा न जिहासितं, जिहासितं वा अशक्य समुच्छेदम्,

---

| | |
|---|---|
| दुःखत्रयाभिघातात् | ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என மூன்றுவிதத் துக்கங்களால் பீடிக்கப்படுவதால் (அவைகளை அனுபவிப்பதால்) |
| तदपघातके | அம்மூன்று துக்கங்களைப் போக்குகின்ற |
| हेतौ | சாதனத்தில் (சாதனத்தை) |
| जिज्ञासा | அறியவெண்ணம் |
| भवति | உண்டாகின்றது |
| दृष्टे | பிரத்யக்ஷாதிகளா லறியப்பட்ட உபாயமிருக்கும்பொழுது |
| सा | அந்த (சாதனத்தை யறியவேண்டுமென்ற) இச்சையானது |
| अपार्था | பயனற்றது |
| (इति) चेत् | என்று சொல்லுவோமாயின் |
| एकान्तात्यन्ततोऽभा-वात् | நிச்சயமாய் துக்க நிவிருத்தியுண்டாதல், போன துக்கம் திரும்பி வாராதிருத்தல் என்ற இவ்விரண்டு மில்லாததால் |
| न | வியர்த்தமென்று சொல்லமுடியாது. |

(தா-ம்)—உலகில் துக்கம் என்றபொருளே இல்லாவிடினும், அஃதிருந்தபோதிலும் அத்துக்கத்தை விலக்கிக்கொள்ள வேண்டுமென்ற விருப்பமில்லாவிடினும், அவ்விதம் விருப்பமிருப்பினும் அத்துக்கம் நமது முயச்சியால் விலக்கக் கூடாததாக விருப்பினும், நமது முயர்ச்சியால் விலக்கக்கூடியதாயினும் இச் சாஸ்திரத்தாலுபதேசிக்கப்படுகின்ற பிரகிருதி புருஷவிவேகக்ஞானம் அதற்குச் சாதனமாக இல்லாமலிருப்பினும், வேறு சுலபமான

शक्यसमुच्छेदत्वेऽपि च शास्त्रविषयस्य ज्ञानस्यानुपायभूतत्वाद्वा, सुकरस्योपायान्तरस्य सद्भावाद्वा ।

तत्र न तावद्दुःखं नास्ति नाप्याजिहासितमित्युक्तम्—" दुःखत्रयाभिघातादिति " । दुःखानां त्रयं दुःखत्रयम् । तत् खलु आध्यात्मिकं आधिभौतिकं आधिदैविकं च । तत्राध्यात्मिकं द्विविधम् । शारीरं मानसं च । शारीरं वातपित्तश्लेष्मणां वैषम्यनिमित्तम् । मानसं कामक्रोधलोभमोहभयेर्ष्याविषादविषयविशेषादर्शननिबन्धनम् । सर्वं चैतदान्तरिकोपायसाध्यत्वादाध्यात्मिकं

---

உபாயமிருப்பினும் இச்சாஸ்திர விஷயத்தை யறியவேண்டுமென விருப்ப முண்டாகாமலிருக்கலாம். மேற்சொல்லிய கக்ஷிகளில் "துக்கம் என்ற பொருளே உலகில் பிரசித்தமில்லை. அதை விலக்கிக்கொள்ள வேண்டுமென்ற விருப்பமும் கிடையா" என்ற கக்ஷிகள் ஒப்பத்தக்கவை யல்லவென்பது दुःखत्रयाभिघातात् என்றதால் சொல்லப்படுகிறது.

பொதுவாய்த் துக்கமென்பது ஆந்தரோபாய சாத்யம் (சரீரத்திலுள்ள கருவிகளாலேற்படக்கூடியது) என்றும் பாஹ்யோபாய சாத்யம் (சரீரத்திற்கு வெளியிலுள்ளவையால் உண்டாகக்கூடியது) என்றும் இருவகைப்படும். அதுவே வேறு பிரகாரத்தையனுசரித்து ஆதியாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என மூவகையாகவும் பிரிக்கப்படுகின்றது. அவைகளில் ஆதியாத்மிக துக்கம் சாரீரம், மானஸம் என்றிருவகைப்படும். வாதம், பித்தம், சிலேஷ்மம் என்று மூன்று விதமான தாதுக்களின் வைஷம்ய (அவை எவ்வெவ்வித மிருக்கவேண்டுமோ அவ்விதமில்லாதிருத்தல்) த்தால் உண்டாகக்கூடிய துக்கம் சாரீரமெனப்படும். காமம், குரோதம், லோபம், மோஹம், பயம், பொறாமை, விஷாதம், அனுபவிக்க வேண்டுமென விரும்பிய விஷயத்தை அனுபவிக்க முடியாதிருத்தல் இவை முதலியவற்றால் உண்டாகின்ற துக்கம் மானஸமெனப்படும்.

दुःखम् । बाह्योपायसाध्यं दुःखं द्वेधा, आधिभौतिकम्, आधिदैविकं च । तत्राधिभौतिकं मानुषपशुमृगपक्षिसरीसृपस्थावरनिमित्तम् । आधिदैविकं तु यक्षराक्षसविनायकग्रहाद्यावेशनिबन्धनम् । तदेतत्प्रत्यात्मवेदनीयं दुःखं रजःपरिणामभेदो न शक्यते प्रत्याख्यातुम् । तदनेन दुःखत्रयेणान्तःकरणवर्तिनाचेतनाशक्तेः प्रतिकूलवेदनीयतयाऽभिसंबंधोऽभिघात इति । एतावता प्रतिकूलवेदनीयत्वं जिहासाहेतुरुक्तः । यद्यपि न सन्निरुध्यते दुःखम् । तथापि तदभिभवः शक्यः कर्तुमित्युपरिष्टादुपपादयिष्यते । तस्मादुपपन्नं तदपघातके हेताविति ।

---

மனிதர், பசு, மிருகம், பக்ஷி, பாம்பு, அசையாப்பொருளாகிய மரம், கல் இவை முதலியவற்றால் உண்டாகின்ற துக்கம் ஆதிபௌதிகமெனப்படும். யக்ஷன், ராக்ஷஸன், விநாயகன் முதலிய துஷ்டக் கிரஹங்கள் இவைகளின் ஆவேச (பிடித்துக்கொள்ளுதல்)த்தால் உண்டாகின்ற துக்கம் ஆதிதைவிகமெனப்படும். ஒவ்வொரு ஜீவனுக்கும் அனுபவத்தில் வந்ததவையாயும், ரஜோ குணத்தின் பரிணாம (மாறுதல்) மாயும் இருக்கின்ற இம்மூன்றுவித துக்கங்களை இல்லையென்று மறுக்க எவராலுமியலாது.

அறிதற்குச் சாதனமாய் உள்ளிருக்கிற ஒரு கருவி அந்தக் கரணமெனப்படும். அதிலேயே சுகம் துக்கம் முதலியவை இருக்கின்றன. அத்துக்கத்தை விஷயமாக்கிக்கொண்டு இது பிரதிகூலம்; இதனை ஒழிக்கவேண்டும்; என உணர்ச்சியுண்டாகின்றது. அவ்வுணர்ச்சியுள்ள அந்தக்கரணம் கண்ணாடிபோலிருப்பதால் ஜீவன் அதில் பிரதிபலிக்கிறான். அழுக்கடைந்த கண்ணாடியில் பிரதிபலித்த முகமும் அழுக்குள்ளதாய்க் காணப்படுவது போல் அந்தக்கரணத்தில் பிரதிபலித்த ஜீவனும் துக்கமுள்ளவன் போலாகிறான். இதுவே இங்கு அபிகாதம் எனப்படுகிறது. இவ்விஷயம் பிறகு விரிவாய் வரையப்படும். இதுவரை சொன்னதிலிருந்து ஜீவனுக்கு மூன்றுவித துக்கானுபவமுண்டாகின்றது; அதனால் அவைகளை விலக்கிக்கொள்ள வேண்டுமென விருப்பமுண்டாகின்றது; பிறகு அவைகளை விலக்கிக்கொள்

तस्य दुःखत्रयस्यअपघातकः तदपघातकः। उपसर्जनस्यापि बुद्धया सान्निकृष्टस्य 'तदा' परामर्शः। अपघातकश्च हेतुश्शास्त्रप्रतिपाद्यो नान्य इत्याशयः।

अत्रशङ्कते—"दृष्टे सापार्थाचेत्" इति। अयमर्थः। अस्तु तर्हि दुःखत्रयम्, जिहासितं च तद्भवतु, भवतु च तच्छक्यहानम्, सहतां च शास्त्रगम्य उपायस्तदुच्छेत्तुम्। तथाप्यत्र प्रेक्षवतां जिज्ञासा न युक्ता, दृष्टस्यैवोपायस्य तदुच्छेदकस्य सुकरस्य विद्यमानत्वात्, तत्वज्ञानस्य तु

---

வதற்குச் சாதனம் யாது? என்று சாதனத்தையறிய விருப்ப முண்டாகின்றது; அச்சாதனமே இந்தச் சாஸ்திரத்தா லுப தேசிக்கப்படுகிறது; என்று கூறினதாய் அறியவேண்டும்.

சாங்கிய சித்தாந்தப்படி துக்கம் சத்தானது (நித்யமா னது) பற்றி அதனை அழிக்க முடியாதெனலாம். ஆயினும் அத்துக்கானுபவம் வராது தடை செய்யலாமென்பதைப்பின்னர் கூறுவாம். ஆகவே அத்துக்கங்களை விலக்கிக்கொள்வதற்கு இச்சாஸ்திரத்தா லுபதேசிக்கப்படுவது சாதனமாயிருப்பதால் இச்சாஸ்திர விஷயத்தை அறிஞர் அறிய விரும்புகின்றனர்.

சங்கை—दृष्टे सापार्थचेदिति முற்கூறிய மூன்றுவிதமான துக்கங்களும் உலகில் பிரசித்தமாக இருக்கட்டும்; அவற் றை விலக்கிக்கொள்ள வேண்டுமென்ற வெண்ணமுமிருக்கட்டும்; அவை புருஷப் பிரயத்தினத்தால் விலக்கக்கூடியதாகவு மிருக் கட்டும்; இச்சாஸ்திரத்தா லுபதேசிக்கப்படுகின்ற உபாயம் அவற்றை விலக்கக்கூடியதாகவு மிருக்கட்டும்; ஆயினும் அத்துக் கங்களை விலக்கக்கூடியதும், அனுபவமூலம் அறியக்கூடியதும், சுலபமாயனுஷ்டிக்கக் கூடியதுமான வேறு உபாயமிருப்பதால் அறிஞர் அதனை விடுத்துப் பல ஜன்மங்களி லப்யாசத்தால் ஏற் படக் கூடியதும், இச்சாஸ்திரத்தா லுபதேசிக்கப்படுவதுமான பிருகிருதி புருஷ விவேக ஸாக்ஷாத்காரம் என்ற உபாயத்தை யறிய விரும்பமாட்டார்கள். இவ்விதமே "காலடியிலேயே தேன்

अनेकजन्माभ्यासपरंपरायाससाध्यतयाऽतिदुष्करत्वात् । तथाच लौकिकाना माभाणकः—

अर्के चेन्मधु विन्देत किमर्थं पर्वतं व्रजेत् ।
इष्टस्यार्थस्य संसिद्धौ को विद्वान् यत्नमाचरेत् । इति

सन्तिचोपायाः शतशः शारीरदुःखप्रतीकारायेषत्करा भिषजां वरैरुपदिष्टाः । मानसस्यापि सन्तापस्य प्रतीकाराय मनोज्ञस्त्रीपानभोजनविलेपनवस्त्रालङ्कारादिविषयसप्राप्तिरूपायः सुकरः । एवमाधिभौतिकस्यापि दुःखस्य

---

கிடைக்குமாயின் எதற்காக மலைக்குச் செல்லவேண்டும். விரும்பிய பொருள் சுலமாய்க் கிடைக்குமேயாயின் எந்த அறிஞன் கஷ்டமான உபாயத்தில் முயர்ச்சி செய்வான்'' என்று லோகத்தில் பழமொழியுமிருக்கின்றது.

சாரீமான துக்கத்தை விலக்கிக்கொள்வதற்காகச் சிறந்த வைத்யர்களா லுபதேசிக்கப்பெற்றதும் சுலபமாய் அனுஷ்டிக்கக் கூடியதுமாகிய நூற்றுக்கணக்கான உபாயங்களிருக்கின்றன. மானஸமான துக்கத்தைத் தடுப்பதற்கும் மனத்திற்குப் பிடித்த மங்கை, பானம், போஜனம், சந்தனம், ஆடை, ஆபரணம் முதலிய விஷயங்களைச் சம்பாதித்து அனுபவித்தல் என்ற உபாயம் சுலபமாக அனுஷ்டிக்கக்கூடியதா யிருக்கின்றது. இவ்விதமே ஆதிபௌதிக துக்கத்தைத் தடுப்பதற்கும் நீதிசாஸ்திரத்தைக் கசடறக் கற்று அதன் படி நடத்தல், ஆபத்து நேரிடாத இடத்தில் வாசஞ்செய்தல் முதலிய சுலபமா யனுஷ்டிக்கக் கூடிய உபாயங்களிருக்கின்றன. ஆதிதைவிக துக்கத்தைத் தடுத்துக்கொள்வதற்கும் மணி, மந்திரம், மருந்து முதலியவற்றை உபயோகித்தல் என்ற சுலபமான உபாயமிருக்கின்றது. ஆதலால் பல ஜன்மங்களி லப்யாசத்தால் சித்திக்கவேண்டிய தத்வஞானம் என்ற உபாயத்தைக்காட்டிலும் சுலபமான மேற்கூறிய உபாயங்களிருப்பதால் அவைகளை விட்டு இச்சாஸ்திரத்

नीतिशास्त्राभ्यासकुशलता निरत्ययस्थानाध्यासनादिः प्रतीकारहेतुरीषत्करः। तथाधिदैविकस्यापि मणिमन्त्रौषधाद्युपयोगः सुकरः प्रतीकारोपाय इति ॥

निराकरोति "न" इति। कुतः? "एकान्तात्यन्ततोऽभावात्" एकान्तः=दुःखनिवृत्तेरवश्यं भावः। अत्यन्तः=निवृत्तस्य दुःखस्य पुनरनुत्पादः, तयोः एकान्तात्यन्तयोरभावः "एकान्तात्यन्ततोऽभावः"। षष्ठीस्थाने सार्व-विभक्तिकस्तसिः। एतदुक्तं भवति। यथाविधि रसायनादिकामिनीनीति-शास्त्राभ्यासमन्त्राद्युपयोगेऽपि तस्य तस्याध्यात्मिकादेर्दुःखस्य निवृत्तेरदर्शना-

---

தால் உபதேசிக்கப்படுகின்ற தத்வக்ஞான மென்ற உபாயத்தை அறிய அறிஞர் எங்ஙனம் விரும்புவர்?

உத்தரம்.—नैकान्तात्यन्ततोऽभावादिति। மேற் சொல்லிய உபாயங்களால் நிச்சயமாய் துக்கம் விலகி விடுமென்றுவது, அவ்விதமே விலகினபோதிலும் திரும்பவும் அவ்வித துக்கம் உண்டாகாதென்றுவது உறுதியாய் கூறமுடியாதாதலால் நீ சொல்லும் வாதத்தை அங்கீகரிக்க முடியாது. அதாவது—ரஸாயனம் முதலிய கல்பங்களைச் சேவித்தல் அழகிய மங்கை, பானம், போனம், சங்கீதம் முதலியவற்றை அனுபவித்தல், நீதி சாஸ்திரங்களைக்கற்று அதன்படி நடத்தல், மந்திரங்களைச்சித்தி பண்ணுதல் முதலிய உபாயங்களை அதனதன் முறையறிந்து அனுஷ்டித்தபோதிலும் சிலவிடங்களில் துக்கம் விலகாமலிருப்ப தை நாம் அனுபவத்தில் கண்டிருக்கிறோம். அவ்விதம் விலகாமலி ருப்பதற்கு வேறு காரணமிருப்பினும், மேற் சொல்லிய கார ணங்களால் விலகிய துக்கம் மறுபடியுமுண்டாகி விடுகின்றது. அவ்வித உபாயம் அனுஷ்டிப்பதற்குச் சுலபமாக இருப்பினும் அதனால் யாது பயன்? ஆகவே துக்கங்களை முற்றிலும், நிச்சய மாய்ப் போக்கக்கூடியதும், மறுபடியும் அவையுண்டாகாமலிருக் கும்படி அவைகளை தடுக்கக்கூடியதுமான உபாயத்தையே அறிஞர் அறியவிரும்புவார்களாதலாலும், அவ்வித உபாயமே இச்சாஸ்திரத்தால் போதிக்கப்படுவதாலும் இச்சாஸ்திர விஷ

ऱ्नैकान्तिकत्वम्, निवृत्तस्यापि पुनरुत्पत्तिदर्शनादनात्यन्तिकत्वम्, इति सुकरोऽपि ऐकान्तिकात्यन्तिकदुःखनिवृत्तेः न दृष्ट उपाय इति नापार्था जिज्ञासा। यद्यपि दुःखममङ्गलम्, तथापि तत्परिहारार्थत्वेन तदपघातो मङ्गलमेवेति द्रष्टव्यम् ॥ (१)

---

अवतारिका—स्यादेतत्। माभूद्दृष्ट उपायः। वैदिकस्तु ज्योतिष्टोमादिस्संवत्सरपर्यन्तः कर्मकलापः तापत्रयम् अत्यन्तमेकान्तं च, अपनेष्यति। श्रुतिश्च "स्वर्गकामो यजेत" इति। स्वर्गश्च—

यन्न दुःखेन संभिन्नं न च ग्रस्तमनन्तरम्।
अभिलाषोपनीतं च तत्सुखं स्वः पदास्पदम् ॥ इति। (तन्त्रवार्तिकम्)

---

*யத்தை அறிய விரும்புவது பொருந்தும். அவ்விதம் அறிஞர் அறிய விரும்புவதாலேயே இச்சாஸ்திரம் ஆரம்பிக்கப் படுகின்றது. (எ-று)*

---

இரண்டாவது சுலோகம்

*(அ-கை).—முன் சொல்லிய திருஷ்டமான உபாயங்கள் மேற்கூறிய துக்க நிவிருத்திக்குச் சாதனமாகாவிடினும் வேதத்திற் சொல்லிய கர்மங்கள் சாதனமாகலாம். வேதத்தில் 'ஸோமம்' என்ற கொடியைப்பிழிந்து ஹோமம் செய்யவேண்டிய பல கர்மங்களுபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அவை ஏகாஹம் (ஸோம ரசத்தை ஒருதினத்தில் மாத்திரம் ஹோமம் செய்வது) முதல் ஸம்வத்ஸரம் (வருஷக்கணக்காய் ஸோமரஸத்தை ஹோமம்செய்வது) என்ற கர்மம்வரை, பலவிதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. மற்றும் இஷ்டி என்றும், பசு (பிராணியைத் திரவியமாகக் கொண்டு செய்யவேண்டிய கர்மம்) என்றும் பலவித கர்மங்களிருக்கின்றன. வேதம், சுவர்க்கத்தில் விருப்புள்ளவன் இன்னின்ன கர்மங்களை யனுஷ்டிக்கவேண்டும்*

दुःखविरोधी सुखविशेषश्च स्वर्गः। स च स्वशक्त्या समूलघातमपहन्ति दुःखम्। न चैष त्रयी। तथाहि श्रूयते—"अपाम सोममऽमृता अभूम" इति (अथर्वशिरसि ३)। तत्क्षये कुतोऽस्यामृतत्वसंभवः? तस्माद्वैदिकस्योपायस्य तापत्रयप्रतीकारहेतोर्मुहूर्तयामाहोरात्रमाससंवत्सरनिर्वर्तनीयस्य अनेक

---

என உபதேசிக்கின்றது. துக்க சம்பந்தமற்ற சுகமே சுவர்க்கமெனப்படும். அவ்வித சுகம் ஏற்பட்டுவிடுமாயின் தானாகவே துக்கங்கள் யாவும் நிச்சயமாய் விலகிவிடும். மறுபடியும் அவை உண்டாகவும் மாட்டா.

சங்கை—ஒருவன் ஒரு ஒப்பந்தத்தின்பேரில் ஒரு வருஷ வாடகையைச் செலுத்திப் பிறர் வீட்டில் வசித்துக்கொண்டு சுகத்தையனுபவித்து வருகிறான் என்று வைத்துக்கொள்வோம். அவன் எவ்விதம் ஒரு வருஷம் என்ற குறிப்பிட்ட காலம் சென்றவுடன் அச்சுகத்தை யிழக்கவேண்டியவனா யாகின்றானோ, அவ்விதமே கர்மாவாகிற வாடகையினால் சம்பாதிக்கக்கூடிய சுவர்க்க சுகத்திற்கும் ஒரு கால வரையறை ஏற்பட்டிருப்பதால் செய்யப்பட்ட கர்மத்திற்கிணங்கத் தேவர்களா லனுமதிக்கப்பட்ட காலம் எவ்வளவோ அவ்வளவு முடிந்தவுடன் அச்சுகத்தை இழந்து மறுபடியும் முற்கூறிய மூன்றுவித துக்கங்களையே யனுபவிக்கவேண்டி நேருகின்றது. ஆகலால் மறுபடியும் துக்கமுண்டாகாம லிருக்கும்படித் தடுத்துகொள்வதற்குக் கர்மங்கள் எவ்விதம் சாதனமாகும்?

உத்தரம்—சுவர்க்கம் என்பது அழிவுள்ளதென்றோ அழிவற்றதென்றோ நமது அனுபவத்தால் கண்டுகொள்ள முடியாததலால் சாஸ்திரங்கள் வாயிலாகவே அதன் சுவரூபத்தை யறிந்துகொள்ள வேண்டியவர்களா யிருக்கிறோம். எந்தச் சாஸ்திரம், சுவர்க்கத்தில் விருப்பமுள்ளவன் இக்கர்மத்தைச் செய்ய வேண்டுமென உபதேசம் செய்ததோ அந்தச் சாஸ்திரமே 'சோம ரசத்தைப் பானம் செய்தோம், அமிருதர் (முக்தர்)

जन्मपरंपरायाससंपादनीयाद्विवेकज्ञानादीषत्करत्वात्पुनरपि व्यर्था जिज्ञासा इत्याशंक्याह—

मू०॥ दृष्टवदानुश्रविकः स ह्यविशुद्धिक्षयातिशययुक्तः ।
तद्विपरीतः श्रेयान् व्यक्ताव्यक்तज्ञविज्ञानात् ॥ २ ॥

---

களாயாகிவிட்டோம்'' என்று வேறிடத்தில் கூறுகின்றது. இத னல் ஸோமயாகத்தா லுண்டாகின்ற சுவர்க்க சுகம் நித்யமான தென்று அறியப்படுகின்றது. அது நித்யமாக இல்லாவிடில் சோமபானம் செய்தவர்களுக்கு 'அமிருதத்வம்' என்ற மூன்று வித துக்கமற்ற மோக்ஷம் சித்திப்பதாய்க் கூறுவது எங்ஙனம் பொருந்தும்? ஆதலால், வைதிக கர்மங்களை யனுஷ்டிப்பதால் ஆத்யந்திக (போனதுக்கம் திரும்பவும் உண்டாகாமலிருக்கும் படி) மாய் துக்க நிவிருத்தி ஏற்படலாம். ஆகவே ஒரு முகூர் த்தம், ஒரு யாமம், ஒரு பகல் இரவு, ஒரு மாதம், அல்லது ஒரு வருஷம் என்ற காலத்தால் செய்து முடிக்கக்கூடியதும், ஆனது பற்றியே பல ஜன்மங்களி லப்யாசத்தால் சித்திக்க வேண்டிய 'தத்வக்ஞானம்' என்ற இச்சாஸ்திரத்தா லுபதேசிக்கப்படுகின்ற உபாயத்தைக் காட்டிலும் எளிதானதுமான 'வைதிக கர்மங்கள்' என்ற உபாயமிருப்பதால் அவைகளை விடுத்து மிகவும் கடின மான இச்சாஸ்திர விஷயத்தை எவ்விதம் அறிஞர் அறிய விரும் புவர் என்ற சங்கைக்குப் பதில் கூறுகிறார்.

आनुश्रविकः — வேத மூலம் அறியப்படுகின்ற ஜ்யோதிஷ் டோமம் முதலிய கர்ம ஸமூஹம்
दृष्टवत् — திருஷ்டமான உபாயத்திற் கொப்பானதே
(कुतः?) — (ஏனென்றால்)
सः — அந்த வைதிக கர்ம ஸமூஹம்
अविशुद्धिक्षयातिशययुक्तः
अविशुद्धि — ஆடு, விதை இவைகளை ஹிம்ஸிப்பதாலுண் டாகக்கூடிய பாபம்

दृष्ट इति। गुरुपाठादनुश्रूयत इत्यनुश्रवो वेदः। एतदुक्तं भवति—श्रूयते एव परं, न केनापि क्रियत इति। तत्र भव आनुश्रविकः, तत्र प्राप्तो ज्ञात इति यावत्। आनुश्रविकोऽपि कर्मकलापो दृष्टेन तुल्यो वर्तते। ऐकान्तिकाऽऽ

---

| | |
|---|---|
| क्षय= | அழிவு |
| अतिशय= | உயர்வு (தாழ்வு) இவைகளுடன் |
| युक्तः | கூடியிருக்கின்றது. |
| व्यक्ताव्यक्तज्ञविज्ञानात् | வியக்தம் (காரியம்) அவ்யக்தம் (காரணம்) க்ஞன் (ஜீவன்) இவர்களைப் பகுத்தறிவதால் உண்டாகின்ற தத்வக்ஞானம் என்ற உபாயம் |
| तद्विपरीतः | வைதிக கர்மத்திற் கெதிரடையாயும், (நிச்சயமாயும், மறுபடியும் துக்கமுண்டாகாமலிருக்கும்படியும் துக்கநிவிருத்தி ஏற்படுவதற்குச் சாதனமாயும்) |
| श्रेयान् | ஆனதுபற்றியே சிறந்ததாயு மிருக்கின்றது. |

(தா-ம்) வேதத்திற்கு "அனுச்ரவம்" என்று பெயர். அஃது அநாதிகாலம் தொடங்கி குரு சிஷ்ய பரம்பரையாய் கேள்வியிலேயே வந்துகொண்டிருக்கின்றதே யன்றி ஒருவராலும் செய்யப்பட்டதல்ல. ஆனது பற்றியே இப்பெயர் வேதத்திற் கேற்பட்டது. "அவ்வித வேதங்களா லுபதேசிக்கப் படுகின்ற உபாயங்கள் திருஷ்டமான உபாயத்திற் கொப்பானவை" என்று பொதுவாய்ச் சொல்லப்படுகின்றதாயினும் "ஆத்மாவை அறியவேண்டும், அதாவது பிரகிருதியினின்றும் பகுத்து அறியவேண்டும்; அவ்விதமறிந்தவன் திரும்பவும் அதனோடு சேருவதில்லை" என்று பிருஹதாரண்யகம் முதலிய உபநிடதங்களா லுபதேசிக்கப்படுகின்ற தத்வக்ஞானம் என்ற உபாயம் வேதத்தாலறியப் படுவதாயினும்; அஃது நிச்சயமாயும், மறுபடியும் உண்டாகாமலிருக்கும்படியும் துக்கநிவிருத்தியை யடைவதற்குச் சா

त्यन्तिकदुःखप्रतीकारानुपायत्वस्योभयत्रापि तुल्यत्वात्। यद्यपि च 'आनुश्रविक' इति सामान्याभिधानं, तथापि कर्मकलापाभिप्रायं द्रष्टव्यम्। विवेकज्ञानस्याप्यानुश्रविकत्वात्। तथा च श्रूयते—"आत्मावारे द्रष्टव्य प्रकृतितो विवेक्तव्यः" इति (बृहदारण्यक १-४-५) "न स पुनरावर्तते न स पुनरावर्तते (छान्दोग्य ८-१५.) इति ॥

अस्यां प्रतिज्ञायां हेतुमाह—"स ह्यविशुद्धिक्षयातिशययुक्तः" इति। अविशुद्धिः=सोमादियागस्य पशुबीजादिवधसाधनता। यथाह स्म भगवान् पञ्चशिखाचार्यः—"स्वल्पसङ्करः सपरिहारः सप्रत्यवमर्षः" इति स्वल्पसङ्करः=ज्योतिष्टोमादिजन्मनः प्रधानापूर्वस्य स्वल्पेन पशुहिंसादिजन्मनाऽनर्थहेतुनाऽपूर्वेण सङ्करः। सपरिहारः=कियतापि प्रायश्चित्तेन परिह

---

தனமாதல்பற்றி அதனை விடுத்து வைதிக கர்மங்கள் மாத்திரமே "ஆனுச்ரவிக" என்ற பதத்தால் சொல்லப்பட்டதாக அறியவேண்டும். அவ்வைதிக கர்மம் என்ற உபாயமும் முற்கூறிய திருஷ்டோபாயத்திற் கொப்பாகவே இருக்கின்றது: அதாவது நிசயமாயும், முற்றிலும் துக்கநிவிருத்தியை யடைவதற்குச் சாதனமாக மட்டாது.

ஏனென்றால், அதற்கு மூன்று காரணங்கள் கூறுவாப் அவைகளில் அவிசுத்தி (பிராணி ஹிம்ஸைக்குச் சாதனமாயிருதல்) என்பது முதற்காரணமாகும். சோமயாகத்தை முறைப்பட அங்கங்களுடன் ஒருவன் செய்து முடிக்கவேண்டுமாயின் ப (ஆடு) ஹிம்சையை அவசியமாய்ச் செய்யும்படி நேருகிறது இஷ்டிகளைச் செய்வதாக இருந்தாலும் நெல் முதலியவற்றை குற்றுதல் மூலம் அவைகட்கு ஹிம்ஸையை விளைவிக்க வேண டியவனாகின்றான். செடி கொடிகளைப் போல முளைக்கக்கூடி விதைகட்கும் உயிரிருக்கின்றதென்பது மேதாவிகளின் கொள்கை. இவ்விதமே 'பஞ்சசிகாசாரியர்' என்பவரும் "சோமயா

शक्यः । अथ च प्रमादतः प्रायश्चित्तमपि नाचरितं, प्रधानकर्मविपाकसमये स पच्यते । तथापि यावदसावनर्थं सूते तावत् प्रत्यवमर्षेण (सहिष्णुतया) सह वर्तत इति "सप्रत्यवमर्षः", मृष्यन्ते हि पुण्यसंभारोपनीतस्वर्गसुधामहाह्रदावगाहिनः कुशलाः पापमात्रोपसादितां दुःखवन्हिकणिकाम् ॥

न च "माहिंस्यात्सर्वा भूतानि" इति सामान्यशास्त्रं, विशेषशास्त्रेण "अग्नीषोमीयं पशुमालभेत" इत्यनेन बाध्यत इति युक्तम् । विरोधाभावात्, विरोधे हि, बलीयसा दुर்बलो बाध्यते । न चेहास्ति कश्चिद्विरोधः, भिन्नविषय-

---

*புள்ளது. அப்பாபத்தைப் பிராயச்சித்தங்கள் வாயிலாகப் போக்கிக்கொண்டு விடலாம். சோம்பலால் பிராயச்சித்தம் (பாபத்தைப் போக்கிக் கொள்வதற்காகச் செய்யவேண்டிய வைதிக கர்மம்) செய்துகொள்ளாம விருப்பானேயாகில் சோமயாகத்தின் பலனுகிய சுவர்க்க சுகத்தை யனுபவிக்கும்பொழுது அப்பாப பலமான சொற்பதுக்கத்தையு மனுபவிக்கும்படி நேரிடும். அதிக புண்யத்தாலுண்டான சுவர்க்க சுகமாகிற அமுத மடுவில் முழுகியவர்களால் சொற்ப பாபத்தாலுண்டாகின்ற துக்கமாகிற நெருப்புப் பொரி சகிக்கக்கூடியதே" என்று சொல்லியிருக்கிறார்.*

*சங்கை—பல அரசாங்க அதிகார ஸ்தலங்களின் வாயிற்படிகளில் "உள்ளே வரக்கூடாது" என்று பலகைகளில் எழுதித் தொங்கவிடப் பட்டிருக்கின்றன. அம்மறுப்பு விதி உள்ளே வருவதற்கு அனுமதிக்கப்படாதவர்களின் வரவைத் தடுக்கின்றதே யல்லாது அனுமதிபெற்று அங்கு வேலை பார்க்கின்ற சேவகர் முதலியவர்களின் பிரவேசத்தைத் தடுப்பதில்லை. அனுமதியற்றவர்கள் பிரவேசித்தாலே சிக்ஷைக்குள்ளாவர். டிக்கட் வாங்காமல் ரயில் வண்டியில் ஏறக்கூடாதென்று மறுப்பு விதி இருக்கின்றது. அஃது டிக்கட் வாங்காமலும் வண்டியில் ஏறலாமென்று அனுமதிபெற்ற ரயில்வே அதிகாரிகளிடம் பிரவிருத்திப்பதில்லை இவ்வுதாஹரணங்களிலிருந்து 'மறுப்பு விதிக*

त्वात्। तथाहि "मा हिंस्यात्" इति निषेधेन हिंसाया अनर्थहेतुभावो ज्ञाप्यते, नत्वक्रत्वर्थत्वमपि। अग्नीषोमीयं पशुमालभेत" इत्यनेन वाक्येन च पशुहिंसायाः क्रत्वर्थत्वमुच्यते नानर्थहेतुत्वाभावः। तथासति वाक्यभेदप्रस-

---

ளெல்லாம் "இதனைச்செய்யவேண்டும்" என்று விதிக்கப்பட்டஸ்தலத்திற் செல்லுவதில்லை; மற்றவிடங்களிலேயே பிரவிருத்திக்கின்றன' என்பது அறியப்படுகின்றது. ஆகவே பிரகிருத ஸ்தலத்திலும் "எந்தப் பிராணியையும் ஹிம்ஸிக்கக் கூடாது" என்று எந்தச் சாஸ்திரத்தில் பொதுவாய் உபதேசிக்கப்பட்டதோ அந்தச் சாஸ்திரத்திலேயே ஜ்யோதிஷ்டோமம் என்ற கர்மாவிற்கங்கமான பசுயாகத்தில் பிராணிஹிம்ஸையைச் செய்யவேண்டுமென்று விசேஷமாய் விதித்திருப்பதுபற்றி அதனைச் செய்வதால் யாது தோஷம்?

உத்தரம்—எந்த விடத்தில், 'செய்யக்கூடாது' என்றபொதுவானவிலக்கு விதிக்கும் 'இதனை இவ்விடத்தில் செய்யவேண்டும்' என்ற விசேஷ விதிக்கும் விரோதமேற்படுகின்றதோ அவ்விடத்திலேயே சாமான்ய விதியானது விசேஷ விதியால் பாதிக்கப்பட்டு விசேஷவிதியின் பிரவிருத்தியற்ற ஸ்தலங்களில் செல்லுவதா யங்கீகரிக்கிறோம். அஃதில்லாத ஸ்தலத்தில் அவ்விதமங்கீகரிப்பதில்லை. பொதுவிதி எந்தக்காரியத்தை எந்தப் பலத்திற்குச் சாதனமா யுபதேசிக்கின்றதோ அந்தக் காரியத்தையே விசேஷவிதி அந்தப் பலத்திற்குச் சாதனமாகாதென்று உபதேசிக்குமாயின் பொதுவிதிக்கும் விசேஷவிதிக்கும் விரோதம் சம்பவிக்கும். பிரகிருதஸ்தலத்தில் பசு (ஆடு) ஹிம்ஸையால் பாபமுண்டாகும் என்று சாமான்யசாஸ்திரமாகிற "பிராணியை ஹிம்ஸிக்கக்கூடாது" என்ற மறுப்புவிதி உபதேசிக்கின்றது. "பசுவைக்கொன்று ஹிருதயம்முதலிய அவயவங்களை எடுத்து ஹோமஞ்செய்யவேண்டும்" என்ற விசேஷவிதியானது 'பசு ஹிம்ஸை யாக சாதனம்' என்று உபதேசிக்கின்றது. அதனால் பாபமுண்டாகாதென்பதை அவ்விசேஷ விதி உபதேசிக்கவில்லை. அவ்வித

ज्ञात् । नचानर्थहेतुत्वक्रतूपकारकत्वयोः कश्चिद्विरोधोऽस्ति । हिंसा हि पुरुषस्य दोषमावक्ष्यति, क्रतोश्चोपकरिष्यतीति ॥

क्षयातिशयौच फलगतावप्युपाये उपचरितौ । क्षयित्वं च स्वर्गादेः

மங்கீகரிப்போமேயாகில் வாக்யபேதம்* என்ற தோஷம் சம்பவிக்கும். ஆகவே இங்கு இவ்விரு விதிகளும் வெவ்வேறு விஷயங்களைப் பிரதானமாய்க் கைக்கொண்டு உபதேசிக்க ஆரம்பித்திருப்பதால் அவைகட்கு விரோதமே இல்லை. பசுஹிம்ஸை என்ற ஒரே கார்யம் யாக சாதனமாயிருப்பதுபற்றி இஷ்ட சாதனமாயும், பாபமுண்டாதல் பற்றி அநிஷ்ட சாதனமாயுமிருக்குமா? எனின், இருக்கலாம். விஷங்கலந்த சர்க்கரான்னத்தை மிகுந்த பசியுள்ள ஒருவன் உட்கொள்வானேயாகில் அதனால் பசியடங்குகிறது. ஆனதுபற்றி அது இஷ்ட சாதனமே. அதனால் பிறகு பல கஷ்டங்களையு மனுபவிக்கிறான். அதனால் அஃது அநிஷ்ட சாதனமுமாகும் ஆதலால் யாகத்திற் செய்யப்படுகின்ற பசு ஹிம்ஸையால் பாபமவசியம் உண்டாகியே தீரும். இதுவரை அவிசுத்தி என்பது நிரூபிக்கப்பட்டது.

இரண்டாவது காரணம், ஒரு காலவரையறையுடன் கூடிய பலத்திற்குச் சாதனமாயிருத்தல்: அதாவது ஸோம யாகத்தைச் செய்தவன் இவ்வளவு காலந்தான் சுவர்க்க சுகத்தை யனுபவிக்கலாமென்று ஒரு காலவரையறை ஏற்பட்டிருப்பதால் குறிப்பிட்

* முக்யமாய் ஒன்றை உத்யேச்யமாயும் ஒன்றை விதேயமாயுமுள்ளதே ஒரு வாக்ய மெனப்படும். எந்த இடத்தில் அநேகம், உத்யேச்யமாகவோ அநேகம், விதேயமாகவோ கொள்ளப்படுகிறதோ அவ்விடத்தில் ஒரு வாக்யத்தையே பல வாக்யமாகக் கல்பித்துக்கொள்ளவேண்டி நேரிடும். அவ்விதம் கல்பிக்கப்பட்ட வாக்யங்கள் நமது அபிப்ராயத்தையனுசரித்துக் கற்பிதமானதால் மூலவாக்யங்களுக்குப்போல் அவ் வாக்யங்களுக்கும் பிராமாண்யம் ஏற்படாது. ஆதலால் வாக்யபேதம் பெரும் தோஷமென்று பூர்வமீமாம்ஸையில் விரிவாய் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது.

सत्वे सति कार्यत्वादनुमितम्। ज्योतिष्टोमादयः स्वर्गमात्रस्य साधनम्, वाजपेयादयस्तु स्वाराज्यस्येत्यतिशययुक्तत्वम्। परसंपदुत्कर्षो हि हीनसंपदं पुरुषं दुःखाकरोति ॥

"अपाम सोमममृता अभूम" इति च अमृतत्वाभिधानं चिरस्थेमानमुपलक्षयति । यदाहुः—"आभूतसंप्लवं स्थानममृतत्वं हि भाष्यते" इति ॥

अतएव च श्रुतिः—"न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः। परेण नाकं निहितं गुहायां बिभ्राजते यद्यतयो विशन्ति" इति (महानारायण-१०-५.)

---

டகாலம் முடிந்தவுடன், அச்சுகத்தை யிழந்து மறுபடியும் முற்கூறிய மூன்றுவிதமான துக்கங்களையே அநுபவிக்கும்படி நேருகிறது. சுவர்க்க சுகத்திற்குக் காலவரையறை இருப்பதாய் எவ்விதமறியப்படுகின்ற தென்றால் சத்தாயும், உண்டாகக்கூடியதாயுமிருப்பதுபற்றியே அவ்விதமறியப்படுகின்றது. உலகில் எவைஎவை சத்தாயும், உண்டாகக்கூடியதாயு மிருக்கின்றனவோ அவையவை யெல்லாம் ஒருகாலவரையறையுள்ளதாகவே காணப்படுகின்றன. சுவர்க்க சுகம் நித்யமென்று சுருதியேகூறுவதாய் முன்னரே இதற்குச் சமாதானம் கூறியிருக்கிறோமே எனின் அஃது ஏற்ற சமாதானம் அன்றென்பதை நிரூபிப்பாம். சோமயாகத்தினும் எளிதான கர்மங்களாலுண்டாகின்ற சுவர்க்க சுகத்தைக்காட்டிலும் சோமயாகத்தினாலுண்டாகின்ற சுவர்க்கசுகமதிக காலமிருக்குமாதலால் **अपामसोमममृता** என்ற மந்திரத்தில் "சோமபானம் செய்தோம், அமிருதர்களாயாகி விட்டோம்" என்று சொல்லப்பட்டது. "அமிருத" என்றபதத்திற்கு இவ்விடத்தில் சிறந்த புருஷார்த்தமான முக்தியைப் பெற்றவர் என்று பொருள்கொள்ளக் கூடாது. இவ்விதமே "பூதங்களெல்லாம் பிரளயமடையும்வரை சுவர்க்கத்தில் வசிப்பதே அமிருதத்வம்" என்று விஷ்ணுபுராணத்தில் உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

तथा "कर्मणा मृत्युमृषयो निषेदुः प्रजावन्तो द्रविणमीहमानाः । तथा परे ऋषयो ये मनीषिणः परं कर्मभ्योऽमृतत्वमानशुः" इति च ॥ तदेतत्सर्वमभिप्रेत्याह—"तद्विपरीतः श्रेयान् व्यक्ताव्यक्तज्ञविज्ञानात्" इति । तस्मात् (आनुश्रविकात् दुःखापघातकोपायात् सोमपानादेरविशुद्धात् अनित्यसातिशयफलात्) विपरीतः=विशुद्धः हिंसादिसङ्कराभावात्, नित्य-

---

மஹாநாராயணம் என்ற உபநிடதத்தில் கர்மங்களால் முக்தி ஏற்படாதென்று தெளிவாய் பின்வருமாறு உபதேசிக்கப் பட்டிருக்கிறது. "மேலான சுகவடிவமாய் ஹிருதயாகாசத்தில், பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற ஆத்மவஸ்துவை சன்யாஸிகள் அடைகின்றனர். யக்ஞம், தானம்முதலிய கர்மங்களாலும், பிள்ளைகளாலும், பணத்தினாலும் அஃதடையக்கூடியதல்ல. இவைகளைத் துறப்பதாலேயே சில உத்தமாதிகாரிகள் அவ்வாத்ம வஸ்துவை அடைந்திருக்கின்றனர்." வேறு உபநிடதத்திலும் கர்மங்களால் பந்தம்தொலையாது; அவைகளால் அப்பந்தம் மேன்மேலும் விருத்தியடைந்து கொண்டே இருக்கும் என்று பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

"பிள்ளைகளையுடையவர்களும், பணத்தில் விருப்ப முள்ளவர்களுமானருஷிகள் கர்மங்களை அநுஷ்டிப்பதால் ஜனனமரண ரூபமான சம்சாரத்தை அடைந்தனர். மனதைத்தன்வசமாக்கினவர்களும் கர்மங்களைவிட்டொழித்தவர்களுமான மற்றருஷிகள் கர்மங்களால் கிடைக்கக்கூடாத முக்தியை யடைந்தனர்."

இவைகளிலிருந்தும் **अपामसोममममृता अभूम** என்ற மந்திரத்திலிருக்கிற "அம்ருத" என்றபதத்திற்கு முற்கூறிப்படியே பொருள் கொள்ளவேண்டு மென்பது வெளியாகின்றது. ஆகவே கர்மங்கள் காலவரையறையுடன் கூடிய பலத்திற்கே சாதனமாமென்றதென்று இதுவரை நிரூபித்ததை எவரும் மறுக்கமுடியாது.

மூன்றாவது காரணம் அதிசயம்: அதாவது உயர்வுதாழ்வு நிலையுள்ள பலத்திற்குச் சாதனமாயிருத்தல். இந்தக்கர்மத்தை

निरतिशयफलः, असकृदपुनरावृत्तिश्रुतेः। न च कार्यत्वेनानित्यता फलस्य युक्ता, भावरूपस्य कार्यस्य तथाभावात्, दुःखप्रध्वंसनस्य तु कार्यस्यापि

---

அநுஷ்டித்தவன் இந்தப்பலனை அடையலாம் என்று அளவு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஜ்யோதிஷ்டோமம் என்றகர்மத்தை அநுஷ்டித்தவன் சாதாரணமாய் சுவர்க்கத்தில் வசிக்கலாம். 100 அச்வமேதம் செய்தவன் சுவர்க்கத்தில் வசிப்பவர்களுக்கெல்லாம் யஜமானனாகலாம். வாஜபேயம் என்ற கர்மத்தைச் செய்தவன் ஸ்வாராஜ்யத்தை (தன்னைப்போன்றவர்களுக்கெல்லாம் தலைவன் பதவியை)ப்பெறலாம். இவ்விதம் கர்ம பலன்களில் எண்ணிறந்த வேற்றுமைகள் இருக்கின்றன. கீழ் நிலையிலுள்ளவன் மேற்பதவியிலிருப்பவனைக்கண்டு அசூயை துக்கம் இவைகளையடைவதை நாம்லோகாநுபவத்தில் கண்டிருக்கிறோம். அவ்விதமே சுவர்க்கத்திலிருப்பவர்களுக்கும் தன்னினும் அதிகசுகத்தை மற்றவர் அநுபவிப்பதைப் பார்த்து துக்கமுண்டாகலாம். ஆதலால் இவ்வுலகில் இருப்பவர்க்கு எவ்விதம் துக்கநிவிருத்தி யுண்டாவதில்லையோ அவ்விதமே சுவர்க்கலோகம் சென்றவர்க்கும் துக்கம் தொலைவதில்லை. ஆகவே மேற் கூறிய மூன்று காரணங்களால் கர்மங்கள் வாயிலாக ஆத்யந்திகதுக்கநிவிருத்தி உண்டாவதில்லையென்பது அறியப்படுகின்றது.

ஆத்யந்திகதுக்க நிவிருத்திக்குச்சாதனமாயிருப்பது சத்வம் (பிரகிருதி) புருஷன்(ஜீவன்) இவர்களைவேறாக அறிவதே. அந்தத் தத்வக்ஞானம் என்ற உபாயத்தில் பிராணிஹிம்சை முதலியவற்றாலுண்டாகின்ற பாபசம்பந்தம் கிடையாது. नच पुनरावर्तते, नच पुनरावर्तते (மறுபடியும் சம்சாரத்திற்குத் திரும்புவதில்லை. மறுபடியும் சம்சாரத்திற்குத் திரும்புவதில்லை) என்று அடிக்கடி உபநிடதங்கள் கூறுவதால் தத்வக்ஞானத்தின் பயனாகிய மோக்ஷத்திற்குக் காலவரையறையும் கிடையாது. அதில் உயர்வு தாழ்வும் இல்லை.

तद्वैपरीत्यात्। न च दुःखान्तरोत्पादः, कारणाप्रवृत्तौ कार्यस्यानुत्पादात्, विवेकज्ञानोपजननपर्यन्तत्वाच्च कारणप्रवृत्तेः। एतच्चोपरिष्टादुपपादयिष्यते।

अक्षरार्थस्तु—तस्मात (आनुश्रविकात् दुःखापघातकात् हेतोः) विपरीतः (सत्वपुरुषान्यताप्रत्ययः साक्षात्कारः) दुःखापघातको हेतुः, अत एव श्रेयान्। आनुश्रविको हि वेदविहितत्वात् मात्रया दुःखापघातकत्वाच्च प्रशस्यः। सत्वपुरुषान्यताप्रत्ययोऽपि प्रशस्यः। तदनयोः प्रशस्ययोर्मध्ये सत्वपुरुषान्यता प्रत्ययः श्रेयान् ॥

---

சங்கை—தத்வக்ஞானம் என்ற உபாயத்தாலுண்டாகின்ற மூன்றுவிததுக்க நிவிருத்திரூபமான மோக்ஷம் என்ற பலனும் அநித்தியமாக (காலவரையறையுள்ளதாக) ஏன் இருக்கக்கூடாது? உண்டாகின்ற பொருள்களெல்லாம் காலவரையறையுள்ளதாகவே இருக்கும் என்பதை முன்னரே ஸ்தாபித்திருக்கிறோமே, எனின் :

உத்தரம்—உண்டாகின்றவை யெல்லாம் அநித்தியம், என்று நியமம் கட்டக்கூடாது. ஏனென்றால், அழிவு என்பது உண்டாகின்றதாயினும் அதற்கு அழிவு ஏற்படுகிறதில்லை. ஆதலால் எந்தவஸ்து சத்தாயும் உண்டானதாயும் இருக்கின்றதோ அவ்வஸ்துவுக்கே நாசம் என்பது உண்டாகும். துக்கத்தின் அழிவுஎன்பது உண்டாகின்றதாயினும் சத்வஸ்துவல்ல. அசத்வஸ்து.* ஆதலால் அஃதுஉண்டாகின்றதாயினும் அழிவை அடைவதில்லை.

சங்கை—தத்துவக்ஞானத்தினால் எந்தத்துக்கம் அழிவடைந்ததோ அத்துக்கமே மறுபடியும் உண்டாகாதாயினும் வேறு துக்கம் ஏன் உண்டாகக்கூடாது?

---

*"இல்லை" என்ற பதத்தின் பொருள் அசத்வஸ்து. மற்றவையெல்லாம் சத்வஸ்து. என்று அறியவும்.

कुतः पुनरस्योत्पत्तिरित्यत अह—"व्यक्ताव्यक्तज्ञविज्ञानात्" इति। व्यक्तश्च अव्यक्तश्च ज्ञश्च व्यक्ताव्यक्तज्ञाः, तेषां विज्ञानं=विवेकेन ज्ञानं, व्यक्ताव्यक्तज्ञविज्ञानम्, व्यक्तज्ञानपूर्वकमव्यक्तस्य तत्कारणस्य ज्ञानम्, तयोश्च पारार्थ्येनात्मा परो ज्ञायते, इति ज्ञानक्रमेणाभिधानम्। एतदुक्तं भवति—श्रुतिस्मृतीतिहासपुराणेभ्यो व्यक्तादीन् विवेकेन ज्ञात्वा, शास्त्रयुक्त्या च व्यवस्थाप्य, दीर्घकालादरनैरन्तर्यसत्कारसेवितात् भावनामयाद्विज्ञानादिति। तथाच वक्ष्यति—

---

*உத்தரம்—விவேகக்ஞானம் ஏற்பட்டபிறகு துக்கம் உண்டாவதற்கு வேண்டிய காரணம் சம்பவிப்பதில்லையாதலால் வேறு துக்கம் உண்டாவதில்லை. துக்கம் பிரகிருதியின் சேஷ்டையாலுண்டாகின்றது. அப்பிரகிருதி தனக்கும் புருஷனுக்கும் பேதக்ஞானம் ஏற்படும் வரையில்த்தான் தனது சாமர்த்தியத்தைக்காண்பிக்கின்றது. அதற்குப்பிறகு அதுவிலகிவிடுகிறது. இவ்விஷயம் பின்னர்விரிவாய் வரையப்படும். ஆகவே ஆத்யந்திகதுக்க நிவிருத்தி என்பது திருஷ்ட உபாயத்தினாலும், வைதிக கர்மங்களாலும் ஏற்படாதானதுபற்றி தத்வஞானத்தினாலேயே உண்டாகவேண்டியிருக்கிறது.*

*தத்வக்ஞானம் என்றால் என்னெ? அஃது எதனாலுண்டாகின்றது? என்றால் அதனைநிரூபிப்பாம். வேதம், ஸ்மிருதி, இதிஹாசம், புராணம் இவைகள் வாயிலாக முதலில் ஸ்தூலமான காரியம் சூக்ஷுமமான அதன் காரணம், இவ்விரண்டுகளிடத்துமுள்ள பாரார்த்யம் (புருஷனுடைய போகாவர்கத்திற்கு ஹேதுவாயிருத்தல்) என்ற தர்மத்தால் வேறாக அறியப்படுகின்ற புருஷன் இவைகளை நன்றாய் பகுத்தறிய வேண்டும். பிறகு இடை இடையே உண்டாகின்ற சந்தேஹங்களை சாங்கியம்முதலிய சாஸ்திரங்களிற் சொல்லப்படுகின்ற யுக்திகளால் வேதங்கள்வாயிலாக ஏற்பட்ட விவேகத்தை நிலைநாட்டிகொள்ளவேண்டும். பிறகு (வெருப்பின்றி) நீண்டகாலம் ஆதரவுடனும் (சிரத்தையுடனும்) தொடர்ச்சியாயும், ப்ரம்மசர்*

एवं तत्वाभ्यासान्नास्मि न मे नाहमित्यपरिशेषम् ।
अविपर्ययाद्विशुद्धं केवलमुत्पद्यते ज्ञानम् ॥

कारिका—६४ ॥ २



अवतारिका---तदेवं प्रेक्षावदपेक्षितार्थत्वेन शास्त्रारंभं समाधाय शास्
मारभमाणः श्रोतृबुद्धिसमवधानाय तदर्थं संक्षेपतः प्रतिजानीते—

मू० । मूलप्रकृतिरविकृतिर्महदाद्याः प्रकृतिविकृतयस्सप्त ।
षोडशकस्तु विकारो न प्रकृतिर्न विकृतिः पुरुषः ॥ ३ ॥

---

யம் வைராக்யம் முதலியவைகளுடனும் பழகிவருதல் மூலம் ப கிருதி, புருஷன் இவர்களின் பேதக்ஞானம் உண்டாகின்ற அஃதே ஆத்யந்திகதுக்கநிவிருத்தியை யுண்டுபண்ணுகின்ற ஆகவே முதல் இரண்டு சுலோகங்களால் இந்த சாங்கியசா திரம் ஆறம்பிக்கவேண்டுவது அவசியம் என்பது பெ பட்டது.

---

மூன்றாவது சுலோகம்.

(அ-கை)ஒருவன் செய்யவாரம்பிக்கின்ற காரியத்தை மே விகள் ஏற்றுக்கொள்வதற்குமுன் அக்காரியம் எந்த அசாதார பலனையுத்தேசித்து ஆரம்பிக்கப்படுகின்றது; மற்றவைகளா அப்பயன் சித்திக்காதா என்று விசாரித்தறியவிரும்புகின்றன ஆகவே முதல் இரண்டு சுலோகங்களிற் சொல்லிய யுக்திகளா இச்சாஸ்திரமவசியமாய் ஆரம்பிக்கப்படவேண்டு மென்பவ நிலைநிறுத்தி சுரோதாக்கள் நன்றாய் கவனிப்பதற்காக இச்சா திரத்தில் நிரூபிக்கப்படுகின்ற பொருள்களை சுருக்கிச் சொல் கிறார்.

मूलप्रकृतिः — ஆதிகாரணமான பிரதானம்
अविकृतिः — மற்றொன்றின் காரியமல்ல

"मूल" इति । संक्षेपतो हि शास्त्रार्थस्य चतस्रो विधाः—कश्चिदर्थः प्रकृतिरेव, कश्चिदर्थो विकृतिरेव, कश्चित्प्रकृतिविकृतिः, कश्चिदनुभयरूपः। तत्र का प्रकृतिरित्युक्तम्—"मूलप्रकृतिरविकृतिः" इति । प्रकरोतीति

---

| | |
|---|---|
| महदाद्याः | மஹத்தத்வத்தை முதலாவதாகவுடைய |
| सप्त | மஹத், அஹங்காரம், ஆகாசம் காற்று அக்கினி ஜலம் பூமி இவைகளின் தந்மாத்திரைகள் என்ற ஏழுவஸ்துக்கள் |
| प्रकृतिविकृतयः | ஒன்றிர்க்குக்காரணமாயும், மற்றென்றிர்க்குக்காரியமாயு முள்ளவைகள். |
| षोडशकः | ஐந்துபூதங்கள், பதினொரு இந்திரியங்கள் இவைகளின் கூட்டம் |
| विकारस्तु | எப்பொழுதும் காரியமாயுள்ளது. |
| पुरुषः | ஆத்மா |
| न प्रकृतिः | காரணமுமல்ல |
| न विकृतिः | காரியமுமல்ல. |

(தா-ம்). இந்தச் சாஸ்திரத்தால் நிருபணம் செய்யப்படுகின்ற விஷயங்களைச்சுருக்கமாய் நான்கு விதமாகப் பிரித்துக் கொள்ளவேண்டும். 1. காரணமாகவே இருக்கக்கூடியது. 2. காரியமாகவே இருக்கின்றவை. 3. ஒன்றிற்குக்காரணமாயும், மற்றென்றிற்குக்காரியமாயு மிருக்கின்றவை. 4. காரணமாகவோ காரியமாகவோ ஆகாமலிருக்கக்கூடியது. அவற்றுள் மூலப்பிரகிருதி, பிரதானம் என்று வழங்கப்படும் வஸ்து காரணமாகவே இருப்பது எனப்படும். சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களின் சமமானநிலை பிரதானம், பிரகிருதி என்று வியவஹரிக்கப்படுகிறது. இதுவே சகல பிரபஞ்சத்திற்கும் ஆதிகாரணமாயிருக்கக்கூடியது. இதற்கு வேறுகாரணம் கிடையாது. ஏனையோ? வெனின்; இதற்கும் ஒருகாரணத்தை ஒத்துக்கொள்வோமாயின், அக்காரணத்திற்கும் வேறு காரணமிருப்பதாய் ஏன் அங்கீகரிக்கு

प्रकृतिः प्रधानम्, सत्वरजस्तमसां साम्यावस्था, सा अविकृतिः, प्रकृतिरेवेत्यर्थः । कस्मादित्यत उक्तम्—"मूल" इति । मूलञ्चासौ प्रकृतिश्चेति मूलप्रकृतिः विश्वस्य कार्यसंघातस्य सा मूलम्, न त्वस्या मूलान्तरमस्ति अनवस्थाप्रसङ्गात् । न चानवस्थायां प्रमाणमस्तीति भावः ॥

कतमाः पुनःप्रकृतिविकृतयः, कियत्यश्चेत्यत उक्तम्—" महदाद्याः प्रकृति विकृतयः सप्त" इति । प्रकृतयश्च विकृतयश्च ता इति "प्रकृति विकृतयः" सप्त । तथाहि—महत्तत्वमहङ्कारस्य प्रकृतिः, विकृतिश्च मूलप्रकृतेः । एवमहङ्कारतत्वं तन्मात्राणामिन्द्रियाणां च प्रकृतिः, विकृतिश्च महतः । एवं पंचतन्मात्राणि तत्वानि भूतानामाकाशादीनां प्रकृतयः विकृतयश्चाहङ्कारस्य ॥

---

கூடாதென்ற கேழ்வை சம்பவிக்கும். இவ்விதம் காரியகாரணபாவத்தின் கிரமத்திற்கு முடிவில்லாமையை அங்கீகரிப்போமேயாயின் அநவஸ்தை (முடிவில்லாமை அதாவது: பிரமாணமன்றியே பலவஸ்துக்களை இருப்பனவாய் அங்கீகரிப்பது) என்ற தோஷம் சம்பவிக்கும். அவ்விதம் அந்த தோஷத்தை அங்கீகரிப்பதில் பிரமாணம்யாதுமில்லையாதல்பற்றி காரியகாரணபாவக்கிரமத்தின் முடிவை பிரகிருதியினிடம் அங்கீகரிக்கிறோம். ஆனதுபற்றியே அதற்கு "மூலப்பிரகிருதி"(ஆதிகாரணம்) எனப் பெயரிடப்பட்டிருக்கிறது.

மஹத், அஹங்காரம், மண்ஜலம் நெருப்பு காற்று ஆகாசம் இவைகளின் தன்மாத்திரைகள் (சூக்ஷ்மநிலை.) என்ற ஏழுதத்வங்கள் "பிரகிருதிவிகிருதி" எனப்படும். அதாவது மேற்சொன்ன ஏழுதத்வங்களுள் ஒவ்வொன்றும் ஒன்றிற்குக்காரணமாயும் மற்றொன்றிற்குக் காரியமாயுமிருக்கின்றது. எவ்விதமெனின் மஹத்தத்வம் என்பது அஹந்தத்வத்திற்குப் பிரகிருதியா (காரணமா) யும், மூலப்பிரகிருதியின் விகார (காரிய) மாயுமிருக்கின்றது. இவ்விதமே அஹந்தத்வம்என்பது பிருதிவி முதலிய பஞ்ச பூதங்களின் தந்மாத்திரைகளுக்கும், இந்திரியங்களுக்கும் பிரகிருதி

अथ का विकृतिरेव कियतीचः इत्यत उक्तम्—"षोडशकस्तु विकारः" इति। षोडशसंख्यापरिमितोगणः षोडशकः। 'तु' शब्दो अवधारणे, भिन्न-क्रमः—पञ्चमहाभूतानि एकदशेन्द्रियाणि षोडशको गणः, विकार एव, न प्रकृतिरिति। यद्यपि पृथिव्यादीनां गोघटवृक्षादयोविकाराः, एवन्तद्विकार-भेदानां पयोबीजादीनां दध्यङ्कुरादयः, तथापि गवादयो बीजादयो वा न

---

யாயும், மஹத்தத்துவத்தின் காரியமாயுமிருக்கின்றது. இவ்விதமே ஆகாசம் முதலியவற்றின் ஐந்து தந்மாத்திரைகள் என்றதத்துவங்கள் ஆகாசம்முதலிய ஐந்துமஹாபூதங்கட்கும் காரணங்களாயும், அஹங்காரத்தின் காரியங்களாயுமிருக்கின்றன. எது காரியமாகவே இருக்கின்றது? எவ்வளவு? என்பதைச் சொல்லுகிறார்—षोडशकस्तु विकार इति. 16 என்ற எண்ணால் அளவிடப்பட்ட கூட்டம் षोडशक என்ற பதத்தின்பொருள். तु என்றபதத்திற்கு அவதாரணம் (நிச்சயிப்பது) பொருள். அதை षोडक என்ற பதத்தினிடமிருந்துப்பிரித்து विकार என்றபதத்துடன் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஆகவே ஐந்து மஹாபூதங்களும் 11 இந்திரியங்களும் 16 என்ற எண்ணால் அளவிடப்பட்ட கூட்டம் எனப்படும்; அதுமற்றொன்றின் காரியமாகவே இருக்கின்றது; வேறு தத்துவத்திற்குக் காரணமாக ஆவதில்லை என்று ஏற்பட்டது.

சங்கை—பிருதிவிமுதலிய மஹாபூதங்கட்கு பசு, குடம், மரம் முதலியன காரியங்களாகின்றன; அதன் காரியங்களான பால், விதை முதலியவற்றிற்கு தயிர், முளை முதலியன காரியங்களாகின்றன; ஆதலால் பிருதிவீ முதலிய மஹாபூதங்கள் மற்றொன்றிற்குக் காரணமாவதில்லை என்று கூறியது எங்ஙனம் பொருந்தும்?

உத்தரம்—பசு முதலியனவோ, விதை முதலியனவோ பிருதிவீ முதலியவற்றைக் காட்டிலும் வேறுதத்துவங்களல்ல.

पृथिव्यादिभ्यस्तत्वान्तरम् । तत्वान्तरोपादानत्वं च प्रकृतित्वमिहाभिप्रेतम्, इति न दोषः । सर्वेषां च गोघटादीनां स्थूलता इन्द्रियग्राह्यता च समेति न तत्वान्तरत्वम् । अनुभयरूपमाह—"न प्रकृतिर्न विकृतिः पुरुषः" इति । एतत्सर्वमुपरिष्टादुपपादयिष्यते ॥ ३ ॥

---

तमिममर्थं प्रामाणिकं कर्तुमभिमताः प्रमाणभेदा लक्षणीयाः । न च

---

வேறு தத்துவத்திற்கு *உபாதானகாரணமாயிருத்தலே இங்குள்ள "பிரகிருதித்வம்" என்றதின்பொருள். ஆதலால் நாம் கூறியவற்றில் தவறுதல் எதுவுமில்லை. பசு, குடம் முதலியவற்றிற்கு ஸ்தூலமாயிருக்குகையும், இந்திரியங்கட்குப் புலப்படுகையும் சமமாயிருப்பது பற்றி அவைவேறு தத்துவங்களல்ல. ஆதலால் அவைகட்கு பிருதிவீ முதலிய மஹாபூதங்கள் காரணங்களாயினும் பிரகிருதியாயிருத்தலை யடையமாட்டாது. காரணமாகவோ, காரியமாகவோ ஆகாமலிருப்பதைச் சொல்லுகிறார்—**न प्रकृतिर्न विकृतिः पुरुषः इति ।** புருஷன் (ஜீவன்) ஒன்றிற்குக்காரணமாகவோ காரியமாகவோ ஆவதில்லை. இதனைப்பின்னர் நிரூபணஞ் செய்வாம். (எ-று.)

---

நான்காவது சுலோகம்.

(அ-கை) மூன்றுவது சுலோகத்தாற் சொல்லிய சமாசாரங்களை பிரமாணங்களால் புலப்படக்கூடியதாக நிரூபணம்

---

* காரணம் மூன்றுவிதம்; 1. உபாதானகாரணம், 2. அசமவாயிகாரணம், 3. நிமித்தகாரணம். எதில்காரியமானது உண்டாவதற்குமுன் சூக்ஷ்மநிலையில் அடங்கி இருக்கின்றதோ அதை அந்தக்காரியத்திற்கு 'உபாதானகாரணம்' என்கிறோம். உதாஹரணம்:—குடத்திற்கு மண், மரத்திற்கு விதை, தயிருக்குப் பால் முதலியன உபாதானகாரணங்களாம். இதையே நையாயிகர்கள் "ஸமவாயிகாரணம்" என்கின்றனர்.

सामान्यलक्षणमन्तरेण शक्यते विशेषलक्षणं कर्तुम्, इति प्रमाणसामान्यं तावल्लक्षयति—

मू० । दृष्टमनुमानमाप्तवचनं च सर्वप्रमाणसिद्धत्वात् ।
त्रिविधं प्रमाणमिष्टं प्रमेयसिद्धिः प्रमाणाद्धि ॥ ४ ॥

---

செய்யவேண்டி ஒத்துக்கொள்ளப்பட்ட பிரமாணங்களின் பிரிவினைகளுக்கு லக்ஷணங்களைக்கூறவேண்டும். முதலில் எல்லாப் பிரமாணங்களுக்கும் பொது லக்ஷணங்கூறாமல் தனித்தனியே பிரமாணங்களுக்கு லக்ஷணங்கூறுதல் *சந்தர்ப்பத்திற்குப் பொருந்தாதானதால் முதலில் எல்லாப் பிரமாணங்கட்கும் பொதுவான லக்ஷணத்தைக் கூறுகிறார்—

| | |
|---|---|
| दृष्टम् | பிரத்யக்ஷமும் |
| अनुमानम् | அநுமானமும் |
| आप्तवचनं च | ஆப்தவசனமும் |
| प्रमाणम् | பிரமாணமாக |
| इष्टम् | அங்கீகரிக்கப்படுகின்றன. |
| सर्वप्रमाणसिद्ध-त्वात् | மற்றெல்லாப் பிரமாணங்களும் இவற்றிலேயே அடங்கிவிடுவதால் |

---

* ஒருவன் ஒருவஸ்துவைப்பற்றிப் பொதுவாய்த்தெரிந்துகொண்டபிறகே அதன் உட்பிரிவினைகளைத் தெரிந்துகொள்ள விரும்புவானேயொழிய முதலிலேயே பிரிவினைகளைப்பற்றித் தெரிந்து கொள்ள முயர்ச்சிப்பதில்லை. ஆதலால் பொதுவான லக்ஷணத்தை முதலில் கூறி அதனால் அவ்வஸ்துவைப்பற்றி மொத்தமாய் ஓர் உணர்ச்சியையுண்டு பண்ணவேண்டும். பிறகு இதன் பிரிவினைகள் எவ்வளவு? எத்தகையன? என்று அறிய விருப்பமுண்டாகும். அதற்குப்பிறகே தனித்தனியே லக்ஷணங்களைக்கூறவேண்டும். இவ்விதமன்றி முதலிலேயே தனித்தனி லக்ஷணங்களைக் கூறுவது சந்தர்ப்பவிருத்தம் என்று அறியவும்.

"प्रमाणमिष्टम्" इति । अत्रच प्रमाणमिति समाख्या लक्ष्यपदम् । तन्निर्वचनं च लक्षणम् । प्रमीयते अनेनेति निर्वचनात् प्रमां प्रति करणत्व मवगम्यते । तच्चाऽसंदिग्धानधिगतविषया चित्तवृत्तिः । बोधश्च पौरुषेयः

---

| | |
|---|---|
| (तत्) | அந்தப்பிரமாணம் |
| त्रिविधम् | மூன்றுவிதமாயுள்ளது. |
| प्रमेयसिद्धिः | ஒருவஸ்து இருப்பதாகச் ஸித்திப்பது |
| प्रमाणाद्धि | பிரமாணத்தினுலே தான் ஏற்படவேண்டும். |

(தா-ம்) இந்தச் சுலோகத்திலுள்ள प्रमाणम् என்றபதத்தை ஆவிருத்தி (இரண்டுதரமிருப்பதாய்ப் பாவித்தல்) செய்து கொண்டு ஒருபதம் லக்ஷ்யத்தைப் போதிப்பதாகவும், மற்றப்பதம் லக்ஷணத்தை விளக்குவதாகவும் அறியவேண்டும். ஆகவே அறிவதற்குச் சாதனமாயிருக்குகையே பிரமாணங்கட்குப்பொது லக்ஷணம். அந்தப்பிரமாணம் என்பது யாது? எனின்:—சந்தேஹமற்றதும், மாறுதலற்றதும், இதற்குமுன் அறியப்படாததுமான வஸ்துவை விஷயமாக்கிக்கொண்டு (பற்றிக்கொண்டு) ஏற்படுகின்ற சித்தவிருத்தியாம். போதம் என்பது புருஷ சம்பந்தமுள்ளது. அதாவது:—அந்தந்தவஸ்துக்களைப்பற்றிக் கொண்டு ஏற்படுகின்ற நிர்மலமான சித்தவிருத்தியில் புருஷன் பிரதிபலிக்கிறுன். அந்தப்பிரதிபலித்தல் என்றபுருஷ சம்பந்தமுள்ள சித்தவிருத்தியே "போதம்" என்றும் प्रमा என்றும் சொல்லப்படும். அதற்குச் சாதனமாயிருப்பதே பிரமாணம். சந்தேகமற்றதும், மாறுதலற்றதும், அறியப்படாததுமான வஸ்துவைப்பற்றிய சித்தவிருத்திதான் பிரமாணமாகும் என்றதால் தூரத்திலிருக்கும் வஸ்துவைப்பார்த்து சொல்பவெளிச்சத்தில் உண்டாகின்ற "கட்டையோ புருஷனே" என்றசந்தேஹரூபமான சித்தவிருத்தியும், தூரத்திலிருக்கும் சிளிஞ்சலைப்பார்த்து உண்டாகின்ற "வெள்ளி" என்ற விபரீதமான சித்தவிருத்தியும், முன் அறியப்பட்டவஸ்துவைப்பற்றியே உண்டாகின்ற "நினைவு" என்ற சித்தவிருத்தியும் பிரமாணமல்ல என்று ஏற்பட்டது.

फलं प्रमा, तत्साधनं प्रमाणमिति । एतेन संशयविपर्ययस्मृतिसाधनेष्वप्रमाणेष्वप्रसङ्गः ॥ संख्याविप्रतिपत्तिं निराकरोति—"त्रिविधम्" इति । तिस्रो विधा अस्य प्रमाणसामान्यस्य तत् त्रिविधम्, न न्यूनम्, नाप्यधिकमित्यर्थः विशेषलक्षणानन्तरं चैतदुपपादयिष्यामः ॥ कतमाः पुनस्तास्तिस्रो विधा इत्यत आह—"दृष्टमनुमानमाप्तवचनम्" इति। एतच्च लौकिकप्रमाणाभिप्रा-

---

*பிரமாணம் நான்கு என்று சிலரும், 6 என்று சிலரும், இரண்டுதான் என்று சிலரும் சொல்லுகின்றனராதலால் பிரமாணங்களின் எண்விஷயத்தில் பல விப்ரதிபத்திகள் (சித்தாந்தங்கள்) இருக்கின்றன. அவற்றை நிராகரிக்கிறார்—* **त्रिविध-मिति** । *பிரமாணம் மூன்று பிரிவினையுள்ளது. இதை அவ்வவற்றிற்குத் தனித்தனியே லக்ஷணங்களைக் கூறியபிறகு யுக்திகளால் ஸ்திரப்படுத்துவாம். அம்மூன்றுவித பிரமாணங்கள் எவையெவை என்பதைக்கூறுகிறார்—* **दृष्टमनुमानमाप्तवचनमिति** । *பிரமாணம் பிரத்யக்ஷம், அநுமானம், ஆப்தவசனம் என்றுமூன்று விதமாயுள்ளது. இவ்விதம் சொன்னதற்கு "லோகத்தாரால் கையாளப்படும் பிரமாணம்மூன்று" என்று கருத்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால் லோகத்தாருக்கு அறிவைப்புகட்டுவதற்காகவே சாஸ்திரமேற்பட்டிருக்கின்றது. அவர்களுக்குத்தான் இச்சாஸ்திரத்திலதிகாரம். (தகுயோக்யதை) இந்திரியத்தை (புருஷனின் சரீரத்திலிருக்கும் 7வது தாதுவை) மேல் நோக்கிச்செல்லும்படிசெய்த யோகிகளுடைய அநுபவத்திற்கு விஷயமான *"ஆர்ஷவிக்ஞானம்" என்றபிரமாணம் ஒன்றிருப்பினும் அதுலௌகிகர்களுக்கு அறிவைப்புகட்டச் சாதனமாக மாட்டாதென்று இங்கு கூறப்படாமல் விடுக்கப்பட்டது.*

---

** இப்பிரமாணத்தினால் ருஷிகள் முன் நடந்தவற்றையும், நடக்கப் போகின்றவையும் அறிவார்கள். இதையே நையாயிகர்கள் "யோகஜதர்மம்" என்கின்றனர். இதனாலேயே, யுகத்தின்முடிவில் மறைந்திருந்த வேதபாகங்களைக்கண்டு வெளியிட்டனர். மந்திரங்களை ருஷிகள் செய்தனர் என்பதின் கருத்துமிதுவே என்றறியவும்.*

यम्, लोकव्युत्पादनार्थत्वाच्छास्त्रस्य, तस्यैवात्राधिकारात् । आर्षं तु विज्ञानं योगिनामूर्ध्वस्रोतसां न लोकव्युत्पादनायालमिति सदपि नाभिहितम् अनधिकारात् ॥ स्यादेतत्, माभून्न्यूनम्, अधिकं तु कस्मान्न भवति? संगिरन्ते हि प्रतिवादिनः उपमानादीन्यपि प्रमाणानि इत्यत आह—"सर्वप्रमाणसिद्धत्वात्" इति । एष्वेव दृष्टानुमानाप्तवचनेषु सर्वेषां प्रमाणानां सिद्धत्वात्=अन्तर्भावादित्यर्थः। एतच्चोपपादयिष्यत इत्युक्तम् ॥ अथ प्रमेयव्युत्पादनाय प्रवृत्तं शास्त्रं कस्मात्प्रमाणं सामान्यतो विशेषतश्च लक्षयति?

---

சங்கை—இஃதெல்லாமிருக்கட்டும். பிரமாணங்கள் மூன்றிற்குக்குறைவாக இருக்கவேண்டும். அதிகமாக ஏன் இருக்கக் கூடாது? பிரதிவாதிகள் உபமானம் முதலியவற்றையும் பிரமாணமாகக் கூறுகின்றனரே? என்றால் பதிலளிக்கிறார்—सर्वप्रमाणसिद्धत्वादिति । நாம் கூடிய பிரத்யக்ஷம், அநுமானம், ஆப்தவசனம் என்ற மூன்றுவித பிரமாணங்களிலேயே மற்றப்பிரமாணங்களடங்கிவிடுகின்றன. ஆதலால் அவைதனிப் பிரமாணங்களல்ல. இவ்விஷயத்தைப் பற்றிப்பின்னர் வறைவதாய்முன்னரே கூறியுள்ளாம்.

சங்கை—பிரமேயங்களை நிரூபணஞ் செய்வதக்காகத் தொடங்கிய சாஸ்திரம், பிரமாணங்களுக்குப் பொதுவாயும், தனித்தனியும் லக்ஷணங்களை எதற்காகக் கூறுகின்றது? என்றால் பதிலளிக்கிறார்—प्रमेयसिद्धिः प्रमाणाद्धि इति । பிரமேயங்கள் பிரமாணங்களினாலேயே அறியப்படவேண்டி இருப்பதால் முதலில் பிரமாணங்கள் நிரூபிக்கப்படுகின்றன. இந்தச்சுலோகம் *அர்த்தக்கிரமத்தை அநுசரிந்து பாடக்கிரமத்தைக் கவனியாமல் வியாக்யானம் செய்யப்பட்டது (எ-று)

---

* அநுஷ்டிக்கவேண்டிய காரியங்களுக்குக் கிரமத்தை ஏற்படுத்திக் கொள்ள श्रुति, अर्थ, पाठ, स्थान, मुख्य, प्रवृत्ति என்று ஆறுபிரமாணங்களிருக்கின்றன. அவற்றுள் अर्थ என்று ஒரு பிரமாணம். பிரயோஜனம்;

इत्यत आह—"प्रमेयसिद्धिः प्रमाणाद्धि" इति ॥ सिद्धिः=प्रतीतिः ॥ सेयमार्या अर्थक्रमानुरोधेन पाठक्रममनादृत्यैव व्याख्याता ॥ ४ ॥

---

संप्रति प्रमाणविशेषलक्षणावसरे प्रत्यक्षस्य सर्वप्रमाणेषु ज्येष्ठत्वात् तदधीनत्वाच्चानुमानादीनां, सर्ववादिनामविप्रतिपत्तेश्च तमेवतावल्लक्षयति—

मू० । प्रतिविषयाध्यवसायो दृष्टं त्रिविधमनुमानमाख्यातम् ।
तल्लिङ्गलिङ्गिपूर्वकमाप्तश्रुतिराप्तवचनं तु ॥ ५ ॥

---

ஐந்தாவது சுலோகம்

(அ-கை) இப்பொழுது தனித்தனியே பிரமாணங்கட்கு லக்ஷணங்கூறும் சந்தர்ப்பத்தில் பிரத்யக்ஷம் என்ற பிரமாணம் மற்றெல்லாப்பிரமாணங்களிலும் சிறந்ததாயிருப்பதாலும், அநுமானம்முதலிய பிரமாணங்கள் பிரத்யக்ஷத்தை அண்டி இருப்பதாலும், எல்லாவாதிகளாலும் இஃது அங்கீகரிக்கப்பட்டிருப்பதாலும் பிரத்யக்ஷத்திற்கே முதலில் லக்ஷணங்கூறுகிறார்.

| | |
|---|---|
| प्रतिविषयाध्य-वसायः | ஒவ்வொரு விஷயத்துடனும் சேர்ந்த இந்திரியத்தால் உண்டாகின்றக் ஞானமானது |
| दृष्टम् | பிரத்யக்ஷம் எனப்படும். |
| अनुमानम् | அநுமானம் |

---

பயன்; என்று அதன் பொருள். பாடம் என்றால் படிக்கப்படும் வாக்கியங்களின் முறை. "போஜனம் செய்துவை இலையைப்போடு" என்று சொன்னவிடத்தில் பிரயோஜனத்தை அனுசரித்து முதலில் இலையைப் போடவேண்டும், பிறகுபோஜனம் செய்துவைக்கவேண்டும் என்று கொள்ளுகிறோம். இதுவே அருத்தகிரமம். "காலையில் எழுந்திரு, கடவுளை த்யானஞ்செய், கைகால்களைக்கழுவி சுத்தஞ்செய்துகொள்" என்று சொன்னவிடத்தில் வாக்கியத்தின் முறையே அநுசரித்தேகாரியங்களு மனுஷ்டிக்கப்படுகின்றன. இதுவேபாடக்கிரமமாம். இவற்றுள்பாடக்கிரமத்திலும் அர்த்தக்கிரமம் சிறந்தது என்று பூர்வமீமாம்சையில் 5வது அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

"प्रतिविषयाध्यवसायो दृष्टम्" इति । अत्र "दृष्टम्" इति लक्ष्यनिर्देशः, परिशिष्टं तु लक्षणम् । समानासमानजातीयव्यवच्छेदो लक्षणार्थः । अवयवार्थस्तु—विषिण्वन्ति विषयिणमनुबध्नन्ति, स्वेनरूपेणनिरूपणीयं कुर्वन्तीति यावत् विषयाः पृथिव्यादयस्सुखादयश्च । अस्मदादीनामविषया स्तन्मात्रलक्षणाः योगिनामूर्ध्वस्रोतसां च विषयाः ।

---

**लिङ्गलिङ्गिपूर्वकम्** வ்யாப்யம், வியாபகம், பக்ஷதர்மதை இவைகளைப்பற்றியக் ஞானத்தை முன்னதாகவுடையது. அதாவது இவைகளின் க்ஞானத்தாலுண்டாகின்றது.

**तत्** அந்த அநுமானம்

**त्रिविधम्** மூன்றுவிதமாக

**आख्यातम्** கூறப்பட்டுள்ளது.

**आप्तवचनम्** ஆப்தவசனம் என்ற பிரமாணம்

**आप्तश्रुतिः** பொருத்தமுள்ள வாக்யார்த்தக் ஞானரூபமாயுள்ளது.

(தா-ம்) **प्रतिविषयाध्यवसायो दृष्टम्** என்ற விடத்தில் **दृष्टम्** என்றபதம் லக்ஷ்யத்தைப் போதிக்கின்றது. மீதமுள்ளபதங்கள் லக்ஷணத்தைப்போதிக்கின்றன. ஒன்றிற்குலக்ஷணங் கூறுவதின் பிரயோஜனம் என்னே? எனின்—சமான ஜாதீயங்களிலிருந்தும் (அதைப்போன்ற வஸ்துக்களிலிருந்தும்) அசமான ஜாதீயங்களிலிருந்தும் (அதற்கு முற்றிலும் வேறுபட்டவஸ்துக்களிலிருந்தும்) ஒன்றை வேறுபட்டதாயறிவதேயாம். உதாஹரணம்:— பிரத்க்ஷத்திற்கு, பிரமாணமாயிருத்தல் என்றபெது தர்மத்தால் சமான ஜாதீயமாயிருப்பது அநுமானம். அப்பிரமாணமான சம்யம் முதலியன அசமான ஜாதீயமாயுள்ளன. இவ்விரண்டினும் வேறுபட்டதாய் பிரத்யக்ஷம் என்பது லக்ஷணத்தாலறியப்படுகிறது.

विषयं विषयं प्रति वर्तत इति प्रतिविषयम्=इन्द्रियम्। वृत्तिश्च सन्निकर्षः, अर्थसन्निकृष्टमिन्द्रियमित्यर्थः, तस्मिन् अध्यवसायस्तदाश्रित इत्यर्थः। अध्यवसायश्च बुद्धिव्यापारो ज्ञानम्, उपात्तविषयाणामिन्द्रियाणां वृत्तौ सत्यां बुद्धेस्तमोऽभिभवे सति यस्सत्वसमुद्रेकः सोऽध्यवसाय इति वृत्तिरिति ज्ञानमिति चाख्यायते। इदं तावत्प्रमाणम्। अनेन यश्चेतनाशक्तेरनुग्रह-

ஒருவஸ்துவைக் கண்டவுடன் ஓர்விதமான உணர்ச்சியுண்டாகின்றது. அவ்வுணர்ச்சிக்கு நாமரூபம் இயற்கையில் கிடையாது. அதற்கு நாமரூபத்தை எதுகற்பிக்கின்றதோ அதுவே விஷயம் எனப்படும். மரத்தைக்கண்டவுடன் உண்டாகின்ற உணர்ச்சியை "மரம்" என்ற உணர்ச்சிஎன்கிறோம். ஆதலால் மரம் என்பது விஷயம். இவ்விதம் நம்போன்றவர்களின் அறிவுக்கு விஷயமாகின்ற பிருதிவீமுதலியனவும், சுகம் முதலியனவும், யோகிகளின் அறிவுக்குமாத்திரம் விஷயமாகின்ற பிருதிவீ முதலியவற்றின் தந்மாத்திரைகளும் "விஷயம்" என்ற பதத்தின்பொருள். **प्रति** என்றபதத்திற்குச் சேர்ந்துள்ளது என்றுபொருள். எதுசேர்ந்துள்ளது என்றால் "இந்திரியம்" என்று ஏற்படுகிறது. (இங்கு) இந்திரியங்களுக்கு விஷயங்களுடன் விருத்தி என்பது சன்னிகர்ஷ (சம்பந்த) ரூபம். ஆகவே **प्रतिविषय** என்றபதத்திற்கு அந்தந்த விஷயத்துடன் சேர்க்கையை அடைந்த இந்திரியம் என்ற பொருள் மொத்தமாகக்கிடைக்கின்றது. விஷயத்திற்கும் இந்திரியத்திற்கும் சம்பந்த மிருக்கும் பொழுது அச்சம்பந்தத்தை ஆசிரயித்த அத்யவசாயம் ஏற்படுகின்றது. புத்தி வியாபாரரூபமான க்ஞானம் அத்யவசாயமெனப்படும். (தானிருக்குமிட மிருந்தே) *விஷயத்தைப்பெற்ற

* சாங்கிய சித்தாந்தத்தில் இந்திரியங்கள் தானிருக்கு மிடத்திலேயே இருக்கின்றனவென்றும், வெளியுள்ள விஷயங்களே இந்திரியங்களிருக்குமிடம் வருகின்றன வென்றும், அவ்விதம் விஷயங்கள் தன்னிடம் வந்ததும் ஏற்படும் இந்திரியங்களுக்கும் விஷயங்களுக்கும் உள்ள சம்பந்தமே விருத்தியென்றும் சன்னிகர்ஷம் என்றும் கொள்ளவேண்டு மென்பதைக் காட்டவேண்டுவதற்காகவே இங்கு "உபாத்த விஷயாணும் இந்திரி

स्तत् फलं प्रमा बोधः॥ बुद्धितत्वं हि प्राकृतत्वादचेतनमिति तदीयोऽध्यवसायो-ऽप्यचेतनो घटादिवत्। एवं बुद्धितत्वस्य सुखादयोऽपि परिणामभेदा अचेतनाः। पुरुषस्तु सुखाद्यननुषङ्गी चेतनः। सोयं बुद्धितत्ववर्तिना ज्ञानसुखादिना तत्प्रतिबिंबितस्तच्छायापत्त्या ज्ञानसुखादिमानिव भवतीति चेतनोऽनुगृह्यते। चितिच्छायापत्त्याअचेतनापि बुद्धिस्तदध्यवसायोप्यचेतनश्चेतनवद्भवतीति। तथाच वक्ष्यति—

---

இந்திரியங்களுக்கு (தன்னிடம் வந்த விஷயங்களுடன்) விருத்தி (சன்னிகர்ஷம்-சம்பந்தம்) இருக்கும் பொழுது அந்தக் கரணம் என்ற புத்தியின் தமோகுணம் குறைவை அடையவே சத்துவ குணாம்சத்திற்கு ஆதிக்யம் உண்டாகின்றது இதையே "அத்யவசாயம்" "விருத்தி" "க்ஞானம்" என்று அழைக்கிறோம். இதுதான் பிரத்யக்ஷம் என்ற பிரமாணம். இந்தப்புத்திவிருத்திரூபமானக் ஞானத்தால் புருஷனுக்குண்டாகின்றயாதொரு அனுக்கிரஹம் என்றசம்பந்தமுண்டோ அது

---

யாணும் வ்ருத்தௌசத்யாம்'' என்று சொன்னதாக ஏற்படுகிறது. ஏனைய சித்தாந்தங்களில் சக்ஷுரிந்திரியம் மட்டும் விஷய தேசம் செல்லுகின்றதென்றும், மற்றும் நான்கு இந்திரியங்கள் இருக்குமிடத்திற்கே விஷயங்கள் வருகின்றனவென்றும் சொல்லப்படுகின்றது. வேதாந்த பரிபாஷையில் ச்ரோத்ர இந்திரியமானது விஷயதேசஞ் சென்றே சப்தத்தைக் கிரகிக்கின்றது என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆயினும் அது योसौ दूरा-दाकर्णयतः कर्णपथमवतरति सशब्दः "எது தூலையில் நின்று கேட்பவனின் காதின்வழியை வந்தடைகின்றதோ அதுவே சப்தம்'' என்று சூத்திர பாஷ்யத்தில் தேவதாதி கரணத்தில் சொல்லியிருப்பதற்கு மாறாக இருப்பதுடன் ஏனை சித்தாந்தங்களுக்கும் அனுபவத்திற்கும் முற்றும் மாறாகவே காணப்படுகின்றது. ஆகவே எந்த இந்திரியங்களும் விஷயதேசம் செல்லுகின்றதில்லையென்றும் விஷயங்களே இந்திரியங்களிருக்குமிடத்திற்கு வாயுவின் உதவியால் கொண்டுவரப்படுகின்றனவென்றும் தத்கால அனுபவத்திற் கண்கூடாகக் கண்டிருப்பதால் இங்கு கூறினதே யுக்தி அனுபவம் இரண்டிற்கும் பொருத்தமானது என்றறியவும்.

तस्मात्तत्संयोगादचेतनं चेतनावदिव लिङ्गम् ।
गुणकर्तृत्वेऽपि तथा कर्तेव भवत्युदासीनः ॥ इति (कारिका-२०.)

अत्र अध्यवसायग्रहणेन संशयं व्यवच्छिनत्ति। संशयस्य अनवस्थितग्रहणेनानिश्चितरूपत्वात्। निश्चयोऽध्यवसाय इतिचानर्थान्तरम्। विषयग्रहणेन चासद्विषयं विपर्ययमपाकरोति। प्रतिग्रहणेन च इन्द्रियार्थसन्निकर्षसूचनादनुमानस्मृत्यादयश्च पराकृता भवन्ति। तदेवं समानासमानजातीयव्यवच्छेद-

---

தான் பிரமாணத்தின் பயன் என்றும், प्रमा என்றும், போதமென்றுமறியவேண்டும். அதாவது:— புத்திதத்துவம் என்பது பிரகிருதியின் விகாரமாயிருப்பதுபற்றி அசேதனமாயிருப்பதால் அதன் அத்யவசாயமும் குடம் முதலியவற்றைப்போல் அசேதநமாயிருக்கின்றது. இவ்விதமே புத்திதத்துவத்தின் விகாரமான சுகம்முதலியனவும் அசேதனங்களே. புருஷனோவென்றால் உண்மையில் சுகம்முதலியவற்றின் சம்பந்தமற்றவனாகவும் சேதனனாகவுமிருக்கிறான். அந்தப்புருஷன் நிர்மலமான புத்திதத்துவத்தில் பிரதிபலிக்கின்றான். அதனால், அழுக்கடைந்த கண்ணாடியில் பிரதிபலித்தமுகம் விவேகமற்றவனுக்கு அழுக்குள்ள தாய்ப்புலப்படுவதுபோல் புருஷனும் அந்தக்கரணத்திலுள்ள க்ஞானம் சுகம் முதலியவற்றோடு கூடியவன்போல் தோன்றுகிறான். இதுதான் க்ஞானம் முதலியவற்றோடு புருஷனுக்கு ஏற்படும்சம்பந்தம். அசேதனமான புத்தியும், அசேதனமான அத்யவசாயமும் உண்மையில் சைதன்யமற்றதாயினும் சேதனனை புருஷனின் பிரதிபலனத்தையடைந்தபடியால் நன்றாய்க் காய்ச்சப்பட்ட இரும்பே நேரில் நெருப்பென்றுதோன்றுவதுபோல் இவைகளும் சைதன்யமுள்ளவைகள் போலாகின்றன. இவ்விஷயத்தைப்பற்றி 20வது சுலோகத்தில் விரிவாய்ச் சொல்லப்போகிறார்.

प्रतिविषयाध्यवसायः என்ற பிரத்யக்ஷலக்ஷணத்தில் अध्यवसाय என்றபதம் சேர்த்தபடியால் நிச்சயரூபமாயில்லாத சம்சயக்ஞா

कत्वात् "प्रतिविषयाध्यवसाय" इति दृष्टस्य संपूर्णं लक्षणम्। तन्त्रान्तरेषु लक्षणान्तराणि तैर्थिकानां न भूषितानि, न दूषितानि, विस्तरभयादिति।

नानुमानं प्रमाणमिति वदता लोकायतिकेन अप्रतिपन्नस्सन्दिग्धो विपर्यस्तो वा पुरुषः कथं प्रतिपद्येत ? न च पुरुषान्तरगता अज्ञानसन्देहविपर्ययाः शक्या अर्वाग्दृशा प्रत्यक्षेण प्रतिपत्तुम्। नापि प्रमाणान्तरेण, अनभ्युपगमात्।

---

னம்பிரத்யக்ஷமல்ல வென்று விலக்கப்படுகிறது. நிச்சயம், அத்ய வசாயம் இரண்டும் ஒரேபொருளையுடைய பதங்கள். **विषय** என்றபதத்தைச் சேர்த்தபடியால் விஷயமன்றியே உண்டா கின்ற ப்ரமரூபமானக்ஞானம் பிரத்யக்ஷமல்ல வென்றுவிலக்கப் படுகிறது. **प्रति** என்றபதத்தால் இந்திரியம்பொருள் இவற்றின் சம்பந்தம் தெரிவிக்கப்படுவதால் அஃதன்றியே உண்டாகின்ற அநுமானம்,நினைவுமுதலியக் ஞானங்கள் ப்ரத்யக்ஷமல்லவென்று விலக்கப்படுகின்றன. ஆகவே சமானஜாதியங்களான அநுமா னம் முதலியவற்றினின்றும், அசமானஜாதியங்களான ப்ரமம் முதலியவற்றினின்றும் பேதத்தைப்புகட்டுவதால் **प्रतिविषयाध्यवसायः** என்பது பிரத்யக்ஷத்தின் தோஷமற்ற லக்ஷணம் என்று ஏற்படுகிறது. வேறு சாஸ்திரங்களில சாஸ்திரக்காரர்களாற் சொல்லப்பட்ட பிரத்யக்ஷத்தின் வேறு லக்ஷணங்கள் கிரந்தம் விரிவடையுமென்ற பயத்தால் போற்றப் படவுமில்லை, தூற்றப் படவுமில்லை என்றறியவும்.

அநுமானம் பிரமாணமல்ல வென்றுசொல்லும் லோகாயதி கனால், இவன் இவ்விஷயத்தை முற்றிலுமறியாதவன், இவன் இவ்விஷயத்தில் சந்தேஹமுள்ளவன், இவன் இவ்விஷயத்தை மாறுபாடாகக்கிரஹித்தவன் என்று எவ்விதம் ஓர் புருஷன் அறியப்படுவான். வேறுபுருஷனிடமுள்ள அக்ஞானம் (அறியா மை) சந்தேஹம், ப்ரமம் இவைகள் லௌகிகர்களால் நேரில் பிரத்யக்ஷமாய் அறியப்படுமா? மற்றப்பிரமாணங்களை ஒத்துக் கொள்ளவில்லையாதலால் வேறுப் பிரமாணங்களாலறியப்படு

अनवधृताज्ञानसंशयविपर्ययस्तु यं कं चन पुरुषं प्रति वर्तमानोऽनवधेयवचनतया प्रेक्षावद्भिरुन्मत्तवदुपेक्ष्येत । तदनेनाज्ञानादयः परपुरुषवर्तिनो अभिप्रायभेदाद्वचनभेदाद्वा लिङ्गात् अनुमातव्याः, इत्यकामेनापि अनुमानं प्रमाणमभ्युपेयम् । तत्र प्रत्यक्षकार्यत्वात् अनुमानं प्रत्यक्षानन्तरं लक्षणीयम् । तत्रापि सामान्यलक्षणपूर्वकत्वाद्विशेषलक्षणस्यानुमानसामान्यं तावल्लक्षयति—तल्लि-

கின்றன என்றும் நாஸ்திகன் சொல்லமுடியாது. இவன் இவ்விஷயத்தைப்பற்றி நன்றாய்த்தெரிந்து கொள்ளாதவன்; ஆதலால் இவனுக்கு இவ்விஷயத்தைப்பற்றி இவ்விதம் போதிக்கவேண்டும்; இவன் இவ்விஷயத்தில் சந்தேஹங்கொண்டிருக்கிறான், அல்லது இவ்விஷயத்தை விபரீதமாகக்கிரஹித்திருக்கிறான்; ஆதலால் இவனுக்குத்தக்கபடி பேசவேண்டும் என்று தெரிந்து கொள்ளாமலே யாதானும் ஓர்புருஷனிடம் ஒருவன் வியஹரிப்பானேல் அவனது வார்த்தைகளைக் கவனிப்பதற்குரியகாரணமில்லாமையால் அவனைப்“பித்தன்” என்று அறிஞர் உபேக்ஷித்துவிடுவர். ஆதலால் மற்றவனிடமுள்ள அறியாமை முதலியவைகள் மாறுபட்ட அவனது அபிப்பிராயம், வார்த்தை இவைகள் ரூபமான லிங்கத்தை (அடையாளத்தை)க்கொண்டே ஊஹிக்க வேண்டுமாதல் பற்றி இஷ்டப்படாதவனும். அநுமானம் ப்ரமாணம் என்றே ஒத்துக்கொள்ளத்தக்கது. பிரமாணங்களுள் அநுமானம் என்பது ப்ரத்யக்ஷத்தின் *காரியமாக இருப்பதால் பிரத்தியக்ஷ லக்ஷணங்கூறிய பிறகு அநுமானத்திற்கு லக்ஷணங் கூறவேண்டும். அநுமானத்தின் உட்பிரிவினைகளுக்கு லக்ஷணங்கூறுதல் பொதுலக்ஷணத்தை முன்னிட்டே ஏற்படவேண்டுமாதல்பற்றி முதலில் அநுமானத்-

* தூரத்திலிருக்கின்ற புருஷன் மலையிற் புகையைக் கண்டு மலை நெருப்புள்ளது என்று ஊஹிக்கிறான். இதுவே அநுமானமெனப்படும். மலைநெருப்புள்ளது என்றக் ஞானம் மலையிற் புகையை நேரில் காணுதலாலுண்டாகின்றது. அந்தக் ஞானம் பிரத்யக்ஷம். ஆதலால் அநுமானம் பிரத்யக்ஷத்தின் காரியமாகின்றது என்றறியவும்.

ङ्गलिङ्गिपूर्वकमिति। लिङ्गं व्याप्यम्। लिङ्गि व्यापकम्। शङ्कितसमारोपितोपाधिनिराकरणेन च स्वभावप्रतिबद्धं व्याप्यम्, येन प्रतिबद्धं तद्व्यापकम्। लिङ्ग-

---

திற்குப் பொதுலக்ஷணங் கூறுகிறார்:—तल्लिङ्गलिङ्गिपूर्वकम् इति। லிங்கம் என்றால் வியாப்பியம் என்று பொருள். லிங்கி என்றால் வியாபகம் என்றுபொருள். *சந்தேஹிக்கப் பட்டதாகவோ, ப்ரமிக்கப்பட்டதாகவோவுள்ள உபாதிகளற்றதாயும் சுவபாவத்திலேற்பட்ட சம்பந்தமுள்ளதாயுமிருப்பது (ஹேது) வியாப்யம் எனப்படும். எதுடன் சேர்ந்திருக்கிறதோ அது வியாபகம் எனப்படும். விஷயத்தைக் குறிக்கின்ற लिङ्गलिङ्गि என்ற பதத்திற்கு அவைகளை விஷயமாக்கிக் கொண்டு ஏற்படுகின்ற க்ஞானத்தைப் பொருளாகக்கொள்ளவேண்டும். ஆதலால் புகை முதலியன வியாப்யம், நெருப்புமுதலியன வியாபகம் என்றக் ஞானத்தை முன்னதாகவுடையது அநுமானம் என்று ஏற்படுகிறது. लिङ्गि என்றபதத்தை இரண்டுதரமுச்சரித்து (பாவித்துக்) கொள்ளவேண்டும். ஒருலிங்கி என்றபதத்திற்கு ஹேதுவுள்

---

* தூரத்திலிருக்கின்ற புருஷன் மலையிற் புகையை மட்டும் கண்டு மலை நெருப்புள்ளது என்று ஊஹிக்கிறான் என்று எடுத்துக் கொள்வோம். இவ்விடத்தில் புகை வியாப்யம். நெருப்பு வியாபகம். இவ்விதமே மற்ற விடங்களிலும் ஹேது வெல்லாம் வியாப்யம் என்றும், சாத்தியமெல்லாம் வியாபகமென்றும் அறியவேண்டும். புகைக்கும் நெருப்புக்கும் சுவபாவத்தில் ஒரு சம்பந்தமிருக்கிறது. அதுவே வியாப்தி எனப்படும். அதாவது:—ஹேது இருக்கின்ற விடமெல்லா மிருக்கின்ற சாத்தியத்துடன் கூடியிருத்தல். பிரகிருதஸ்தலத்தில் புகை ஹேது. நெருப்பு சாத்தியம். புகை இருக்கின்ற விடமெல்லாம் நெருப்பு இருக்கிறது. அத்தகைய சாத்தியத்துடன் புகை கூடியிருப்பதால் வியாப்யமாகின்றது. புகைக்கு உபாதியுமில்லை. சாத்திய மிருக்கின்ற இடமெல்லா மிருக்கின்றதாயும், ஹேது விருக்கின்ற சிலவிடங்களி வில்லாததாயு மிருப்பதே உபாதியாகும். உதாஹரணம்:— நெருப்பிருப்பதால் புகையு மிருக்க வேண்டு மென்று ஒருவன் ஊஹித்தான் என்று வைத்துக்கொள்வோம். இவ்விடத்தில் ஈரவிறகின் சம்பந்தம் உபாதியாகின்றது [illegible]

लिङ्गिग्रहणेन विषयवाचिना विषयिणं प्रत्ययमुपलक्षयति । धूमादिर्व्याप्यो वह्न्यादिर्व्यापक इति यः प्रत्ययस्तत्पूर्वकम् । लिङ्गिग्रहणं च आवर्तनीयम् । तेन च लिङ्गमस्यास्तीति पक्षधर्मताज्ञानमपि दर्शितं भवति । तद्व्याप्यव्यापकभावपक्षधर्मताज्ञानपूर्वकमनुमानमित्यनुमानसामान्यं लक्षितम् ।

---

ளது என்று பொருள்கொள்வதால் *பக்ஷதர்மதாக்ஞானமும் காண்பிக்கப்பட்டதாயாகின்றது. ஆகவே வியாப்தி பக்ஷதர்மதை (ஹேதுவானது பக்ஷத்திலிருப்பது) இவைகளின் க்ஞானத்தாலுண்டாகின்ற ஊஹம் அநுமானம் என்று அநுமானத்திற்குப் பொதுலக்ஷணங் கூறியதாக ஏற்படுகின்றது.

வேறு சாஸ்திரங்களில் லக்ஷணங்கள் வாயிலாக நிரூபிக்கப்பட்டுள்ளதும் தமக்கு இஷ்டமானதுமான அநுமானத்தின் பிரிவினைகளைச் சொல்லுகிறார்—त्रिविधमनुमानमाख्यातमिति· முன்னர்

---

னின்—பிரகிருதஸ்தலத்தில் சாத்தியம் புகை. ஹேது நெருப்பு. புகை இருக்கின்ற விடமெல்லாம் ஈரவிரகின் சேர்க்கை இருக்கின்றது. நன்ருய்க் காய்ச்சப்பட்ட இரும்பில் நெருப்பிருந்தாலும் ஈரவிரகின் சேர்க்கையில்லையாதலால் நெருப்பு இருக்கு மிடமெல்லாம் ஈரவிரகின் சேர்க்கை இருப்பதாகச் சொல்வதற்கில்லை. ஆதலால் நெருப்பால் புகையைச்சாதிக்கின்றவிடத்தில் ஈரவிரகின் சேர்க்கை உபாதியாகின்றது. இத்தகைய உபாதியின் சேர்க்கையிருப்பதாய்ச் சந்தேஹமேற்பட்டபோதிலும் நிச்சயமேற்பட்டாலும், ப்ரமமுண்டானாலும் ஹேதுவிருக்கின்ற இடமெல்லாமிருக்கின்ற சாத்யத்துடன் இந்தஹேது கூடியிருக்கிறது என்றவியாப்திக்ஞானம் ஏற்படுவதில்லை என்றறியவும்.

*ஹேதுவானது பக்ஷத்திலிருக்கிறது என்றக்ஞானம் "பக்ஷதர்மதாக்ஞானம்" என்றுசொல்லப்படும். எந்த இடத்தில் ஒருவஸ்துவானது இருப்பதாய் ஊஹிக்கப்படுகின்றதோ அது "பக்ஷம்" எனப்படும். எதைக் கொண்டு ஒன்றை ஊஹிக்கின்ருேமோ அதுஹேது எனப்படும். உதாஹரணம்:—மலை முதலியன பக்ஷம். புகைமுதலியன ஹேதுஎன்று அறியவும்.

अनुमानविशेषान् तन्त्रान्तरलक्षितानभिमतान् स्मारयति—त्रिविध-मनुमानमाख्यातम् इति । तत्=सामान्यतो लक्षितमनुमानं विशेषतस्त्रिविधम्—पूर्ववत्, शेषवत् सामान्यतो दृष्टं चेति। तत्र प्रथमं तावद्द्विविधम्—वीतमवीतं च अन्वयमुखेन प्रवर्तमानं विधायकं वीतम्, व्यतिरेकमुखेन प्रवर्तमानं निषेधकमवीतम् ।

---

பொதுவாய் நிரூபிக்கப்பட்ட அநுமானம் பூர்வவத், சேஷவத், சாமாந்யதோ திருஷ்டம் என்று மூன்று விதமாயிருக்கின்றது. அநுமானத்தை முதலில் வீதமென்றும் அவீதமென்றும் இரண்டு விதமாகப் பிரித்துக் கொள்ளவேண்டும். *அந்வய வியாப்திக் ஞானத்தாலுண்டாகின்ற சாத்திய க்ஞானம் வீதமென்றும், வ்யதிரேக வியாப்தி க்ஞானத்தா லுண்டாகின்ற சாத்தியக்ஞானம் அவீதம்என்றும் சொல்லப்படும். அவற்றுள் அவீதம் என்ற அநுமானம் சேஷவத் எனப்படும். ஏனென்றால்:—சேஷ என்றபதத்திற்கு மீதமுள்ளது என்று பொருள். அதை விஷயமாக்கிக்கொண்டு எந்த அநுமானக்ஞான முண்டாகின்றதோ அது சேஷவத் என்றுசொல்லப்படுகிறது. வாத்ஸ்யாயன நியாய பாஷ்யத்தில் प्रसक्तप्रतिषेधे अन्यत्राप्रसङ्गात् शिष्यमाणे संप्रत्ययः परिशेषः என்று சேஷவத் என்ற அனுமானத்திற்கு லக்ஷணங் கூறியிருக்கிறார்.

---

*வியாப்தி இரண்டுவிதம் 1 அந்வயவியாப்தி. 2 வ்யதிரேகவியாப்தி. ஹேது விருக்கின்ற இடமெல்லாம் சாத்தியமிருப்பதாய் அறிவது அந்வய வியாப்திக்ஞானம். சாத்யமில்லாத விடங்களில் ஹேதுவில்லை என்று அறிவது வ்யதிரேகவியாப்திக்ஞானம். சிலஹேதுக்களில் இரண்டு விதவியாப்த்திக்ஞானமும் சிலஹேதுக்களில் இவற்றுள் ஒன்றுமாத்திரமுமிருக்கலாம். அந்வயவியாப்த்தி சம்பவிக்கின்ற ஹேதுவினால் உண்டாகின்ற அநுமானக்ஞானம் வீதமென்று சொல்லப்படுவதாகவும், வ்யதிரேகவியாப்த்தி மாத்திரம் சம்பவிக்கின்றஹேதுவினால் உண்டாகின்ற அநுமானக்ஞானம் அவீதம் என்று சொல்லப்படுவதாகவும் அறியவேண்டும்.

तत्रावीतं शेषवत्। शिष्यते परिशिष्यते इति शेषः, स एव विषयतया यस्यास्त्यनुमानज्ञानस्य तच्छेषवत्। यदाहुः---"प्रसक्तप्रतिषेधे, अन्यत्राप्रसङ्गात् शिष्यमाणे संप्रत्ययः परिशेषः" इति (वात्स्यायनन्यायभाष्यम्) अस्य चावीतस्य व्यतिरेकिण उदाहरणमग्रेऽभिधास्यते। वीतं द्वेधा—पूर्ववत्, सामान्यतो दृष्टं च। तत्रैकं दृष्टस्वलक्षणसामान्यविषयं यत्तत्पूर्ववत्, पूर्वम्=प्रसिद्धम्, दृष्टस्वलक्षणसामान्यमिति यावत्। तदस्य विषयत्वेनास्त्यनुमानज्ञानस्येति पूर्ववत्। यथा धूमाद्वन्हित्वसामान्यविशेषः पर्वते अनुमीयते, तस्य वन्हित्वसामान्यविशेषस्य स्वलक्षणं वन्हिर्विशेषो दृष्टो रसवत्याम्।

---

இதன் பொருள்:—**प्रसक्त प्रतिषेधे**=எந்தவிடத்தில் எந்த வஸ்து இருக்கக்கூடுமோ அவ்விடத்தில் அஃதில்லை என்று பிரபலப்பிரமாணத்தாலறியப்பட்ட பிறகு **अन्यत्र**=இருக்கக்கூடியதாக ஊஹிக்கப்படும் வேறு இடத்தில் **अप्रसङ्गात्**=இருப்பதற்குப் பிரசக்தியே இல்லாமையால் **शिष्यमाणे**=மீதமுள்ள இடத்தில் **संप्रत्ययः**=இருப்பதாய் ஏற்படும்யதார்த்தக்ஞானம் என்பது. வியதிரேகவியாப்திக் ஞானத்தாலுண்டாகின்றதும், அவீதம் என்று பெயர்கொண்டதுவுமான அநுமானத்திற்கு உதாஹரணம் பின்னர் **असदकरणात्** என்ற 9வதுச்லோகத்தில் தெளிவாய்ச் சொல்லப்படப்போகிறது. பூர்வவத்என்றும், சாமான்யதோ திருஷ்டமென்றும் வீதம் இரண்டுவிதமாகப்பிரிக்கப்படும். அவற்றுள் முதலாவது:-எது அனுமிப்பதற்குமுன் பார்க்கப்பட்டவ்யக்தியிலிருக்கின்ற தர்மமுள்ளதை விஷயமாக்கிக்கொண்டு ஏற்படுகின்றதோ அது "பூர்வவத்" எனப்படும். **पूर्वम्** என்றபதத்திற்கு பிரசித்தம் என்றுபொருள். அதாவது:—அனுமிப்பதற்குமுன் அறியப்பட்ட வஸ்துவிலிருக்கின்ற தர்மமுள்ளது. அத்தகைய தர்மமுள்ளது இந்த அநுமானக்ஞானத்திற்கு விஷயமாகின்றது. ஆனதுபற்றி அது 'பூர்வவத்' எனப்படுகின்றது. உதாஹரணம்:—புகையினுல் வன்ஹித்வம் என்ற தர்மமுள்ள நெருப்பானது மலையில் அனுமிக்கப்படுகின்றது என்று எடுத்துக்கொள்வோம். இவ்விடத்தில் அந்தவன்ஹித்வம் என்ற தர்மமுள்ள

अपरं च वीतं सामान्यतो दृष्टम् अदृष्टस्वलक्षणसामान्यविषयम्। यथाइन्द्रियविषयमनुमानम्। अत्र हि रूपादिविज्ञानानां क्रियात्वेन करणवत्वमनुमीयते। यद्यपि करणत्वसामान्यस्य च्छिदादौ वास्यादि स्वलक्षणमुपलब्धम्, तथापि यज्जातीयं रूपादिज्ञाने करणत्वमनुमीयते तज्जातीयस्य न दृष्टं स्वलक्षणं प्रत्यक्षेण। इन्द्रियजातीयं हि तत्करणम्, न चेन्द्रियत्वसामान्यस्य स्वलक्षणमिन्द्रियविशेषः प्रत्यक्षगोचरोऽर्वाग्दृशाम्, यथा वन्हित्वसामान्यस्य स्वक्षणं वन्हिः। सोऽयं पूर्ववतः सामान्यतो दृष्टात् सत्यपि वीतत्वेन तुल्यत्वे विशे-

---

நெருப்பானது சமயல்செய்யுமிடத்தில் பார்க்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது வீதமான சாமான்யதோ திருஷ்டமென்பது அனுமிப்பதற்குமுன் அறியப்படாதவ்யக்தியினிடமுள்ள தர்மமுள்ளதை விஷயமாயுடையது. உதாஹரணம் இந்திரியமிருப்பதாயனுமிப்பது. அதாவது:—ரூபம் முதலியவற்றைப்பற்றிய அறிவானது கிரியாரூபமாயிருப்பதால் கரணம் (அசாதாரணகாரணம்) உள்ளதாகவே இருக்கவேண்டும் என்று அனுமிக்கப்படுகிறது. இவ்விடத்தில் அனுமிக்கப்படுகின்ற கரணத்வம் என்ற தர்மமுள்ள கரணமானது இதற்குமுன் ஓரிடத்திலும் அறியப்பட்டதல்ல. துண்டிப்பது முதலியக்ரியைகளில் கரணத்வம் என்ற தர்மமுள்ள வாச்சிமுதலிய கரணங்கள் பார்க்கப்பட்டிருக்கின்றன வாயினும் ரூபம்முதலியவற்றைப் பற்றிய அறிவில் எந்தத் தர்மமுள்ளகரணம் அனுமிக்கப்படுகின்றதோ அந்தத்தர்மமுள்ள கரணம் பிரத்யக்ஷமல்ல. நாம் இப்பொழுது அனுமிக்கின்ற கரணமானது இந்திரியத்வம் என்ற தர்மமுள்ளது. அந்த இந்திரியத்வம் என்றதர்மமுள்ள இந்திரியமானது, வந்ஹித்வம் என்ற தர்மமுள்ள நெருப்பானது பிரத்யக்ஷமாயாவதுபோல் யோகப்பயிர்ச்சியற்றவர்க்குப் பிரத்யக்ஷமாயாகுமா? ஆவதில்லை. பூர்வவத், சேஷவத் இரண்டிர்க்கும் வீதம் என்றமுறையில் ஒற்றுமை இருப்பினும் சாமாந்யதோ திருஷ்டானுமானத்தைக் காட்டிலும் பூர்வத்என்ற அனுமானத்திற்குரிய வேற்றுமை இதுவே. सामान्यतो दृष्टम् என்றதின்பொருள்:—दृष्टम्=என்றபதத்

ः। अत्र च दृष्टं=दर्शनम्, सामान्यत इति सामान्यस्य, सार्वविभक्ति-
स्तसिः। अदृष्टस्वलक्षणस्य सामान्यविशेषस्य, दर्शनं सामान्यतो दृष्टमनु-
ानमित्यर्थः। सर्वं चैतदस्माभिर्न्यायवार्तिकतात्पर्यटीकायां व्युत्पादितमिति
िहोक्तं विस्तरभयात् ॥

प्रयोजकवृद्धशब्दश्रवणसमनन्तरं प्रयोज्यवृद्धप्रवृत்तिहेतुज्ञानानुमानपूर्व-
कत्वात् शब्दार्थसंबंधग्रहस्य, स्वार्थसंबंधज्ञानसहकारिणश्च शब्दस्यार्थप्रत्यायकत्वा

---

திற்கு பிரத்யக்ஷம் என்று பொருள். सामान्यतः என்றவிடத்தில் ால்லாவிபக்தியின் அர்த்தத்திலும்வருகின்ற தஸில்பிரத்யயிருக் கின்றது. அனுமானத்திற்கு முன்பார்க்கப்படாதவ்யக்தியிலிருக் கின்ற தர்மமுள்ளதையறிதல் सामान्यतो दृष्टम् என்றதின்பொருள் என்று ஏற்படுகின்றது. இவ்விஷயமெல்லாம் நம்மால் நியாய வார்திகதாத்பர்ய டீகை என்ற புஸ்தகத்தில் நிரூபணஞ் செய் யப்பட்டிருப்பதுபற்றி கிரந்தம் விஸ்தாரமடையுமென்ற பயத் தால் இங்கு விஸ்திரிக்காமல் விடுக்கப்பட்டன.

பிரயோஜகவிருத்தனின் வார்த்தையைக் கேட்டவுடன் பிர யோஜ்யவிருத்தனுக்குப் பிரவிருத்தியுண்டாகின்றது. அவனது பிரவிருத்திக்கு வாக்யார்த்தக்ஞானம்காரணம். பிரவிருத்தி காரணமான க்ஞானத்தை விஷயமாகவுடைய அனுமானத்தை முன்னிட்டே சப்தம் அர்த்தம் இவற்றின் சம்பந்தக் ஞானமுண் டாகின்றபடியாலும், தனது அர்த்தத்துடனுள்ள சம்பந்தத் தின் க்ஞானத்தை சஹாயமாகவுடைய சப்தத்திற்கே அந்தப் போதத்தை யுண்டுபண்ணக் கூடியசக்தி இருப்பதாலும் சப்தப் பிரமாணத்திற்கு அநுமானத்தை முன்னிட்டிருத்தல் அசவசிய மாகின்றது என்ற காரணம்பற்றி அநுமானத்தை நிரூபணஞ் செய்தபிறகு சப்தத்தை நிரூபணஞ் செய்கிறார்:—आप्तश्रुतिराप्तव चनंत्विति।* आप्तवचनं என்ற பதம் லக்ஷ்யத்தைக் குறிக்கின்றது.

---

*'பசுவை அழைத்துவா' என்றது முதலிய வார்த்தைகளைச்சொல்லிக் காரியத்தில் ஏவுகிறவன் பிரயோஜகவிருத்தன் எனப்படுவன். அதை

दनुमानपूर्वकत्वमित्यनुमानानन्तरं शब्दं लक्षयति—"आप्तश्रुतिराप्तवचनं तु" इति। अप्तवचनमिति लक्ष्यनिर्देशः, परिशिष्टं लक्षणम्। आप्ता=प्राप्ता, युक्तेति यावत्। आप्ता चासौ श्रुतिश्चेति आप्तश्रुतिः, श्रुतिः=वाक्यजनितं वाक्यार्थज्ञाम्॥ तच्च स्वतः प्रमाणम्। अपौरुषेयवेदवाक्यजनितत्वेन सकल-

---

ஷீதமுள்ள आप्तश्रुतिः என்ற பதம் லக்ஷணத்தைப் போதிக்கின்றது. आप्त என்றபதத்திற்கு=யுக்தமானது—அதாவது:—பாதிக்கப்படாதபொருளை விஷயமாகவுடையது என்று பொருள். श्रुति என்றபதத்திற்கு வாக்யத்தினல் உண்டுபண்ணப்பட்டவாக்யார்த்தக்ஞானம் என்று பொருள், வேதவாக்யத்தா லுண்டு பண்ணப்பட்ட வாக்யார்த்தக்ஞானம் ஸ்வதப்பிரமாணமாயாகின்றது. ஏனென்றல் வேதம் அபௌருஷேயமா யிருப்பது பற்றி பௌருஷேய வாக்கியங்களுக்குரிய பிரமம், தவறுதல், வஞ்சிக்கவேண்டுமென்ற எண்ணம் முதலிய தோஷங்கள் சம்ப

---

கேட்டு பசுவை அழைத்துவருபவன் பிரயோஜ்யவிருத்தன் எனப்படுவன். ஒருவனது வார்த்தையின் பொருள் அறியப்படவேண்டுமானல் அவ்வார்த்தைக்கும் அப்பொருளுக்குமுள்ள சம்பந்தமறியப்படவேண்டும். அந்தக் ஞானம் வியவஹாரத்தினின்று முண்டாகின்றது. அதாவது:—பசுவைக் கொண்டுவா என்றவிடத்திலுள்ள பசுஎன்றபதத்தின் பொருளறியாதவன் ஒருவன். மற்றும் இருவர் அதன்பொருளையறிந்தவர்கள். அர்த்தமறிந்த இருவருள் ஒருவர் ஒருவரைப்பார்த்துப் "பசுவைக்கொண்டுவா" என்று சொல்வதாக வைத்துக்கொள்வோம். அதுகேட்ட அவன் பசுவைக் கொண்டுவந்து விடுகிறுன். இதைக்கவனித்தவனும், பசுஎன்ற வார்த்தையின்பொருளையறியாதவனுமான மனிதன் பசுவையழைத்து வந்தமனிதனுக்குண்டான பிரவிருத்திக்குப் பசுஎன்ற வார்த்தையாலுண்டான பசுவைப்பற்றிய அறிவேகாரணமாக இருக்கவேண்டுமென்றும், அவ்வறிவு பசுவுக்கும், பசுஎன்றவார்த்தைக்கும் சம்பந்தமில்லாவிடில் சம்பவிக்காதென்றும் ஊஹித்து அதினின்றும் பசு என்ற சப்தத்திற்கும் அதன்பொருளான பசுவுக்கும், உள்ள சம்பந்தத்தை யறிந்துவிடுகிறுன். ஆகவே சப்தப்பிரமாணம் அனுமானத்தை முன்னிட்டதாக ஏற்படுகின்றது என்றறியவும்.

दोषाशङ्काविनिर्मुक्तेर्युक्तं भवति । एवं वेदमूलस्मृतीतिहासपुराणवाक्यजनितमपि ज्ञानं युक्तं भवति । आदिविदुषश्च कपिलस्य कल्पादौ कल्पान्तराधीतश्रुतिस्मरणसंभवः, सुप्तप्रबुद्धस्येव पूर्वेद्युरवगतानामर्थानामपरेद्युः । तथाचआवट्यजैगीषव्यसंवादे भगवान् जैगीषव्यो दशमहाकल्पवर्तिजन्मस्मरणम् आ मन उवाच "दशसु महाकल्पेषु विपरिवर्तमानेन मया" इत्यादिना ग्रन्थसंदर्भेण॥

आप्तग्रहणेनायुक्ताश्शाक्यभिक्षुनिर्ग्रन्थकसंसारमोचकादीनामागमाभासाः परिहृता भवन्ति । अयुक्तत्वं चैतेषां विगानात्, विच्छिन्नमूलत्वात्,

---

விப்பதற்கு இடமில்லை. இவ்விதமே வேதமூலமான ஸ்மிருதி, இதிஹாஸம், புராணம் இவைகளிலுள்ள வாக்கியங்களாலுண்டு பண்ணப்பட்ட க்ஞானமும் யுக்தமாக(பாதிக்கப்படாத பொருளை விஷயமாயுடையதாக) ஆகின்றது. தூங்கி எழுந்தவனுக்கு பூர்வதினத்தில் அநுபவித்த பொருள் மறுதினம் நினைவுக்கு வருவதுபோலவே ஆதியிலுள்ளவரும் சர்வக்ஞருமான கபிலருக்கு வேறு கல்பத்தில் அத்யயனஞ் செய்யப்பட்ட ச்ருதிகளின் நினைவு இக்கல்பத்தின் தொடக்கத்தில் சம்பவிக்கலாம். இவ்விதமே ஆவட்யரும் ஜைகீஷவ்யரும்தத்துவ விசாரஞ் செய்யுங்காலத்து ஆவட்யரை நோக்கி ஜைகீஷவ்யர் "பத்து மஹா கல்பங்களில் சுழலுகின்ற எந்தனால்" என்று சொன்னதிலிருந்து 10 மஹா கல்பங்களிலுள்ள பிறவியின் நினைவு தமக்கிருப்பதாக வெளியிட்டிருக்கிறார். (அவ்விதமாயின் சர்வக்ஞரான கபிலர் விஷயத்தில் சொல்லவும் வேண்டுமோ.)

இந்தச்சுலோகத்தில் ஆப்த என்றபதம் பிரயோகிக்கப்பட்டதிலிருந்து சாக்யன், பிக்ஷு, நிர்க்கிரந்தகன், சம்சாரமோசகன் இவர்களாலுபதேசிக்கப்பட்ட ஆகமங்கள் அயுக்தங்களாக (பாதிக்கப்பட்ட பொருளை விஷயமாயுடையனவாக) இருக்கின்றமை பற்றி பிரமாணகோடியினின்றும் விலக்கப்பட்டதாயாகின்றன. அவைகள் ஒன்றுக்கொன்று முறண்பட்டிருத்தலும், மூலமில்லாதிருத்தலும், பிரமாண விருத்தமான பொருளைச் சொல்லுதலும், பசுவிற்கொப்பானவர்களும், புருஷாபசதர்களு

प्रमाणविरुद्धार्थाभिधानाच्च कैश्चिदेव म्लेच्छादिभिः पुरुषापशदैः परिग्रहाद्धो-द्धव्यम्। तुशब्देनाऽनुमानाद्व्यवच्छिनत्ति। वाक्यार्थो हि प्रमेयो न तु तद्धर्मो वाक्यम्, येन तत्र लिङ्गं भवेत्। न च वाक्यं वाक्यार्थबोधयत् संबंधग्रहणमपेक्षते, अभिनवकविरचितस्य वाक्यस्यादृष्टपूर्वस्याननुभूतचरवाक्यार्थबोधकत्वादिति ॥

एवं प्रमाणसामान्यलक्षणेषु तद्विशेषलक्षणेषु च सत्सुयानि प्रमाणान्तराण्युपमानादीनि प्रतिवादिभिरभ्युपेयन्ते तान्युक्तलक्षणेष्वेव प्रमाणेषु अन्त-

---

மான மிலேச்சன் முதலியோராலேயே ஒப்பப்பட்டிருத்தலுமே அதற்குக்காரணம். **து** என்ற சப்தத்தால் சப்தப்பிரமாணம் அநுமானத்தினின்றும் வேறுபட்டதென்று உபதேசிக்கப்படுகின்றது. சப்தப்பிரமாணத்தில் வாக்கியத்தின் பொருள் பிரமேயமாகின்றதுபற்றி வாக்யம் அதன் தர்மமாகின்றதில்லை. அவ்விதமானாலல்லவா வாக்யமானது வாக்யார்த்தத்தில் ஹேதுவாக ஆகும். ஒரு வாக்யமானது வாக்யார்த்த போதத்தையுண்டுபண்ணும்பொழுது சம்பந்தஞானத்தை எதிர் பார்ப்பதில்லை. புதிதாகக் கவியால் செய்யப்பட்டதும், முன் அநுபவிக்கப்படாததுவுமான வாக்கியமானது முன்னர் அநுபவிக்கப்படாத வாக்யார்த்தபோதத்தை உண்டுபண்ணுகின்றதாயிருப்பது பற்றியும் சுருதிஸ்மிருதிவிருத்தமாயில்லாமைபற்றியும் சிஷ்டர்களாலொப்பக்கூடியதாயிருப்பதுபற்றியும் பிரமாணமாயாகலாம். இவ்விதம் பிரமாணங்களின் பொது லக்ஷணங்களும் விசேஷ லக்ஷணங்களுமிருக்குங்கால் உபமானம் முதலிய வேறு ப்பிரமாணங்களை யொப்பவேண்டியதில்லை. அவைகளும் முற்கூறிய மூன்றுப்பிரமாணங்களிலேயே சேர்த்துவிடக்கூடியனவாயிருக்கின்றன. அதை இனி நிரூபிப்பாம்.

முதலில் உபமானத்தை எடுத்துக்கொள்வோம் "பசு எவ்விதமோ அவ்விதந்தான் கவயமும்" என்ற வாக்கியமே உபமானம். இங்கு "பசு" எவ்விதமோ கவயமும் அவ்விதமே என்ற

भवन्ति। तथाहि—उपमानं तावत् "यथा गौस्तथा गवयः" इति वाक्यम्। तज्जनिता धीः आगम एव। योप्ययं गवयशब्दो गोसदृशस्य वाचक इति प्रत्ययः सोऽप्यनुमानमेव। यो हि शब्दो यत्र वृद्धैः प्रयुज्यते सः असति वृत्त्यन्तरे तस्य वाचकः, यथा गोशब्दो गोत्वस्य। प्रयुज्यते चैवं गवयशब्दो गोसदृशे, इति तस्यैव वाचकः, इति तद्ज्ञानमनुमानमेव। यत्तु गवयस्य चक्षुस्सन्निकृष्टस्य गोसादृश्यज्ञानं तत्प्रत्यक्षमेव। अत एव स्मर्यमाणायां गवि गवयसादृश्यज्ञानं प्रत्यक्षम्। न ह्यन्यद्गवि सादृश्यम्, अन्यच्च गवये भूयोऽवयवसामा-

---

வாக்கியத்தாலுண்டாகும் க்ஞானமானது சாப்தபோதமாகவே அதாவது சப்தத்தாலுண்டாகும் அறிவாகவேயாகும். "இந்த வாக்யத்தில் சொல்லப்பட்ட **गवयः** என்ற சப்தமானது கோவிற் கொப்பான வஸ்துவைச் சொல்லுகின்றது" என்ற யாதொருக் ஞானமுண்டோ அது அநுமானமாகவே கொள்ளப்படலாம். விருத்தர்களால் எந்தவிடத்தில் எந்தசப்தமானது பிரயோகிக் கப்படுகின்றதோ அதற்கு வேறு சக்தியில்லாவிடில் அந்தச் சப்தமானது அவ்விஷயத்திற்கே வாசகமாக ஆகும். "பசு" என்ற சப்தமானது கொத்வத்திற்கே வாசகமாகின்றது. அது போலவே இங்கும் கோவிற்கு சதிருசமான (ஒப்பான) விஷயத் தில் பிரயோகிக்கப்படும் **गवय** என்ற சப்தமானது கோவிற் கொப்பான ஒரு வஸ்துவிற்கு வாசகமாகவேயாகும் என்று ஏற் படுகிறது. என்ற காரணம்பற்றி "**गवय** சப்தமானது கோவிற் கொப்பானதற்கு வாசகம்" என்ற தாலுண்டாகும் க்ஞானமா னது அனுமானப் பிரமாணமாயாகலாம். கண்ணிற் கெதிரி லுள்ள **गवय** விஷயமாக கோவிற்குச்சமானம் கவயம் என்ற யாதொரு கோசாதிருச்யக்ஞானமுண்டோ அது பிரத்யக்ஷ மாகவே யாகின்றது. ஆகையால்தான் நினைவிற்றோன்றும் (விஷயமாகும்) பசுவில் உண்டாகும் கோசாதிருச்யக்ஞானம் வேறு, **गवय** த்திலுண்டாகும் சாதிருச்யக்ஞானம் வேறு என்று சொல்வதற்கில்லை. பெரும்பாலும் அவயவங்களுடைய அசா தாரண தர்மங்களின் சேர்க்கையானது முக்கிய அவயவியின்

न्ययोगो हि जात्यन्तरवर्ती जात्यन्तरे सादृश्यमुच्यते। सामान्ययोगश्च एकः सचेद्गवये प्रत्यक्षो गव्यपि तथेति न उपमानस्य प्रमेयान्तरमस्ति, यत्र प्रमाणान्तरमुपमानं भवेत्, इति न प्रमाणान्तरमुपमानम् ॥

एवमर्थापत्तिरपि न प्रमाणान्तरम्। तथाहि—जीवतश्चैत्रस्य गृहाभावदर्शनेन बहिर्भावस्यादृष्टस्य कल्पनमर्थापत्तिरभिमता वृद्धानाम्। साप्यनुमानमेव। यदा खल्वव्यापक एकत्रास्ति तदान्यत्र नास्तीति सुकरः स्वशरीरे

---

ரூபமுள்ள வேறு வஸ்துவிலிருந்தால் அது வேறு ஜாதியிலுள்ள சாதிருச்யம் என்று சொல்லப்படும். அசாதாரண தர்மத்தின் சேர்க்கையானது ஒன்றாகவே இருக்கின்றது. அந்த அசாதாரண தர்மத்தின் சேர்க்கையானது கவயத்தினிடம் பிரத்தியக்ஷமானால் கோவிலும் அவ்விதமே பிரத்யக்ஷமாகலாம். ஆதலால் உபமானத்திற்குப் பிரமேயம் (விஷயம்) இல்லாமலாகிவிட்டது. அதற்கென்று தனியாய் ஒரு பிரமேயமிருந்தால் அல்லவா உபமானத்தையும் பிரமாணமாகக் கொள்ளக்கூடும். ஆகவே உபமானம் தனிப்பிரமாணமாக வாகாதென்று ஏற்பட்டது.

இவ்விதமே 'அர்த்தாபத்தி' என்பதும் வேறுபிரமாணமல்ல. எவ்விதமெனின்:—ஜீவனுடன்கூடிய சைத்திரன் என்றுபெயர் பூண்டஒருமனிதனை 'வீட்டிலில்லை' என்று நேரில் காண்பதால் நேரில்காணப்படாத வெளிதேச சம்பந்தத்தை அவனிடமறிவது 'அர்த்தாபத்தி' என்று பெரியோர்களின் சம்மதி. அவ்விதமறிவது மனுமானமே. எங்குமிருக்கக்கூடிய நிலையிலில்லாத வஸ்துவானது எப்பொழுது ஓரிடத்திலில்லையோ அப்பொழுது வேறு இடத்திலிருக்கவேண்டும்; எங்கும் வியாபித்திருக்கக் கூடியநிலையிலில்லாதவஸ்துவானது எப்பொழுது ஓரிடத்திலிருக்கின்றதோ அப்பொழுது வேறு இடத்திலிருக்காதென்று தனது சரீரத்திலேயே வியாப்திக்ஞானம் சுலபமாயுண்டாகலாம். ஆகவே ஜீவித்திருக்கிற புருஷனிடம் வீட்டிலில்லாமையை யறிவது என்ற ஹேதுவால் அவனிடம் வெளிதேசத்

व्याप्तिग्रहः । तथाच सतो गृहाभावदर्शनेन लिङ्गेन बहिर्भावदर्शनमनुमानमेव । नच चैत्रस्य क्वचित्सत्वेन गृहाभावश्शक्योऽपन्होतुम्, येनाऽसिद्धो गृहाभावो बहिर्भावे न हेतुस्स्यात् । नच गृहाभावेन वा सत्वमपन्हूयते, येन सत्वमेवानुपपद्यमानमात्मानं न बहिरवस्थापयेत् । तथाहि—चैत्रस्य गृहासत्वेन सत्वमात्रं विरुध्यते ? गृहसत्वं वा, न तावद्यत्र क्वचन सत्वस्यास्ति विरोधो गृहाऽसत्वेन, भिन्नविषयत्वात् । "देशसामान्येन गृहविशेषाक्षेपोपि पाक्षिक इति समानविष-

---

*தின் சம்பந்தத்தை அறிவது அனுமானமே. சைத்திரன் என்றவனிடம் யாதானுமோர் தேச சம்பந்தமிருப்பதுபற்றியே வீட்டிலில்லாமையை மறைக்கமுடியுமா? அவ்விதமாயின் வீட்டிலில்லாமை என்பது சித்தமாகாமல் வெளிதேச சம்பந்தத்தை யறிவதில் ஹேதுவாயாகாமலிருக்கும். வீட்டிலில்லாமையால் இருக்குகையே பாதிக்கப்படுமா? அவ்விதமாயின் இருக்குகை என்ற தர்மமே பொருந்தாமைபற்றி வெளிதேச சம்பந்தம் சித்திக்காமல் போய்விடலாம். (மேற்சொல்லிய இரண்டுகக்ஷிகளும் சம்பவிக்கிறதில்லை) ஏனென்றால்—சைத்திரன் என்ற மனிதனிடமுள்ள வீட்டிலில்லாமையோடு இருக்குகை என்ற தர்மமே விரோதத்தை யடைகின்றதா? வீட்டிலிருக்குகை விரோதத்தையடைகிறதா? (இவற்றுள் முதல்கக்ஷி சரியில்லை.) ஏனென்றால்:—வீட்டிலில்லை என்றக் ஞானத்திற்கும், பொதுவில் "இருக்கின்றது" என்றக் ஞானத்திற்கும் விஷயம் வேறுபட்டிருப்பதால் யாதானும் ஓர் தேசத்திலிருக்குகைக்கு வீட்டிலில்லாமையோடு விரோதங்கிடையா. சைத்திரன் பொதுவில் யாதானுமோர் இடத்திலிருக்கவேண்டுமென்று சித்தித்தவுடன் "சாமான்யமெல்லாம் விசேஷமின்றி முடிவுபெறாது" என்ற நியாயப்படி வீடுஎன்ற தேசவிசேஷமும் ஒருசமயம் கிரஹித்துக்கொள்ளப்படலாமாதலால் முற்கூறியக் ஞானங்கட்கு விஷயம் ஒன்றாகின்றமை பற்றி விரோதமிருப்பதாய்ச் சொல்லுவோமோ மெனில் அவ்விதஞ் சொல்வதற்கில்லை. ஏனெனில்:—நீ சொல்லுகிறபடி சைத்திரனிடம் சம்பவிக்கின்ற வீட்டின் சம்பந்தம் ஒரு சமயத்தில் ஏற்படக்கூடியது பற்றி சம்சயக்ஞானத்திற்கு விஷயமாகின்றது. அதனைக்கொண்டு*

यत्तया विरोधः " इति चेत् न । प्रमाणविनिश्चितस्य गृहेऽसत्वस्य पाक्षिकतया सांशयिकेन गृहसत्वेन प्रतिक्षेपायोगात् । नापि प्रमाणनिश्चितो गृहाभावः पाक्षिकमस्य गृहसत्वं प्रतिक्षिपन् सत्वमपिप्रतिक्षेप्तुं सांशयिकत्वं च व्यपनेतुमर्हतीति युक्तम् । गृहावच्छिन्नेन चैत्राभावेन गृहसत्वं विरुद्धत्वात्प्रतिक्षिप्यते। नतुसत्वमात्रम्। तस्य तत्रौदासीन्यात् । तस्माद्गृहाभावेन लिङ्गेन सिद्धेन सतो बहिर्भावोऽनुमीयत इति युक्तम् । एतेन " विरुद्धयोः प्रमाणयोः विषयव्यवस्थयाऽविरोधापादनमर्थापत्तेर्विषयः " इति निरस्तम् । अवच्छिन्नानवच्छिन्नयोर्विरोधाभावात् । उदाहरणान्तराणि चार्थापत्तेरेवमेवानुमानेऽन्तर्भावनीयानि । तस्मान्नानुमानात्प्रमाणान्तरमर्थापत्तिरिति सिद्धम् ॥

---

*பிரத்யக்ஷ பிரமாணத்தால் நிச்சயிகப்பட்ட வீட்டிலில்லாமையை நிஷேதித்தல் தகாது. பிரத்யக்ஷப் பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்ட வீட்டிலில்லாமையானது ஒருசமயம் சம்பவிக்கக்கூடிய வீட்டிலிருக்குகையை நிஷேதிப்பது பற்றி 'இருக்குகை' என்றபொது தர்மத்தையே நிஷேதித்துவிடச் சமர்த்தமாகுமா? சைத்திரனிடமுள்ள வீட்டிலில்லாமையால் வீட்டிலிருக்குகை மாத்திரம் விருத்தமானதுபற்றி பாதிக்கப்படுகிறது. இருக்குகை என்ற பொது தர்மமும் பாதிக்கப்படுவதில்லை. ஏனெனில் அக்காரியத்தைச் செய்வதில் அதற்குச் சாமர்தியங்கிடையா. ஆதலால் வீட்டிலில்லாமை என்ற நிச்சயிக்கப்பட்ட ஹேதுவால் இருக்குகை என்ற பொதுதர்மமுள்ள மனிதனுக்கு வெளிதேச சம்பந்த மனுமிக்கப்படுகிறது என்பதே பொருந்துகின்றது. ஆகவே மேற்சொல்லிய யுக்திகளால் "விருத்தமானப் பிரமாணங்களுக்கு விஷயங்களை தனித்தனியே பிரித்துக் காண்பித்து விரோதபரிஹாரஞ் செய்து வைப்பதே அர்த்தாபத்தியின் பிரமேயம்" என்று சொல்லும் வாதமும் தள்ளப்பட்டதாயாகின்றது. எவ்விதமெனின்:—சுத்தத்திற்கும் விசேஷண முள்ளதற்கும் விரோதங்கிடையா. அர்த்தாபத்தியின் மற்ற உதாஹரணங்களையும் இவ்விதமே அனுமானத்திலடக்கிவிடவேண்டும். ஆதலால் அனுமானத்தைவிட அர்த்தாபத்தி வேறுப்பிரமாணமல்லவென்று சித்தித்தது.*

एवमभावोऽपि प्रत्यक्षमेव । न हि भूतलस्य परिणामविशेषात्कैवल्यलक्षणादन्यो घटाभावो नाम । प्रतिक्षणपरिणामिनो हि सर्व एव भावाः ऋते चितिशक्तेः । स च परिणामभेद ऐन्द्रियक इति नास्ति प्रत्यक्षानवरुद्धो विषयः, यत्राभावाह्वयं प्रमाणान्तरमभ्युपेयेतेति ॥ संभवस्तु—यथा खार्यी

---

* இவ்விதமே "அபாவம்" என்றப் பிரமாணமும் பிரத்யக்ஷப் பிரமாணமே. அதனிலும் வேறு பட்டதல்ல. குடத்தின் இல்லாமை என்பது கைவல்யம் என்று சொல்லக்கூடிய பூதலத்தின் ஓர்வித பரிணம (மாறுதல்) த்தைக்காட்டிலும் வெறாக இருக்கின்றதா? இல்லை. ஆத்மவஸ்துவைத் தவிர்த்து மற்ற வஸ்துக்கள் ஒவ்வொருக்ஷணமும் மாறிக்கொண்டேயல்லவா இருக்கின்றன. அத்தகைய பூதலத்தின் ஓர்விதமான பரிணமம் இந்திரியத்திற்கு விஷயமாகின்றமையால் பிரத்யக்ஷத்திற்குப் புலப்படக்கூடாத விஷயங்கிடையா. அவ்விதமிருந்தாலல்லவா "அபாவம்" என்ற வேறுப் பிரமாணத்தை அங்கிகரிக்கலாம். ஆதலால் அபாவம் என்று வேறு ப்பிரமாணங்கிடையா.

சம்பவம் என்பது ஓர் தனிப்பிரமாணம்; அதனுல் முக்குருணி நெல்லில் பதக்கு, குருணி, படி இவை முதலியவற்ருளக்கக்கூடிய நெல் இருப்பதாய் அறியப்படுகின்றது என்று சிலர் சொல்லுகின்றனர். அதுவும் அனுமானப் பிரமாணமே. ஏனென்ருல்:—முக்குருணியானது பதக்கைவிட்டுப் பிரிந்திராது என்று அறியப்பட்டால் முக்குருணியில் பதக்கு இருப்பதாக அறியப்படுகின்றது. ஆதலால் இது அனுமானம் என்ருேம்.

---

*ஒருவஸ்துவின் இல்லாமை என்பது தனிப்பட்டவஸ்து. அதிகரணத்திலும் வேறுபட்டது. அது "அனுபலப்த்தி, அபாவம்" என்று சொல்லப்படும் பிரமாணத்தால் அறியப்படுகின்றது என்று சில தர்சனக்காரர்கள் சொல்லுகின்றனர். இல்லாமையென்றே அதிகரணத்திலும் தனியாக இல்லாததால் அதை அறிவதற்காக வேறுப்பிரமாணம் வேண்டியதில்லை, என்று கண்டிக்கப்படுகின்றது.

द्रोणाढकप्रस्थाद्यवगमः। स चानुमानमेव। खारीत्वं हि द्रोणाद्यविनाभूतं प्रतीतं खार्यां द्रोणादिसत्त्वमवगमयति ॥ यच्चानिर्दिष्टप्रवक्तृकं प्रवादपारंपर्यमात्रम्—"इति होचुर्वृद्धाः" इत्यैतिह्यम्, यथा "इह वटे यक्षः प्रतिवसति" इति न तत्प्रमाणान्तरम्, अनिर्दिष्टप्रवक्तृकत्वेन सांशयिकत्वात्। आप्तवक्तृकत्वनिश्चये त्वागम एव। इत्युपपन्नं "त्रिविधं प्रमाणम्" इति ॥ ९ ॥

एवं तावद्व्यक्ताव्यक्तज्ञलक्षणप्रमेयसिद्ध्यर्थं प्रमाणानि लक्षितानि। तत्र व्यक्तं पृथिव्यादि स्वरूपतो पांसुलपादको हालिकोऽपि प्रत्यक्षतः प्रतिपद्यते, पूर्ववताचानुमानेन धूमादिदर्शनाद्वह्न्यादीनिचेति, तद्व्युत्पादनाय मन्द-

---

ஐதிஹ்யம் என்று ஓர் தனிப்பிரமாணம்; அது இன்னரால் சொல்லப்பட்டது என்று குறிப்பாய்த் தெரியாமல் "இவ்விதம் பெரியோர் சொன்னார்கள்" என்று பரம்பரையாய் வியவஹாரிக்கப்பட்டுவரும் வாக்கியம்; உதாஹரணம்:—"இவ்வாலமரத்தில் யக்ஷன் வசிக்கின்றான்" என்பது முதலியன. அவை தனிப்பிரமாணமல்ல. அவ்வதந்தி இன்னரால் கிளப்பப்பட்டது என்று தெரியாததால் அவ்வாக்யத்தால் சொல்லப்படுகின்ற பொருளில் சந்தேஹமுண்டாகின்றது. அவ்விதம் சந்தேஹத்தை யுண்டு பண்ணக்கூடிய வாக்யம் பிரமாணமாகவே ஆகமாட்டாது. அல்லது ஆப்தனால் சொல்லப்பட்டதென்று நிச்சயமிருக்குமாயின் அது சப்தப்பிரமாணமாகவே யாகின்றது. ஆதலால் அது தனிப்பிரமாணமல்ல. ஆகவே "மூன்றுதான் பிரமாணம்" என்று பிரதிக்ஞைசெய்தது உசிதமே.

ஆறுவது சுலோகம்.

(அ-கை) இவ்விதம் சென்ற சுலோகத்தால் வியக்தம், அவ்யக்தம், ஞன் என்றப்பிரமேயங்கள் சித்திப்பதற்காகப் பிரமாணங்கள் லக்ஷணங்கள் வாயிலாக நிரூபிக்கப்பட்டன. அவைகளுள் வியக்தம் என்று சொல்லப்படும் பிருதிவீ முதலியவற்றை புழுதி படிந்த கால்களையுடையவனும், கலப்பை எடுத்து உழுது ஜீவிப்

प्रयोजनं शास्त्रमिति दुरधिगममनेन व्युत्पाद्यम् । तत्र यत्प्रमाणं यत्र शक्तं तदुक्तलक्षणेभ्यः प्रमाणेभ्यो निष्कृष्य दर्शयति—

मू० ॥ सामान्यतस्तु दृष्टादतीन्द्रियाणां प्रतीतिरनुमानात् ।
तस्मादपिचासिद्धं परोक्षमाप्तागमात्सिद्धम् ॥ ६ ॥

सामान्यत इति । तु शब्दः प्रत्यक्षपूर्ववद्भ्यां विशिनष्टि । सामान्यतो दृष्टादनुमानादतीन्द्रियाणां प्रधानपुरुषादीनां प्रतीतिः—चितिच्छायापत्ति

---

*பவனும், பயிர் செய்பவனுமான சமான்யமனிதனும் பிரத்ய க்ஷமா யறிகின்றான். பூர்வவத் என்ற அனுமானத்தால் (புகை முதலியதைக் காணுவதால்) நெருப்பு முதலியவற்றை அறிகிறான். ஆதலால் வியக்தங்களைப் போதிப்பதற்காகச் சாஸ்திரமாரம் பிக்கப் பட்டிருப்பதாய் அங்கீகரிப்போமாயின் சாஸ்திரம் பெரிய பயனையுடைய தாயாகாதானது பற்றி சுளுவில் அறிவதற்கு முடியாதவைகளே இந்தச் சாஸ்திரத்தால் போதிக்கப்படுகின்றன என்று அங்கீகரிக்கவேண்டும். முன்கூறிய பிரமாணங்களுள் எந்தப் பிரமாணம் எந்த விஷயத்தைப் போதிப்பதில் சக்தியுள் ளதோ அதை முன் சொல்லிய லக்ஷணமுள்ளப் பிரமாணங்களி னின்றும் பிரித்துக் காண்பிக்கிறார்.*

(ப-ரை) **अतीन्द्रियाणाम्**=இந்திரியங்களுக்குப் புலப்படக்கூ டாத வஸ்துக்களுக்கு **सामान्यतो दृष्टात्**, **अनुमानात्**=சாமான்யதோ திருஷ்டம் என்ற அனுமானத்தினால் **प्रतीतिः**=அறிவு (**भवति**=உண் டாகின்றது) **तस्मादपि**=அதனாலும் **असिद्धम्**=அறியப்படாததும் **परोक्षम्**=பரோக்ஷமானதுவுமான வஸ்துவானது **आप्तागमात्**=யுக்த மான சப்தப்பிரமாணத்தினால் **सिद्धम्**=அறியப்படுகின்றது.

(தா-ம்) இவ்விடத்தில் **तु** என்ற சப்தம் போடப்பட்டிருப்ப தால் பிரத்யக்ஷம், பூர்வவத் என்ற அனுமானம் இவைகளினின் றும் ஸாமான்ய தோதிருஷ்டம் வேறுபட்ட தன்மையுள்ளது என்று சூசிப்பிக்கப்படுகின்றது. அத்யவசாய ரூபமான சாமான்ய

बुद्धेरध्यवसाय इत्यर्थः। उपलक्षणं चैतत्, 'शेषवतः' इत्यपि द्रष्टव्यम्। तत्किं सर्वेष्वतीन्द्रियेषु सामान्यतो दृष्टमेव प्रवर्तते? तथाच यत्र तन्नास्ति महदाद्यारंभक्रमे, स्वर्गापूर्वदेवतादौ च तत्र तेषामभावः प्राप्त इत्यत आह—तस्मादपीति। तस्मादित्येतावतैव सिद्धे चकारेण शेषवदित्यपि समुच्चितम् ॥ ६ ॥

स्यादेतत्, यथा गगनकुसुमकूर्मरोमशशविषाणादिषु प्रत्यक्षमप्रवर्त-

---

தோதிருஷ்டம் என்ற அனுமானத்தால் இந்திரியங்களுக்குப் புலப்படக்கூடிய யோக்கியதையற்ற பிரகிருதி புருஷன் இவைகளைப்பற்றியக் ஞானமுண்டாகின்றது, அதாவது:—பிரகிருதி, புருஷன் இவற்றைப்பற்றிய புத்தி விருத்தியில் சைதன்யத்திற்குப் பிரதிபலன முண்டாகின்றது. அதுவே அத்யவசாயமென்று சொல்லப்படும். सामान्यतोदृष्टम् என்றுசொன்னதை உபலக்ஷணமாக வைத்துக்கொண்டு சேஷவத் என்ற அனுமானத்தையும் கிரஹித்துக் கொள்ளவேண்டும். ஆகவே சாமான்யதோ திருஷ்டம், சேஷவத் என்ற அனுமானம் இவைகளால் அதீந்திரியமான வஸ்துக்கள் அறியப்படுகின்றன என்று ஏற்படுகின்றது. அதீந்திரியமான வஸ்துக்கள் யாவற்றிலும் சாமான்ய தோதிருஷ்டம் என்ற அனுமானம் தான் பிரமாணமா? அவ்விதமாயின்,—எந்த வஸ்துக்களில் சாமான்ய தோதிருஷ்டம் என்ற அனுமானம் பிரவிருத்திக்கிறதில்லையோ—பிரகிருதியினின்றும் மஹத்தத்துவ முண்டாகின்றது, மஹத்தத்துவத்தினின்றும் அஹங்காரம் என்ற தத்துவ முண்டாகின்றது என்றக்கிரமம்; ஸ்வர்க்கம், அபூர்வம், தேவதை முதலியவற்றில்—அவைகிடையா என்றே அல்லவா தீர்மானிக்க வேண்டிவரும் என்று சந்தேஹித்துப்பதிலளிக்கிறார்:—तस्मादिति। तस्मादसिद्धम् என்று சொன்னாலே போதுமாயினும் च என்ற பதம் போடப்பட்டிருப்பதால் சேஷவத் என்ற அனுமானத்தையும் கிரஹித்துக் கொள்ளவேண்டும். ஆகவே சாமான்ய தோதிருஷ்டம் என்ற அனுமானம் சேஷவத் என்ற அனுமானம் இவைகளாலறியப்படாத வஸ்துக்கள் சப்தப்பிரமாணத்தாலறியப்படுகின்றன. (எ-று)

मानं तदभावमवगमयति, एवं प्रधानादिष्वपि । तत्कथं तेषां सामान्यतोदृष्टादिभ्यस्सिद्धिरित्यत आह—

मू०॥ अतिदूरात्सामीप्यादिन्द्रियघातान्मनोऽनवस्थानात् ।
सौक्ष्म्याद्व्यवधानादभिभवात्समानाभिहाराच्च ॥ ७ ॥

अतिदूरादिति । अनुपलब्धिरिति वक्ष्यमाणं सिंहावलोकनन्यायेनानुषंजनीयम् । यथा उत्पतन्वियति पतत्री अतिदूरतया सन्नपि प्रत्यक्षेण नोप-

---

ஏழாவது சுலோகம்.

(அ - கை) இவையெல்லா மிருக்கட்டும். ஆகாச புஷ்பம், ஆமையின் உரோமம், முயல் கொம்பு முதலியவைகள் பிரத்யக்ஷத்தால் அறியப்படாததால் அவை இல்லை என்றே எவ்விதம் நிர்மாணிக்கிறோமோ அவ்விதமே பிரதானம் முதலியனவும் பிரத்யக்ஷத்தால் அறியப்படாததால் அவை இல்லை என்றே ஏன் நிர்மாணிக்கக்கூடாது. ஆகவே பிரதானம் முதலியவைகள் சாமான்யதோ திருஷ்டம் என்ற அனுமானத்தால் சித்திக்கின்றன என்பது எங்ஙனம்? என்று சந்தேஹித்துப் பதிலளிக்கிறார்:—

(ப - ரை) अतिदूरात्=மிகவும் தூரத்திலிருக்குகையாலும், (अति) सामीप्यात्=மிகவும் கிட்டத்திலிருக்குகையாலும் इन्द्रियघातात्=இந்திரியங்களின் கெடுதியாலும் मनोऽनवस्थानात्=மனத்திற்கு கிரஹிக்கின்ற இந்திரியத்துடன் மட்டும் சேர்க்கை இல்லாததாலும் सौक्ष्म्यात्=மிகவும் சிறியதாக இருக்குகையாலும் व्यवधानात्=மறைவாலும் अभिभवात्=பிரபலமான மற்றொன்றால் அடக்கப்படுவதாலும் समानाभिहाराच्च=ஒரேமாதிரியாக இருக்குகையாலும் अनुपलब्धिः=புலப்படாமை (भवति=உண்டாகின்றது.)

(தா-ம்) सौक्ष्म्यात्तदनुपलब्धिः என்ற சுலோகத்திலிருக்கின்ற अनुपलब्धिः என்ற *பதத்தை "சிங்கத்தின் பார்வை" என்ற நியா

---

* சிங்கமானது ஓர் இடத்திலிருந்து கொண்டே சரீரத்தைத் திருப்பாமல் கழுத்தை மாத்திரம் நான்குதிக்குகளிலும் திரும்பிப்பார்த்து

लभ्यते । सामीप्यादित्यत्राप्यतिरनुवर्तनीयः । यथा लोचनस्थमंजनमतिसामीप्यान्नदृश्यते । इन्द्रियघातः=अंधत्वबधिरत्वादिः । मनोऽनवस्थाना द्यथा—कामाद्युपहतमनाः स्फीतालोकमध्यवर्तिनमिन्द्रियसन्निकृष्टमर्थं न पश्यति । सौक्ष्म्याद्यथा—इन्द्रियसन्निकृष्टं परमाण्वादि प्रणिहितमना अपि न पश्यति । व्यवधानाद्यथा—कुड्यादिव्यवहितं राजदारादि न पश्यति । अभिभवाद्यथा—अहनि सौरीभिर्भाभिरभिभूतं ग्रहनक्षत्रमण्डलं न पश्यति ।

---

யத்தால் இந்தச் சுலோகத்திலும் சேர்த்துக்கொள்ளவேண்டும் ஓர்வஸ்துவானது உண்மையிலிருந்த போதிலும் அது புலப்படாமலிருப்பதற்குக் கூறிய காரணங்களுக்கு முறையே உதாஹரணங்கள் கூறப்படுகின்றன. (१) अतिदूरात् என்றதற்கு உதாஹரணம்:— ஆகாசத்தில் மேலே வெகுதூரம்பரந்து சென்ற பக்ஷியானது உண்மையில் இருந்தபோதிலும் "அதிகதூரம்" என்ற தோஷத்தால் பிரத்யக்ஷமாய் அறியப்படுவதில்லை. (२) सामीप्यात् என்றதற்கு உதாஹரணம்—सामीप्यात् என்ற விடத்திலும் अति என்ற பதத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஆகவே நமது கண்ணில் இடப்பட்டமையானது நமக்கு அதிக சமீபத்திலிருத்தலால் பிரத்யக்ஷமாய் அறியப்படுவதில்லை. (३) इन्द्रियघातात् என்றதற்கு உதாஹரணம்:—கண் காது முதலிய இந்திரியங்கள் பொட்டை, செவிடு முதலிய தோஷமுள்ளதா யிருக்குமாயின் ரூபம் முதலியவைகள் பிரத்யக்ஷமாய் அறியப்படுவதில்லை. (४) मनोऽनवस्थानात् என்றதற்கு உதாஹரணம்:—பெண்டீர்களிடத்து மிக்க ஆசை முதலியவற்றால் ஆக்கிரமிக்கப்பட்ட மனத்தையுடையவன் வஸ்துவானது அதிக வெளிச்சத்திலிருந்தபோதிலும் மனத்திற்கு அந்த வஸ்துவைக் கிரஹிப்பதில் ஒருமைப்படுதலில்லா

---

வஸ்துக்களை அறிந்துகொள்ளும். ஆகவே சிங்கத்தின் திருஷ்டியானது ஓர் இடத்திலிருந்துக்கொண்டே எவ்விதம் பலவிடங்களில் சஞ்சரிக்கின்றதோ அவ்விதமே अनुपलब्धिः என்றபதமும் ஓர் இடத்தில் படிக்கப்பட்டிருந்தபோதிலும் பலவிடங்களிற் சஞ்சரிக்கின்றது.

समानाभिहाराद्यथा—तोयदविमुक्तान् जलबिंदून् जलाशये न पश्यति । चकारो अनुक्तसमुच्चयार्थः । तेनानुद्भवोऽपि संगृहीतः । तद्यथा क्षीराद्यवस्थायां दध्याद्यनुद्भवान्न पश्यति । एतदुक्तं भवति । न प्रत्यक्षनिवृत्तिमात्राद्वस्त्वभावो भवति । अतिप्रसङ्गात् । तथाहि गृहाद्विनिर्गतो गृहजनमपश्यंस्तदभावं निश्चिनुयात् । नत्वेवम् । अपितु योग्यप्रत्यक्षनिवृत्तेरयमभावं निश्चिनोति । नच

---

மையால் அதைப் பிரத்யக்ஷமாய் அறிவதில்லை. (௫) सौक्ष्म्यात् என்றதற்கு உதாஹரணம்:—இந்திரியத்தின் சமீபத்திலிருந்தபோதிலும் பரமாணு முதலியவைகள் மிகவும் சிறிதாக இருப்பதால் மனத்தை ஒருமைப்படுத்திக் கவனிப்பவனாலும் பிரத்யக்ஷமாயறியப்படுவதில்லை. (௬) अभिभवात् என்றதற்கு உதாஹரணம்:—பகலில் கிரஹம், நக்ஷத்திரம், முதலியவைகள் ஸூரியனின் கிரணங்களாலடக்கப்பட்டிருக்கின்றமையால் பிரத்யக்ஷமாய் அறியப்படுவதில்லை. (௭) समानाभिहारात् என்றதற்கு உதாஹரணம்:—மேகத்தால் பொழியப்பட்ட ஜலத்திவிலைகள் ஏரியில் "ஒரேவிதமாக இருக்குகை" என்றகாரணத்தால் (ஏரியின் ஜலமும் மழை ஜலமும் ஒருவிதமாகவே இருக்கின்றது) பிரத்யக்ஷமாய் அறியப்படுவதில்லை. இங்குசொல்லிய காரணங்களைத்தவிர வேறான காரணத்தையும் கிரஹித்துக்கொள்வதற்காக च என்ற பதம் போடப்பட்டிருக்கிறது. அதனால் அனுத்பவம் (வெளிப்படாதிருத்தல்) என்றகாரணம் கிரஹித்துக்கொள்ளப்பட்டதாயாகின்றது உதாஹரணம்—பாலில் தயிரானது வெளிப்படாதிருத்தல் என்றகாரணத்தால் அறியப்படுவதில்லை.

இவ்வளவு சொன்னதிலிருந்து இச்சமாசாரம் சொல்லப்பட்டதாயாகின்றது. அதாவது:—பிரத்யக்ஷமாய் அறியப்படுவதில்லை என்றகாரணத்தாலேயே ஓர் வஸ்துவின் இல்லாமையை நிச்சயித்தல் முடியாது. அவ்விதமங்கீகரித்தால் மிகுந்ததோஷங்கள் பிரசங்கிக்கும். எவ்விதமெனில்— வீட்டிலிருந்துவெளியிற் சென்றவன் வீட்டிலிருக்கின்றபிள்ளை, மனைவிமுதலியோரை நேரில்பார்க்காமையால் அவர்கள் வீட்டிலில்லை என்றே நிச்சயிக்க

प्रधानपुरुषादीनामस्ति प्रत्यक्षयोग्यता, इति नतन्निवृत्तिमात्रात्तदभावनिश्चयो युक्तःप्रामाणिकानामिति ॥ ७ ॥

कतमत्पुनरेतेषु कारणं प्रधानादीनामनुपलब्धावित्यत आह—

मू० ॥ सौक्ष्म्यात्तदनुपलब्धिर्नाभावात्कार्यतस्तदुपलब्धेः ।
महदादि तच्च कार्यं प्रकृतिसरूपं विरूपं च ॥ ८ ॥

सौक्ष्म्यादिति । अभावादेव सप्तमरसवदेतेषामनुपलब्धिः कथं न

---

வேண்டிவரும். அவ்விதமோ நமது அனுபவமில்லை. பின்னை யோவெனில் முற்கூறிய 8விதமான காரணமில்லாமைபற்றி பிரத்யக்ஷயோக்யதை பெற்றவஸ்துவானது பிரத்யக்ஷவிஷயமாயாகாவிடில் இந்தப்புருஷன் அந்தவஸ்துவின் இல்லாமையைத் தீர்மானிக்கிறான். பிரதானம், புருஷன் இவைகளுக்கோ பிரத்யக்ஷயோக்யதைகிடையாது. ஆதலால் பிரத்யக்ஷத்திற்குப் புலப்படாமை என்றகாரணத்தாலேயே பிரதானம், புருஷன் இவைகளினில்லாமையை நிச்சயித்தல் ஆராய்ச்சிக்காரர்களுக்குத் தகுதியல்ல. (எ - று)

## எட்டாவது சுலோகம்

(அ - கை) முன் சொல்லியகாரணங்களுள் எத்தகையகாரணத்தால் பிரதானம், புருஷன் இவைகள் இந்திரியங்களால் புலப்படுவதில்லை? என்றால் பதிலளிக்கிறார்,—

(ப - ரை) **तदनुपलब्धिः**=பிரதானம், புருஷன் இவைகளின் புலப்படாமையானது **सौक्ष्म्यात्**=சூக்ஷ்மமாயிருத்தலால் (அவயவமற்றிருத்தலால்) **भवति**=ஏற்படுகின்றது **कार्यतः**=காரியங்களினின்றும் **तदुपलब्धेः**=பிரகிருதி அறியப்படுகின்றமையால் **नाभावात्**=இல்லாமையால் இல்லை. **तच्चकार्यम्**=பிரகிருதியை அறிவிக்கின்றகாரியம் **महदादि**=மஹத்தத்துவம் முதலியன. (**तत्**=அந்தக்காரியம்) **प्रकृतिसरूपम्**=சில அம்சங்களில் பிரகிருதிக்குச் சமானமாயும் **विरूपंच**=சில அம்சங்களில் பிரகிருதிக்கு வேறுபட்டதாயுமிருக்கும்.

भवतीत्यत आह—नाभावादिति। कुतः, कार्यतस्तदुपलब्धेः। "तत्" इति प्रधानं परामृशति। पुरुषोपलब्धौ तु प्रमाणं वक्ष्यति "संघातपरार्थत्वात्" (कारिका १७) इति। दृढतरप्रमाणावधारिते हि प्रत्यक्षमप्रवर्तमानं अयोग्यत्वान्न प्रवर्तत इति कल्प्यते। सप्तमस्तु रसो न प्रमाणेनावधारितइति न तत्र प्रत्यक्षस्यायोग्यता शक्याध्यवसितुमित्यभिप्रायः। किंपुनस्तत्कार्यं, यतः प्रधानानुमानमित्यत आह—महदादितच्चकार्यमिति। एतच्च यथागमकं तथोपरिष्टादुपपादयिष्यते। तस्य च कार्यस्य विवेकज्ञानोपयोगिनी सारूप्य-

---

(தா - ம்) பிரகிருதியானது சூக்ஷ்மமாயிருப்பதுபற்றி இந்திரியங்களுக்குப் புலப்படக்கூடிய நிலையிலில்லை. ஏழாவதானரசம் போல் இல்லாமையாலேயே ஏன்புலப்படாமைகூடாது, என்று சந்தேஹித்துப் பதிலளிக்கிறார் :—नाभावादिति காரியங்களால் அஃதிருபப்தாய் ஊஹிக்கப்படுகின்றமையால் இல்லை என்றே தீர்மானித்தல்தகாது. तदुपलब्धेः என்றவிடத்தில் तत्=என்ற சப்தம் பிரதானத்தைக்குறிக்கின்றது. புருஷனை அனுமிப்பதற்கு வேண்டிய ஹேதுக்களை संघातपरार्थत्वात् என்ற சுலோகத்தால் சொல்லப்போகிறார். ஆகவே திருடமான வேறுபிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்டபொருள் இந்திரியங்களுக்குப் புலப்படாவிடின் அஃது இந்திரியங்களுக்குப் புலப்படக்கூடிய யோக்யதையைப்பெறாமையால் அவ்விதம் புலப்படவில்லை என்றுகல்பிக்கிறோம். ஏழாவதானசுவையோவெனின் வேறு எந்தப்பிரமாணத்தினாலும் நிச்சயிக்கப்பட்டதில்லை யாதலால் அவ்விஷயத்தில் பிரத்யக்ஷயோக்யதையின் இல்லாமையை நிச்சயித்தல் முடியாதென்று மொத்தமான கருத்து. பிரதானமிருப்பதாய் அறிவதற்கு ஹேதுவானகாரியம் யாது? என்றால் சொல்லுகிறார்:—महदादितच्चकार्यमिति மஹத்தத்துவம் முதலியகாரியங்கள் எவ்விதம் பிரகிருதியைச்சாதிக்கின்றனவோ அவ்விதம் பின்னர்சொல்லுவாம். அக்காரியங்களைப் பகுத்தறிவதற்குச்சாதனமான ஒற்றுமைவேற்றுமைகளைச் சொல்லுகிறார். प्रकृतिसरूपं विरूपंचेति। இன்னின்ன அம்சத்தில் பிரகிருதியுடன் ஒற்றுமை என்றும் இன்

वैरूप्ये आह—प्रकृतिसरूपं विरूपं च इति। एतेतूपरिष्टाद्विभजनीय इति ॥

कार्यात्कारणमात्रं गम्यते। सन्ति चात्रवादिनां विप्रतिपत्तयः। तथा-हि—केचिदाहुः 'असतः सज्जायते' इति, 'एकस्य सतो विवर्तः कार्यजातं, न वस्तु सत्' इत्यपरे, अन्ये तु 'सतः असज्जायते' इति, 'सतः सज्जायते' इति वृद्धाः। तत्र पूर्वस्मिन् कल्पत्रये प्रधानं न सिद्ध्यति। सुखदुःखमोह-

---

ளின்ன அம்சத்தில் வேற்றுமை என்றும் பின்னர் பிரித்துக்காண் பிப்பாம்.

ஒன்பதாவது சுலோகம்

(அ - கை) * காரியத்தினின்றும் காரணம் ஒன்று இருக்க வேண்டும் என்றுமட்டுமே அறியப்படுகின்றது. இவ்விஷயத்தில் வாதிகளின் பலவிதமான கக்ஷிகள் இருக்கின்றன. அவை யாவன:— சிலர் இல்லாமையினின்றும் இருக்கின்ற வஸ்து உண்டாகின்றது என்கின்றனர். † "எல்லாக் காரியங்களும் சத்தான (மூன்றுகாலத்திலு மிருக்குகையுள்ள) ஒரு வஸ்துவின்

---

* விதையின் முன் நிலேநாசமடைந்தபிறகே முளை வெளிக்கிளம் புவதை நாம் யாவரும் அனுபவத்தில் கண்டிருக்கிறோம். ஆதலால் விதையின்நாசமே முளைக்குக் காரணமாகின்றமையால் இல்லாமையி னின்றுமே சத்தானகாரியங்கள் யாவும் உண்டாகின்றன என்று பௌத் தர்களின் சித்தாந்தம்.

†विषमसत्ताकान्यथाभावो विवर्तः என்று அதன் சொரூபத்தைச்சொல் லி இருக்கின்றனர். பழுதை பாம்பாகத் தோன்றுகின்ற இடத்தை எடுத் துக்கொள்வாம். இவ்விடத்தில் பழுதையே உண்மையாக உள்ளது; பாம்பு இல்லாதது. பழுதையில் பாவிக்கின்ற பாம்பு விவர்த்தம் எனப்படும். இவ்விதமே உலகிலுள்ள எல்லாப்பொருள்களும் பிரும்மத்தின் விவர்த்த மாகின்றன என்று வேதாந்திகளின் மதம். சத்வஸ்துவான மண்முதலிய வற்றினின்றும் காரணங்களின் வியாபாரமுண்டாவதற்குமுன் இல்லாத குடம் முதலியவைகள் உண்டாகின்றன என்று தார்க்கிகர்களின் மதம் இங்கு நான்காவதாகச் சொல்லியதே சாங்கியமதம்.

भेदवत्स्वरूपपरिणामशब्दाद्यात्मकं हि जगत्कारणस्य प्रधानत्वं सत्वरजस्तमस्स्वभावत्वमवगमयति। यदि पुनरसतस्सञ्जायते असन्निरुपाख्यं कारणं सुखादिरूपशब्दाद्यात्मकं कथं स्यात्, सदसतोस्तादात्म्यानुपपत्तेः। अथैकस्य सतः विवर्तः शब्दादिप्रपञ्चः तथापि सतस्सञ्जायत इति न स्यात्। नचास्याद्वयस्य

---

விவர்த்தமே யல்லாது காரியம் உண்மையில் இருக்கின்றதல்ல" என்று மற்றுஞ் சிலர் சொல்லுகின்றனர். "சத்தான வஸ்துவினிடமிருந்து காரணவியாபாரமுண்டாவதற்கு முன் இல்லாத காரியம் உண்டாகின்றது" என்று சிலர் சொல்லுகின்றனர். "சத்வஸ்துவினிடமிருந்து உண்டாவதற்கு முன்னும் இருக்கின்றவஸ்துவே உண்டாகின்றது" என்று மற்றுஞ் சில பெரியோர்கள் சொல்லுகின்றனர். இங்கு சொல்லிய முன் மூன்று கக்ஷிகளில் பிரதானமிருப்பதாய்ச் சித்திக்காது ஏனென்றால்:—* சுகம், துக்கம், மோஹம் என்ற பிரிவினைகளுள்ளதாகவும்; சுவரூப பரிணமம், சப்தம் முதலிய குணங்கள் இவை முதலியவைகளுள்ளதாகவும் ஜகத்திருப்பதால் அதன் காரணமும் சத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குண முள்ளதாகவே

---

* (3) சத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் சரியான அளவுள்ளதாய் இருக்கின்றதும், "பிரதானம் பிரகிருதி" என்று சொல்லப் படுகின்றதுவுமான வஸ்து ஜகத்காரணமாயிருக்கின்றது என்பது சாங்கியசித்தாந்தம். அவ்விதமவர்கள் சொல்லுவதற்குப் பிரமாணம் அனுமானம். அதாவது:—உலகிலுள்ள வஸ்துக்கள்யாவும் சுகம், துக்கம், மோஹம் என்கிற சத்வம், ரஜஸ், தமஸ், என்ற மூன்றுவிதமான பிரிவினையுள்ளதாக இருப்பதாலும், சுவரூபத்தின்மாறுதல், சப்தம்முதலிய குணம் இவைமுதலியவைகளுள்ளதாயிருப்பதாலும் அதன் காரணம் முக்குணவடிவமாகவே இருக்கவேண்டுமென்று ஊஹிக்கப்படுகின்றது. அது காரியம், காரணம் இவைகட்குத்தாதாத்ம்ய (ஒருமைப்படுதல்) த்தை அங்கீகரித்து கார்யம், காரணங்கள் ஒருங்குசேர்ந்து அததற்குரிய வேலையைச் செய்யுமுன்னும் இருக்கிறதென்று அங்கீகரித்தால்தான் சித்தியாகும். காரணங்களில் காரியமில்லை என்று சொன்னால் சித்தியாகாது என்றறியவும்.

प्रपञ्चात्मकत्वम् । अपित्वप्रपञ्चस्य प्रपंचात्मकतया प्रतीतिर्भ्रम एव। येषामपि कणभक्षाक्षचरणादीनां सत एव कारणादसतो जन्म तेषामपि सदसतोरेकत्वानुपपत्तेर्न कार्यात्मकं कारणमिति न तन्मते प्रधानसिद्धिः। अतः प्रधानसिद्ध्यर्थं प्रथमं तावत्सत्कार्यं प्रतिजानीते

---

இருக்கவேண்டும் என்று ஊஹிக்கிறோம். இல்லாமையினின்றும் சத்வஸ்து உண்டாகுமாயின் 'நிருபாக்யம்' என்று சொல்லக்கூடிய "இல்லாமை" என்ற காரணம் சுகம், துக்கம், மோஹம், சப்தம் இவையுள்ள ஜகத்தாக எவ்விதம் மாறக்கூடும்? இல்லாமைக்கும், இருக்குகையுள்ள வஸ்துவிற்கும் தாதாத்ம்யம் (ஒருமைப்படுதல்) சம்பவிக்காதே? ஆதலால் முதல்கக்ஷியை யனுசரித்தால் பிரகிருதி சித்திக்காது. "உண்மையில் இருக்கின்ற ஒரு வஸ்துவின் விவர்த்தம் சப்தம் முதலியலோகம்" என்று அங்கீகரித்தாலும் இருக்குகை யுள்ளதினின்றும் உண்டாவதற்கு முன்னும் இருக்கின்ற வஸ்துவே உண்டாகின்றது என்று சித்தியாது. ஏனெனில் பிரும்மமோ உண்மையில் இரண்டாவது வஸ்து இல்லாததாக இருக்கின்றது. ஆதலால் அதற்குப் பிரபஞ்சரூபமடைதல் சம்பவிக்காது. பின்னையோவெனின் உண்மையில் பிரபஞ்சரூபமற்றப் பிரும்மத்திற்கு பிரபஞ்சவடிவமாய் பாஸித்தல் பிரமமென்றே அங்கீகரிக்கவேண்டும். ஆதலால் விவர்த்தவாதத்தில் காரியம் காரணம் இவைகட்குத் தாதாத்ம்யம் சம்பவிக்காதானது பற்றி மூன்று குணமுள்ளதாய் ஜகத்திருப்பதால் காரணமும் அவ்விதமே இருக்கவேண்டும் என்ற அனுமானமூலம் பிரகிருதி சித்திக்காது. சத்தான காரணத்தினின்றுமே உண்டாவதற்கு முன் இல்லாத வஸ்துவானது உண்டாகின்றது என்று சொல்லும் கணாதர், கௌதமர் இவர்களின் மதப்படிப்பார்த்தாலும் சத்வஸ்துவிற்கும், அசத்வஸ்துவிற்கும் தாதாத்ம்யம் சம்பவிக்காதாகையால் கார்யத்துடன் ஒருமைப்படுதல் காரணத்திற்கு இல்லாமைபற்றி பிரதானம் சித்திக்காது. ஆகையால் பிரதானஞ் சித்திப்பதற்காக கார்யம் உண்டாவதற்குமுன்னும் இருக்கின்றதென்று பிரதிக்ஞைசெய்கின்றார்:—

मू० ॥ असदकरणादुपादानग्रहणात्सर्वसंभवाभावात् ।
शक्तस्य शक्यकरणात् कारणभावाच्च सत्कार्यम् ॥ ९ ॥

असदकरणादिति । सत्कार्यम्—कारणव्यापारात्प्रागपीति शेषः । तथाच न सिद्धसाधनं नैय्यायिकनयैरुद्भावनीयम् ॥ यद्यपि बीजमृत्पिण्डादिप्रध्वंसानन्तरमङ्कुरघटाद्युपलब्धिरुपलभ्यते, तथापि न प्रध्वंसस्य कारणत्वम् ।

---

(ப - ரை) **असदकरणात्**="இருக்குகை" என்ற தர்மமில்லாதவஸ்துவிற்குப்பிறகு "இருக்குகையை" உண்டுபண்ணுவது அசாத்யமாதலாலும், **उपादानग्रहणात्**=(குடத்திற்குமண்ணும், வஸ்திரத்திற்கு நூலும் உபாதானம் எனப்படும். இவ்விதமே மற்றக்காரியங்களிலுமறியவும்) அத்தகைய உபாதானகாரணத்துடன்சம்பந்தமிருப்பதாலும் **सर्वसंभवाभावात्**=எல்லாக்காரியங்களுக்கும் எல்லாக்காரணங்களிலும் உற்பத்தி இல்லாமையாலும் **शक्तस्य**=சக்தியுள்ளதற்கு **शक्यकरणात्**=உண்டாகக்கூடிய பொருளிருந்தால்தான் உண்டாக்கும் தன்மை சம்பவிப்பதாலும் **कारणभावाच्च**=காரணத்துடன் ஒருமைப்படுதலாலும் **कार्यम्** = உண்டாகின்றவஸ்து **सत्**=இருக்கின்றது.

**सत्कार्यम्** என்றதற்குமுன் **कारणव्यापारादपि** என்றதைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். (எந்தெந்தக் காரணங்கள் எந்தெந்தவிதமானக் காரியத்தைச் செய்தால் முக்கியமான காரியமுண்டாகுமோ அது காரணவியாபாரம் எனப்படும். உதாஹரணமாகக் குடத்தை எடுத்துக்கொள்வோம். அதற்குக் குயவன், சக்கிரம், மண் முதலியவைகள் காரணமாகின்றன. அவைகளுள் குயவன் தனது வியாபாரமான—மண்ணைக் கொண்டுவருவது, துவைப்பது, சக்கிரத்தில் எடுத்துவைப்பது முதலியவற்றைச் செய்யவேண்டும். சக்கிரம் சுழலவேண்டும் இவை முதலியவைகள் காரணவியாபாரம் எனப்படும் இவை உண்டாவதற்கு முன்னரும் குடம் முதலிய காரியங்கள் உபாதான காரணமான மண் முதலியவற்றில் இருக்கின்றன.) காரண

अपितु भावस्यैव बीजाद्यवयवस्य। अभावात्तु भावोत्पत्तौ, तस्य सर्वत्र सुलभत्वात् सर्वदा सर्वकार्योत्पादप्रसङ्ग इत्यादि न्यायवार्तिकतात्पर्यटीकायामस्माभिः प्रतिपादितम्। प्रपंचप्रत्ययश्चासति बाधके न शक्यो मिथ्येति वदितुमिति।

---

வியாபார முண்டாவதற்கு முன்னும் காரியமிருக்கின்றது என்று சாதிப்பதால் தார்க்கிகர்கள் *சித்தசாதனம் என்ற தோஷத்தைச் சுமத்த இடமில்லாமலாகின்றது விதை, மண்ணுருண்டை முதலியவைகள் நாசமடைந்தபிறகே முளை, குடம் முதலியவைகள் உண்டாகின்றன என்பதுண்மையே. ஆயினும் அவைகளின் நாசம் காரணமாவதில்லை. இருக்குகை என்ற தர்மமுள்ள விதை முதலியவற்றின் அவயவத்தையே உபாதானகாரணமாக அங்கிகரிக்கிறோம். இல்லாமையினின்றும் இருக்குகையுள்ள வஸ்துவானது உண்டாகுமாயின் இல்லாமை என்பது எங்கும் இருக்குமாதலால் எல்லாவிடத்திலும் எல்லாவிதமான காரியமும் உண்டாகவேண்டி நேரிடும் என்பது முதலிய தூஷணங்கள் நியாய வார்த்திக தாத்பர்ய டீகையில் நம்மால் சொல்லப்பட்டிருக்கின்றன. வேதாந்திகளின் சித்தாந்தமும் ஏற்கத்தக்கதல்ல. ஏனென்றால்:—"நாம் அறிந்தது தவறு" என்று பாதக்ஞானமுண்டாகாமலிருக்கும் பொழுது எவ்விதம் லோகத்தைப் பற்றிய அறிவைப்பொய் என்று நிராகரிப்பது? ஆதலால் வேதாந்திகளின் மதமும் சரியானதல்ல. கணாதரின் மதமும் கௌதமரின் மதமும் மிஞ்சுகின்றது.—முதலில், காரியம் காரண வியாபாரமுண்டாவதற்கு முன்னுமிருப்பதாய் பிரதிக்ஞை செய்யப்பட்டது. அதற்கு ஹேதுவைச் சொல்லுகிறார்:—

---

* காரியம் காரணவியாபார முண்டாவதற்கு முன்னும் இருக்கின்றது என்று சாதிக்காமல் பொதுவில் இருக்கின்றது என்று மட்டும் சாதித்தால் நையாயிகர்கள் தாமும் காரியத்தை உண்டானபிறகு இருப்பதாகவே அங்கிகரிப்பதால் "எம்மால் அங்கிகரிக்கப்பட்டதையே நீர் சாதிக்கின்றீர்" என்று தோஷங்கூறுவார்கள். அதற்காக "காரணவியாபார முண்டாவதற்கு முன்னும்" என்றதைச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

कणभक्षाक्षचरणमतमवशिष्यते । तत्रेदं प्रतिज्ञातम्—"सत्कार्यम्" इति । अत्र हेतुमाह—"असदकरणात्" इति । असच्चेत् कारणव्यापारात्पूर्वं कार्यम्, नास्य सत्वं कर्तुं केनापि शक्यम्, नहि नीलं शिल्पिसहस्रेणापि पीतं कर्तुं शक्यते । 'सदसत्वे घटस्य धर्मौ' इति चेत्—तथाप्यसति धर्मिणि न तस्य धर्म इति सत्वं तदवस्थमेव । तथाच नासत्वम् । असंबद्धेन अतदात्मना-चासत्वेन कथमसन् घटः ? तस्मात्कारणव्यापारादूर्ध्वमिव ततः प्रागपि सदेव

---

असदकरणादिति । காரணவியாபார முண்டாவதற்கு முன்கார்யம் 'இருக்குகை' என்றதர்மமில்லாததாக இருக்குமாயின் அதற்குஅத் தர்மத்தைப் பின்னரும் ஏற்படுத்தமுடியாது. நீலரூபமுள்ளதை ஆயிரம் தொழிலாளர்கள் ஒருங்கு சேர்ந்தாலும் சிவப்புநிற முள்ளதாகச் செய்யமுடியுமா ? சங்கை:—இருக்குகை இல்லா மை இரண்டும் கார்யத்தின் தர்மங்கள். அதுகார்யத்தினும்வேறு பட்டது. ஆதலால் கார்யத்திற்கு ஒருசமயத்தில் இல்லாமை என்ற தர்மமும், ஒருசமயத்தில் இருக்குகை என்றதர்மமும் சம்பவிக்கலாம் எனின். உத்தரம்:—தர்மி இல்லாவிடில் அதன் தர்மமும் இராது. ஆதலால் காரியமுண்டாவதற்குமுன் இருந்தே தீரவேண்டும். (அதாவது:—குடமானது காரணவியாபார முண்டாவதற்குமுன் "இல்லாமை" என்றதர்ம முள்ளதாக இருக்கவேண்டுமானல் காரணவியாபாரமுண்டாவதற்குமுன்னும் குடம் இருக்கின்றது என்று அங்கீகரிக்கவேண்டும். அவ்வித மங்கீகரிக்காவிடில் இல்லாமை என்றதர்மமே குடத்திற்குச் சம்ப விக்காது. அவ்விதமிருப்பதாயங்கீகரிப் போமாயின் காரண வியாபாரத்திற்குமுன் கார்யமில்லாமலிருக்கின்றது என்றவாதம் பொருந்தாது.) அசத்வம் (இல்லாமை) என்றதர்மமானது ஒன்று கார்யத்துடன் சம்யோகம் என்றசம்பந்தமுள்ளதாக இருக்கவே ண்டும், அல்லது காரியஸ்வரூபமாகவே இருக்கவேண்டும். இவ்விர ண்டுவிதமுமில்லாவிடில் குடத்தை எவ்விதம் 'அசத்' என்றுசொல் வது. ஆதலால் காரணவியாபார மேற்பட்டபிறகுபோலவே அதற் குமுன்னும் காரியம் இருக்குகையுள்ளதாகவே இருக்கின்றது.

कार्यमिति। कारणाच्चास्य सतोऽभिव्यक्तिरेवावशिष्यते। सतश्चाभिव्यक्तिरुपपन्ना, यथा पीडनेन तिलेषु तैलस्य, अवघातेन धान्येषु तण्डुलानाम्, दोहनेन सौरभेयीषु पयसः, असतः करणेतु न निदर्शनं किञ्चिदस्ति। न खल्वभिव्यज्यमानं (चोत्पद्यमानंवा?) क्वचिदसद्दृष्टम्॥

इतश्च कारणव्यापारात्प्राक् सदेव कार्यम्—"उपादानग्रहणात्" उपादानानि=कारणानि, तेषां ग्रहणं=कार्येण संबन्धः। उपादानैः कार्यस्य संबंधादिति यावत्। एतदुक्तं भवति—कार्येण संबद्धं कारणं कार्यस्य जनकम्, संबंधश्च कार्यस्याऽसतो न भवति, तस्मादिति॥

---

ஆகவே காரணவியாபாரத்தினால் சத்தான காரியத்திற்கு அபிவ்யக்தி (புலப்படக்கூடியதிலே) உண்டாகின்றது என்றவாதந்தான் மிஞ்சுகின்றது. சத்தானவஸ்துவுக்கு அபிவ்யக்தி சம்பவிக்கலாம். உதாஹரணம்:—நன்றாய்க்கசக்குவதால் எள்ளில் எண்ணெயும், குத்துவதால் நெல்லில் அரிசியும். கரப்பதால் பசுவினிடம்பாலும் வெளிப்படுகின்றது. இல்லாதவஸ்து உண்டாவதிலோ எவ்வித திருஷ்டாந்த முங்கிடையா. அபிவியக்தியை யடைகின்ற வஸ்துவையோ காரணவியாபாரமுண்டாவதற்கு முன் இல்லாததாகக் கண்டதில்லே. ஆதலால் கார்யம் காரணவியாபார முண்டாவதற்கு முன் இருக்கின்றது என்று சித்தித்தது.

இனி சொல்லப்படும் இரண்டாவதான காரணத்தினாலும் கார்யம் காரணவியாபார முண்டாவதற்கு முன்னும் இருக்குகை யுள்ளதே. அதாவது—உபாதான காரணத்துடன் காரியத்திற்கு சப்பந்த மிருக்கின்றது. அதாவது—கார்யத்துடன் சம்பந்தம் பெற்ற உபாதான காரணமே கார்யத்தை யுண்டுபண்ணுகின்றது. காரண வியாபாரத்திற்கு முன் கார்யம் இல்லாவிடில் காரண சம்பந்தம் சம்பவிக்காது. ஆதலால் கார்ய முண்டாவதற்கு முன்னும் இருக்குகையுள்ளதே.

स्यादेतत्। असंबद्धमेव कार्यं कारणैः कस्मान्नजन्यते ? तथाचासदेवोत्पद्यत इत्यत आह—"सर्वसंभवाभावात्" इति। असंबद्धस्य जन्यत्वे असंबद्धत्वाविशेषेण सर्वं कार्यजातं सर्वस्माद्भवेत्। नचैतदस्ति। तस्मान्नासंबद्धमसंबद्धेन जन्यते, अपितु संबद्धं संबद्धेन जन्यत इति। यथाहुस्सांख्यवृद्धाः—

असत्वे नास्ति संबन्धः कारणैस्सत्वसंगिभिः।
असंबद्धस्यचोत्पत्तिमिच्छतो न व्यवस्थितिः॥ इति॥

---

சங்கை:— இஃதெல்லாமிருக்கட்டும். காரியசம்பந்த மற்றக் காரணங்களால் காரியம் ஏன் உண்டுபண்ணப்படக்கூடாது? ஆகவே இல்லாத வஸ்துவேதான் உண்டாகின்றது என்கிறோம் எனின் சொல்லுகிறார் सर्वसंभवाभावात् इति காரியம் காரண சம்பந்தமின்றியே உண்டாகின்றது என்றால் எல்லாவிதமான காரியமும் எல்லாவிதமான காரணத்தினின்றும் உண்டாகலாமன்றோ? நாமிதை அநுபவத்தில் காணவில்லை. ஆதலால் சம்பந்தமற்றக் காரியம் சம்பந்தமற்றக்காரணத்தால் உண்டுபண்ணப்படுவதில்லை. பின்னே யோவெனின் சம்பந்தமுள்ளக்காரியம் சம்பந்தமுள்ளகாரணத்தால் உண்டாகின்றது—இவ்விதமே சாங்கியசாஸ்திரத்தில் பயிற்சிபெற்றவிருத்தர்கள் असत्वेनास्तिसंबंधः என்றதால் சொல்லியிருக்கின்றனர். அதன்பொருள்—असत्वे=காரியம் காரண வியாபாரமுண்டாவதற்குமுன் இல்லாமலிருந்தால் सत्वसङ्गिभिः=இருக்குகையுள்ளதோடு சம்பந்தத்தை யடைகின்ற कारणैः=காரணங்களோடு संबन्धः=சம்பந்தம் नास्ति=சம்பவிக்காது. असंबद्धस्यच=காரணசம்பந்தமற்றதற்கும் उत्पत्तिम्=உத்பத்தியை इच्छतः=விரும்புவோருக்கு नव्यवस्थितिः=விபவஸ்தை சம்பவிக்காது.

காரியசம்பந்த மற்ற சத்தான காரணமும் தனக்கு எதை உண்டுபண்ணக்கூடிய சக்தி இருக்கின்றதோ அதைத்தான் உண்டு பண்ணுகின்றது என்று அங்கீகரிக்கிறோம். அந்தச் சக்தியானது காரியமுண்டாவதிலிருந்து தான் அறியக் கூடியது. ஆத

स्यादेतत्—असंबद्धमपि सत् तदेव करोति यत्र यत्कारणं शक्तम्। शक्तिश्च कार्यदर्शनादवगम्यते। तेत नाव्यवस्थेत्यत आह—"शक्तस्य शक्यकरणात्" इति। सा शक्तिः शक्तकारणाश्रया सर्वत्र वास्यात् शक्ये एव वा? सर्वत्र चेत्तदवस्थैवाव्यवस्था। शक्येचेत्कथमसति शक्ये तत्र, इति वक्तव्यम्। शक्तिभेद एव एतादृशो यतः किंचिदेवकार्यं जनयेत् न सर्वमिति-चेत्—हन्त भोः शक्तिविशेषः कार्यसंबद्धोवा, असंबद्धोवा? संबद्धत्वे नासता संबंधः इति सत्कार्यम्। असंबद्धत्वे सैवाव्यवस्था, इति सुष्ठूक्तम् "शक्तस्य शक्यकरणात्" इति ॥

---

லால் வியவஸ்தைக்குப் பங்கம் நேரிடாது என்று சந்தேஹித்துப் பதிலளிக்கிறூர்—शक्तस्य शक्यकरणादिति। காரியத்தை உண்டு பண்ணக்கூடிய சக்தி காரணத்தைப் பற்றி இருப்பதாக இருந்தபோதிலும் அந்தச் சக்தி எங்குமிருக்கின்றதா உண்டாகின்ற வஸ்துவின் சம்பந்தமுள்ள இடத்தில் மட்டுமிருக்கின்றதா? எங்குமிருக்கின்றது என்று அங்கீகரித்தால் முன்சொல்லிய "வியவஸ்தையில்லாமை" என்றதோஷம் பிரசங்கிக்கும். உண்டாகின்ற வஸ்துவுள்ள இடத்தில் மட்டுமிருப்பதாய் அச்சக்தியை அங்கீகரிக்கிறோம் என்பதும் பொருந்தாது. உண்டாகக்கூடிய வஸ்துவானது உண்டாவதற்கு முன் இல்லை என்றால் அவ்வஸ்துவுள்ள இடத்தில் சக்தி இருப்பதாய் எவ்வித மங்கீகரிப்பது? சங்கை—எல்லா வஸ்துக்களிலும் பொதுவாய் யாதானும் ஓர்வித சக்தி இருக்கின்றதாயினும் அந்தச்சக்திகள் ஓர்விதமாக இல்லாமல் பலவிதமாயிருக்கின்றன. ஆனதுபற்றியே கார்யம் பலவிதமாக உண்டாகின்றது எனின் உத்தரம்—மண்முதலிய காரணத்தில் குடம் முதலிய காரியத்தை உண்டுபண்ணக்கூடிய சக்தியானது கார்யசம்பந்தமுள்ளதா? இல்லையா? சக்தி காரியசம்பந்தமுள்ளது என்றால் இல்லாத காரியத்துடன் சம்பந்தம் சம்பவிக்காதானது பற்றி காரியம் காரணவியாபாரமுண்டாவதற்கு முன்னுமிருக்கின்றதாகவே சித்திக்கின்றது. காரியசம்பந்தமில்லாவிடில் முன் சொல்லிய

इतश्च सत्कार्यमित्याह—कारणभावाच्च=कार्यस्य कारणात्मकत्वात्। नहि कारणाद्भिन्नं कार्यम्, कारणं च सत् इति कथं तदभिन्नं कार्यमसत् भवेत्॥ कार्यस्य कारणाभेदसाधनानि च प्रमाणानि—(१) न पटस्तन्तुभ्यो भिद्यते, तन्तुधर्मत्वात्। इह यद्यतो भिद्यते तत्तस्य धर्मो न भवति, यथा गौरश्वस्य। धर्मश्च पटस्तन्तूनाम्, तस्मान्नार्थान्तरम्। (२) उपादानोपादेयभावाच्च नार्थान्तरत्वं तन्तुपटयोः। ययोरर्थान्तरत्वं न तयो रुपादानोपादेयभावः, यथा

---

வியவஸ்தை இல்லாமையே சம்பவிக்கின்றது. ஆதலால் **शक्तस्य शक्यकरणात्** என்று சொன்னது மிக்கப் பொருத்தமுள்ளதாகவே இருக்கின்றது.

இனிச்சொல்லப்போகின்ற ஐந்தாவது ஹேதுவினாலும் காரியமுண்டாவதற்குமுன் இருப்பதாகவே சித்திக்கின்றது. அதாவது:—காரியம் காரணத்துடன் ஒருங்கு பட்டதாகவே இருக்கின்றது; காரணத்தினும் காரியம் வேறுபட்டதல்ல. காரணமோ சத்தாக (இருக்குகை யுள்ளதாக) இருக்கின்றது. ஆதலால் காரணத்தினும் வேறுபடாத காரியம் அசத்தாக எவ்விதமிருக்கக் கூடும். கார்யம் காரணத்தினும் வேறுபட்டதில்லை என்பதைச் சாதிக்கின்றப் பிரமாணங்களாவன:—வஸ்திரம் நூலின்தர்மமாயிருப்பதால் நூலினும் வேறுபட்டதல்ல. எது எதனினும் வேறுபட்டதோ அது அதன் தர்மமாயாவதில்லை உதாஹரணம்:—பசுவும் குதிரையும் வேறுபட்டிருப்பதால் குதிரையின் தர்மமாகப்பசுவாவதில்லை. (இங்குதர்மம் என்றபதத்திற்கு பரிணாமம், அல்லது காரணத்தின்வேறு நிலை என்று பொருள் கொள்ளவேண்டும்) வஸ்திரமோ நூற்களின் தர்மமாக இருக்கின்றது. ஆதலால் வஸ்திரம் நூற்களினும் வேறுபட்டதல்ல. (2) நூலிற்கும், வஸ்திரத்திற்கும் உபாதானம், உபாதேயம் என்றதன்மை இருப்பதாலும் இரண்டும் வேறுபட்டதல்ல (வஸ்திரத்திற்கு நூலும், குடத்திற்கு மண்ணும் உபாதானம் எனப்படும். இவ்விதமே மற்றக்காரியங்களுக்கும் முக்கியகாரணத்தை உபாதானமென்றறியவேண்டும்.

घटपटयोः । उपादानोपादेयभावश्च तन्तुपटयोः । तस्मान्नार्थान्तरत्वम् । (३) इतश्च नार्थान्तत्वं तन्तुपटयोः, संयोगाऽप्राप्त्यभावात् । अर्थान्तरत्वे हि संयोगो दृष्टः; यथा कुण्डबदरयोः, अप्राप्तिर्वा; यथा हिमवद्विन्ध्ययोः । न चेह संयोगा-प्राप्ती, तस्मान्नार्थान्तरत्वमिति । (४) इतश्च पटस्तन्तुभ्यो न भिद्यते, गुरुत्वान्तरकार्याग्रहणात् । इह यद्यस्माद्भिन्नम्, तस्मात्तस्य गुरुत्वान्तरं कार्यं गृह्यते, यथा एकपलिकस्य स्वस्तिकस्य यो गुरुत्वकार्योऽवनतिविशेषः, तस्मा-

---

உண்டாகின்ற குடம், வஸ்திரம் முதலியகாரியங்கள் உபாதேயம் எனப்படும். ஆகவே இதற்கு இது உபாதானம், இதற்கு இது உபாதேயம் என்று வியவஹாரமிருப்பதால் காரியம் காரணத்தி லும் வேறுபட்டதல்ல) எந்த இரண்டுவஸ்துக்களும் வேறுபட்ட வைகளோ அவைகட்கு உபாதானோ பாதேயபாவங்கிடையா உதாஹரணம்—குடம், வஸ்திரம் இரண்டையுமெடுத்துக் கொள் வோம். அவ்விரண்டும் வேறுபட்டிருப்பதால் உபாதானோபாதே யபாவத்தை யடைகிறதில்லை. நூலிற்கும் வஸ்திரத்திற்குமோ உபாதானோபாதேய பாவமிருக்கின்றது. ஆதலால் நூலும் வஸ்தி ரமும் வேறுபட்டதல்ல. (3) இனிச்சொல்லப்போகின்ற மூன் றாவது காரணத்தாலும் நூலிற்கும் வஸ்திரத்திற்கும் பேதங்கி டையா. அதாவது—சம்யோகம் (சேர்க்கை) விபாகம் (பிரிவு) இவையில்லாமையாலும் அவைகட்கு வேற்றுமைகிடையா. வேற்றுமை இருக்குமாயின் அவ்விரண்டிற்கும் பாத்திரத்திற்கும் இலந்தைப்பழத்திற்கும் போல் சம்யோகத்தையோ, ஹிமாலயம் விந்தியம் இவைகட்குப்போல் பிரிவையோ அங்கீகரிக்கவேண்டி நே ரிடும். நூலிற்கும்,வஸ்திரத்திற்குமோ சம்யோகம், விபாகம் இரண் டும் சம்பவிக்கிறதில்லை. ஆதலால் நூலிற்கும் வஸ்திரத்திற்கும் வேற்றுமைகிடையா (4) நான்காவதாகச் சொல்லப்படுகின்ற காரணத்தினாலும் நூலிற்கும், வஸ்திரத்திற்கும் வேற்றுமை கிடையா அதாவது:—கனத்தினால் உண்டாகக்கூடிய வேறுவித மானகாரியம் அறியப்படுவதில்லை என்பதாம். எந்தவஸ்துவானது எந்த வஸ்துவினும் வேறுபட்டதோ அவ்விரண்டிற்கும் வெவ்வே

द्विपलिकस्य स्वस्तिकस्य गुरुत्वकार्योऽवनतिभेदोऽधिकः । न च तथातन्तुगुरुत्वकार्यात् पटगुरुत्वकार्यान्तरं दृश्यते । तस्मादभिन्नस्तन्तुभ्यः पट इति तान्येतान्यभेदसाधनान्यवीतानि ॥

एवमभेदे सिद्धे तन्तव एव तेन तेन संस्थानभेदेन परिणताः पटो, न तन्तुभ्योऽर्थान्तरं पटः । स्वात्मनि क्रियाविरोध--बुद्धिव्यपदेश--अर्थक्रियाभेदाश्च नैकान्तिकं भेदं साधयितुमर्हन्ति । एकस्मिन्नपि तत्तद्विशेषाविर्भावतिरो-

---

*ருன கனத்தின் காரியம் கிரஹிக்கப்படுகின்றது. உதாஹரணம்—ஒருபலம் எடையுள்ள ஆபரணத்திற்கு அதனிடமுள்ள கனத்தினல் தராசின் தட்டு எவ்வளவு தழைகின்றதோ அதனிலும் இரண்டுபலமெடையுள்ள ஆபரணத்திற்கு அதிகமாகத்தழைகின்றது. இவ்விரண்டும் வேறுபட்டவைகள் நூல்வஸ்திரம் இவ்விரண்டிற்குமோ மேற்சொல்லியபடி இல்லை. வஸ்திரமாக நூலை நெய்வதற்கு முன் அதை நிறுத்தால் எவ்வளவு எடை இருக்கின்றதோ அவ்வளவு எடை தான் வஸ்திரமாக நெய்து நிறுத்தாலுமிருக்கின்றது. இவ்விரண்டும் வேறுப்பட்டிருக்குமாயின் எடையில் தாரதம்யமிருக்கவேண்டிவரும் *ஆதலால் நூலும் வஸ்திரமும் வேறுபட்டதல்ல. நாம் மேற்சொல்லியவைகள் யாவும் காரியம் காரணம் இவைகட்குப் பேதமில்லாமையைச் சாதிக்கின்ற "அவீதம்" என்ற அனுமானம்.*

---

* *எந்தவஸ்துக்கள் வேறுபட்டவைகளோ அவைகளைத்தனித்தனியே நிறுத்தால் ஓர்விதமான எடையும், இரண்டையும் சேர்த்து நிறுத்தால் மற்றோர்விதமான எடையுமிருப்பதை நாம்கண்டிருக்கிறோம். நூலும் வஸ்திரமும் வேறுபட்டிருக்குமாயின் வஸ்திரமாக நெய்யப்பட்ட சந்தர்ப்பத்திலும் நூல் இருப்பதால் நூல் வஸ்திரம் இரண்டிற்கும் சேர்த்து நூலின் நிறையைக்காட்டிலும் அதிக நிறை வஸ்திரத்தை நிறுத்தால் இருக்க வேண்டும். அவ்விதமோ நாம் காண்பதில்லை. ஆதலால் காரியம் காரணத்தினும் வேறுபட்டதல்ல என்று இங்குச் சொல்லப்படுவதாய்த் தோன்றுகிறது.*

भावाभ्यामेतेषामविरोधात्। यथाहि कूर्मस्याङ्गानि कूर्मशरीरे निविशमानानि तिरोभवन्ति, निस्सरन्ति चाविर्भवन्ति। न तु कूर्मतस्तदङ्गान्युत्पद्यन्ते प्रध्वंसन्ते वा। एवमेकस्या मृदः सुवर्णस्यवा घटमुकुटादयो विशेषा निस्सरन्त आविर्भवन्त उत्पद्यन्त इत्युच्यन्ते, निविशमानास्तिरोभवन्तः विनश्यन्ती-

---

இவைகளால் நூலிற்கும் வஸ்திரத்திற்கும் பேதமில்லாமை சித்தியானவுடன் நூற்களே அந்தந்த விதமான (மேலும் கீழுமான) சேர்க்கையினுல் வேறுவிதமான உருவத்தையடைந்து வஸ்திரம் என்றப்பெயரையு மடைகின்றன. ஆதலால் வஸ்திரம் நூலினும் வேறுபட்டதல்ல. சங்கை:—நூலும் வஸ்திரமும் ஒன்ருக இருக்குமாயின் வஸ்திரமுண்டாகின்றதென்ருல் உத்பத்தியையடைந்த நூலிற்கே யல்லவா மறுபடியு முத்பத்தியை யங்கீகரிக்க வேண்டிவரும்; அது சம்பவிக்குமா? நூலும் வஸ்திரமும் ஒன்ருக இருக்குமாயின் இது நூல், இது வஸ்திரம் என்றத்தனிமைப்பட்ட வியவஹாரம் எங்ஙனம்? நூலைப்பார்த்து வஸ்திரம் என்ற வியவஹாரமும், வஸ்திரத்தைப் பார்த்து நூல் என்றவியவஹாரமும், பிறக்கிற தில்லையே ? இவ்விதமே நூலும் வஸ்திரமும் ஒன்ருக இருக்குமாயின் காரியபேதம் எங்ஙனம்? அதாவது:— வஸ்திரத்தை யுடுத்திக் கொள்ளுகிறேரும். அது அங்கங்களை மறைக்கின்றது. குளிரைவிலக்குகின்றது. நூலோ அவ்விதஞ் செய்வதில்லை. இது போன்ற காரியபேதம் எங்ஙனம்? உத்தரம்:— நீ சொல்லிய காரணங்களெல்லாம் நூலிற்கும் வஸ்திரத்திற்கும் நிச்சயமாய்ப் பேதத்தைச் சாதிப்பதாயாக மாட்டாது. ஒரே வஸ்துவில் அந்தந்த விதமான நிலையின் வெளிப்படுகை, மறைதல் என்ற காரணத்தால் இவைகள் பொருந்தலாம். இதை உதாஹரணம் வாயிலாக நிரூபித்துக் காண்பிப்பாம். ஆமையின் சரீரத்தில் அதன் அங்கங்கள் ஓர் சமயத்தில் உள்ளடங்குகின்றன. அப்பொழுது அவற்றைமறைவு பெற்றிருப்பதாய் வர்ணிக்கிறேரும். அவைவெளிக்கிளம்பினவுடன் ஆவிர்பாவத்தை யடைந்ததாய்ச் சொல்லுகிறேரும். ஆமையினிடமிருந்து அப்பொழுது அவ்வவயவங்கள் உண்

त्युच्यन्ते । न पुनरसतामुत्पादः, सतां वा निरोधः । यथाह भगवान्कृष्णद्वैपायनः—“नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः” इति (भगवद्गीता २. १६.) यथा कूर्मः स्वावयवेभ्यः संकोचविकासशालिभ्यो न भिन्नः, एवं घटमुकुटादयोऽपि मृत्सुवर्णादिभ्यो न भिन्नाः । एवञ्चेह तन्तुषु पट इति व्यपदेशो, यथा इह वने तिलका इत्युपपन्नः । नचार्थक्रियाभेदोऽपि भेदमापादयति, एकस्यापि नानार्थक्रियादर्शनात्, यथा एक एव वन्हिर्दाहकः पाचकः

---

டாகின்றனவாகவோ, நாசமடைகின்றனவாகவோ வியவஹாரங் கிடையாது. இது எவ்விதமோ அவ்விதமே மண், தங்கம் முதலியவற்றினின்றும் குடம், கிரீடம் என்றுச் சொல்லக்கூடிய விசேஷங்கள் (நிலைகள்) வெளிப்பட்டால் உண்டாகின்றனவென்கிறோம். மறைந்துவிட்டால் நாசமடைந்து விட்டதாகச் சொல்லுகிறோம். இல்லாத வஸ்துவிற்கு உத்பத்தியோ இருக்கின்ற வஸ்துவிற்கு முற்றிலுமில்லாமையோ சம்பவிக்காது. இவ்விதமே வியாசரும் “இல்லாத்வஸ்துவிற்கு உத்பத்தி கிடையாது; இருக்கின்ற வஸ்துவிற்கு முற்றிலும் அழிவுகிடையாது” என்றதால் சொல்லி இருக்கிறார். ஆகவே ஆமையானது சுருங்குதல் நீள்தல் என்ற தர்மமுள்ள தனது அங்கங்களின்றும் எவ்விதம் வேறுபட்டதில்லையோ அவ்விதமே குடம், கிரீடம் முதலியவைகளும் மண், தங்கம் இவைகளினின்றும் வேறுபட்டனவல்ல. “நூலில் வஸ்திரமிருக்கிறது” என்று தனிப்பட்ட வஸ்துவாய்க் கருதி வியவஹரிப்பது ‘இக்காட்டில் திலகம் என்ற மரங்களிருக்கின்றன’ என்ற வியவஹாரம் போல் பொருந்தக்கூடியதே. (காடும் மரமும் ஒன்றே, மரத்தைவிடக் காடு என்று தனிமையாய் ஒருவஸ்து கிடையாது. ஆயினும் புத்தியால் தனிப்பட்ட வஸ்துவாகக் கல்பித்து வியவஹரிக்கிறோம். அவ்விதமே இங்குமறியவும்) நூலினாலும் வஸ்திரத்தினாலு முண்டாகின்ற பலவித காரியங்களைக் கொண்டு, காரியம் காரணம் இவைகட்குப் பேதத்தைச் சாதிக்கிறோமெனின் அதுவும் பொருந்தாது. வஸ்து ஒருவிதமாக இருப்பினும் பலவித கார்யங்கள் சம்பவிக்கலாம். உதாஹர

प्रकाशकश्चेति। नाप्यर्थक्रियाऽव्यवस्था वस्तुभेदे हेतुः, तेषामेव समस्तव्यस्तानामर्थक्रियाव्यवस्थादर्शनात्। यथा प्रत्येकं *विष्टयो वर्त्मदर्शनलक्षणामर्थक्रियां कुर्वन्ति, न तु शिबिकावहनम्, मिलितास्तु शिबिकामुद्वहन्ति। एवं तन्तवः प्रत्येकं प्रावरणमकुर्वाणा अपि मिलिता आविर्भूतपटभावाः प्रावरिष्यन्ति।

---

ணம்:—ஒரே விதமான நெருப்பு ஒன்றைப் பொசுக்குகின்றது; அரிசி முதலியவற்றை யவிக்கின்றது; ஒன்றைப் பிரகாசப்படுத்துகின்றது. இதை நாம்நேரில் கண்டிருக்கிறோம். இவ்விதமே நாம் ஏன் காரியம் காரணம் இவைகட்குப் பலவிதமான காரியங்களை யங்கீகரிக்கக்கூடாது. ஆக்ஷேபம் :— பலவிதமான காரியத்தை யுண்டுபண்ணுதல் ஒருவஸ்துவிற்கே சம்பவிக்காதாகையால் காரியம் காரணம் இவைகட்கு வேற்றுமை வேண்டுமென்று நாம் சாதிக்கவில்லை. பின்னையோ வெனின் வஸ்திரம் முதலிய காரியத்தால் உண்டாகின்ற பிரயோஜனம் நூலினால் ஏற்படுவதில்லை. நூலினாலுண்டாகின்ற பிரயோஜனம் வஸ்திரத்தினால் உண்டாவதில்லை. இவ்விதமுள்ள பிரயோஜனத்தின் வியவஸ்தையைக் கொண்டு காரியம் காரணம் இவைகட்குப் பேதத்தைச் சாதிக்கிறோமெனின். உத்தரம்—வஸ்துபேதமில்லாவிடினும் சேர்ந்திருத்தல் பிரிந்திருத்தல் என்றதர்மபேதத்தால் பிரயோஜனத்தின் வியவஸ்தை சம்பவிக்கலாம். உதாஹரணம்—வேலைக்காரர்கள் தனித்தனியே இருந்தால் யஜமானருக்கு வழியைமாத்திரம் காட்டுகின்றனர். பல்லாக்கைத் தூக்குவதில்லை. சேர்ந்திருந்தாலோ யஜமானனைப் பல்லாக்கில் வைத்து சுமக்கின்றனர். இவ்விதமே நூற்கள் தனித்தனியே இருக்கும்பொழுது 'அங்கங்களைமறைத்தல்' என்றப்பிரயோஜனத்தைச் செய்யாவிடினும் சேர்ந்திருந்தால் 'வஸ்திரம்' என்ற நிலையையடைந்து அங்கங்களை மறைக்கின்றன.

---

*சம்பளமின்றியே வேலைசெய்யும்படி பலாத்காரமாய் நியமிக்கப்பட்டவர்கள் "விஷ்டிகள்" எனப்படுவர்.

स्यादेतत्। अविर्भावः पटस्य कारणव्यापारात्प्राक् सन् असन् वा? असंश्चेत्प्राप्तं तर्ह्यसदुत्पादनम्। अथ सन्, कृतं तर्हि कारणव्यापारेण। नहि सति कार्ये कारणव्यापारप्रयोजनं पश्यामः। आविर्भावे चाऽविर्भावान्तरकल्पने अनवस्थाप्रसङ्गः। तस्मादाविर्भूतपटभावास्तन्तवः क्रियन्त इति रिक्तं वचः। मैवम्। अथाऽसदुत्पद्यत इति मते केयमसदुत्पत्तिः? सती, असतीवा? सती चेत्कृतं तर्हि कारणैः। असती चेत्तस्या अप्युत्पत्त्यन्तरमित्यनवस्था। अथ

---

சங்கை—இஃதெல்லாமிருக்கட்டும். "வஸ்திரம் என்ற நிலையையடைந்து" என்றீர்களே. அந்நிலையையடைதல் வஸ்திரத்தின் வெளிப்படுகை என்று ஏற்படுகின்றது. அவ்வெளிப்படுகை காரணவியாபாரமுண்டாவதற்குமுன் உள்ளதா இல்லாததா? இல்லை என்றால் இல்லாதவஸ்துவே யுண்டாகின்றது என்று ஏற்பட்டுவிடும். இருக்கிறது என்றால் காரணவியாபாரம் வியர்த்தம். எந்தப்பயனை யுத்தேசித்து காரணவியாபாரம் வேண்டப்படுகிறதோ அப்பயன் காரணவியாபாரமுண்டாவதற்கு முன்னுமிருக்குமாயின் காரணவியாபாரத்திற்கு எவ்விதப்பயனை எதிர்பார்ப்பது. 'வெளிப்படுதல்' என்ற தர்மத்திற்கு வெளிப்படுதல் ஏற்படுவதற்காக காரணவியாபாரம் வேண்டப்படுகின்றதென்றால் அதிலும் முன்சொல்லிய கேள்வி பிறக்கும். அதற்கும் வெளிப்படுகையொன்றை ஒத்துக்கொண்டால் அனவஸ்தை (முடிவில்லாமை) என்ற தோஷம் பிரசங்கிக்கும். ஆதலால் 'நூற்கள் வஸ்திரம் என்ற நிலையை யடைந்தவைகளாகச் செய்யப்படுகின்றன' என்ற வார்த்தைக்கு அர்த்தமில்லையே. உத்தரம்—இல்லாத வஸ்து உண்டாகின்றது என்ற மதத்தில் இல்லாதது உண்டாகின்றது என்றால் என்ன அர்த்தம். அந்த உத்பத்தி என்பது காரணவியாபாரமுண்டாவதற்கு முன்இருக்கக்கூடியதா, அல்லது இல்லாததா? இருக்கின்றது என்றால் முன் சொல்லியபடியே காரணவியாபாரம் வியர்த்தமாகின்றது. இல்லை என்றால் 'உத்பத்தி' என்றதற்கும் ஒரு உத்பத்தியை யங்கீகரிக்கவேண்டி வருமாதலால் "அனவஸ்தை" என்ற தோஷம்பிரசங்கிக்கும். இதற்கு

उत्पत्तिः पटान्नार्थान्तरम्, अपि तु पट एवासौ, तथापि यावदुक्तं भवति 'पट' इति तावदुक्तं भवति 'उत्पद्यते' इति। ततश्च 'पट' इत्युक्ते 'उत्पद्यते' इति न वाच्यम्, पौनरुक्त्यात्। विनश्यतीत्यपि न वाच्यम्। उत्पत्तिविनाशयोर्युगपदेकत्र विरोधात्। तस्मादियं पटोत्पत्तिः स्वकारणसमवायो वा, स्वसत्तासमवायो वा, उभयथापि नोत्पद्यते। अथच तदर्थानि कारणानि व्यापार्यन्ते, एवं सत एव पटादेराविर्भावाय कारणापेक्षेत्युपपन्नम्।

---

மேல் பூர்வபக்ஷி பதில் சொல்லுகிறார்—உத்பத்தி என்பது வஸ்திரத்தினும் வேறுபட்டதல்ல; வஸ்திரம்தான் அது. (சித்தாந்தியின் பதில்) அவ்விதமாயின் வஸ்திரம் என்று சொன்னமாத்திரத்திலேயே 'உண்டாகின்றது' என்றும் சொன்னதாயாகுமாதலால் 'வஸ்திரம் உண்டாகின்றது' என்று சேர்த்துச் சொல்லக்கூடாது. அவ்விதம்சொன்னால் பௌனருக்த்யம் (சொன்னதைத் திருப்பிச்சொல்லுதல்) என்றதோஷம் பிரசங்கிக்கும். உத்பத்தியும், நாசமுமொரேயிடத்தில் ஒரேகாலத்தில் சம்பவிக்காதாகையால் "வஸ்திரம் நாசத்தையடைகின்றது" என்றும் சொல்லக்கூடாது. ஆதலால் "வஸ்திரமுண்டாகின்றது" என்றால் தனது காரணமான நூற்களில் *ஸமவாயம் என்ற சம்பந்தத்தைப் பெறுகின்றதென்றோ, 'ஸத்தை' என்ற ஜாதியுடன் ஸமவாயம் என்ற சம்பந்தத்தைப்பெறுகின்றதென்றோ சொல்லவேண்டும். (இவ்விதஞ் சொன்னதிலிருந்து காரியத்திற்குக் காரணத்துடன் ஸமவாயம் என்ற சம்பந்தமுண்டாவதற்காக காரணவியாபாரம் வேண்டப்படுகின்றது என்று ஏற்படுகின்றது.) அங்ஙனமாயின் முன்சொல்லிய இரண்டுவிதத்திலும் வஸ்திரத்திற்கு உத்பத்தி என்பதில்லை என்று சித்திக்கிறது. அச்சம்பந்த முண்

---

* எந்த இரண்டுவஸ்துக்கள் தனிமையாய்ப்பிரிந்திராவோ அவ்விரண்டிற்குமுள்ள சம்பந்தம் சமவாயம் எனப்படும். அவையாவன:—அவயவம், அவயவி, ஜாதிவியக்தி, குணம்குணி, விசேஷம் நித்தியத்திரவ்யம் என்று தார்க்கிகர்களின் சித்தாந்தம்

नच पटरूपेण कारणानां संबन्धः, तद्रूपस्याक्रियात्वात्, क्रियासंबन्धित्वाच्च कारणानाम्, अन्यथा कारकत्वाभावात्। तस्मात्सत्कार्यमिति पुष्कलम्॥९॥

तदेवं प्रधानसाधनानुगुणं सत्कार्यमुपपाद्य, यादृशं तत्प्रधानं साधनीयं तादृशमादर्शयितुं विवेकज्ञानोपयोगिनी व्यक्ताव्यक्तसारूप्यवैरूप्ये तावदाह—

मू०। हेतुमदनित्यमव्यापि सक्रियमनेकमाश्रितं लिङ्गम्।
सावयवं परतन्त्रं व्यक्तं विपरीतमव्यक्तम्॥ १० ॥

---

டாவதற்காகத்தான் காரணவியாபாரம் வேண்டப்படுகின்றது என்றால் இருக்கின்ற வஸ்திரம் முதலிய காரியத்தின் வெளிப்படுகைக்காகவே காரணவியாபாரம் வேண்டப்படுகின்றதென்று ஏற்படுகின்றது. ஆகவே நமது மதத்தை யங்கீகரித்ததாகவேயாகின்றது. வஸ்திரத்திற்காக காரணங்கள் அபேக்ஷிக்கப்படுகின்றன என்று சொல்லாமல் வஸ்திரம் வெளிப்படுவதற்காக என்று எதற்காக சொல்லப்பட்டதென்றால், வஸ்திரம் என்பது திரவ்யம்; கிரியையல்ல. காரகங்களுக்குக் கிரியையுடன் சம்பந்தமேயல்லாது திரவ்யத்துடன் சம்பந்தமல்ல. அவ்விதமங்கீகரிக்காவிடில் காரகத்துவம் சம்பவிக்காது. ஆதலால் காரியம் காரணவியாபாரமுண்டாவதற்கு முன்னுமிருப்பதாகவே சித்திக்கின்றது.

பத்தாவது சுலோகம்

(அ - கை) இவ்விதம் பிரகிருதியைச் சாதிப்பதற்குச் சாதனமான சத்காரியவாதத்தை ஸ்திரப்படுத்தி அந்தப்பிரகிருதியை எத்தகையதாகச் சாதிக்கவேண்டுமோ அத்தன்மையைக் காண்பிப்பதற்காக பகுத்தறிவதற்குச் சாதனமான வியக்தம், அவ்யக்தம் இவைகளின் ஒற்றுமை வேற்றுமைகளை சொல்லுகிறார்—

(ப - ரை) व्यक्तम् = காரியம் हेतुमत् = காரண முள்ளதாயும், எந்த வியக்தத்திற்கு எதுகாரணமோ அதைமேலே சொல்லப்போகின்றார். अनित्यम् = நாச முள்ளதாயும், திரோபாவம் என்று

हेतुमदिति। व्यक्तं हेतुमत्, हेतुः=कारणम्, तद्वत्। यस्य च यो हेतुस्तमुपरिष्टाद्वक्ष्यति। अनित्यम्=विनाशी, तिरोभावीति यावत्। अव्यापि सर्वं परिणामिनं न व्याप्नोतीति। कारणेन हि कार्यमाविष्टम्, न कार्येण कारणम्। नच बुद्ध्यादयः प्रधानं वेविषन्तीत्यव्यापकाः। सत्क्रियम्=परिस्पन्दवत्। यथाहि बुद्ध्यादयः उपात्तमुपात्तं देहं त्यजन्ति, देहान्तरं चोपाददत इति तेषां परिस्पन्दः। शरीरपृथिव्यादीनां च परिस्पन्दः प्रसिद्धएव।

---

சொல்லக்கூடிய மறைவுள்ளதாயும், **अव्यापि** = எல்லாவிதமான பரிணமத்தையும் வியாபித்திராததாயும், காரணத்தினலல்லவோ காரியம் வியாபிக்கப் படுகின்றது. கார்யத்தினல் காரணம் வியாபிக்கப்படுவதில்லை. புத்திமுதலியவைகள் பிரதானத்திற்கு வியாபகமாக இருக்கின்றனவா? இல்லை. (உபாதான காரணமில்லாத விடத்தில் கார்யமிருக்கிறதில்லை யாதலால் காரியம் வியாபகமா யாவதில்லை என்று அறியவும்) **सत्क्रियम्**=அசைவு என்ற கிரியையுள்ளதாயும், புத்தி முதலியவற்றில் அசைவு இருக்கின்றதா என்ருல் இருக்கின்றது. அவைகள் முன் எடுத்த சரீரத்தை விட்டு விடுகின்றன. வேறுசரீரத்தைப் பற்றிக்கொள்ளுகின்றன. இவற்ருல் அசைவு என்ற கிரியை யிருப்பதா யூகிக்கப்படுகிறது. சரீரம், பிருதிவீ முதலியவைகளில் அசைவு என்பது பிரசித்தமே. **अनेकम्**=ஒன்ருக இல்லாததாயும், ஒவ்வொரு புருஷனுக்கும் ஒவ்வொரு புத்தி வீதம் புத்தி முதலியவைகள் பல எண்ணுடையனவா யிருக்கின்றன. பிரதிவீ முதலியவைகளும் சரீரம், குடம் என்றபிரிவினைகளால் பலவிதமாக இருக்கின்றன. **आश्रितम्**=தத்தமது காரணத்தை யாச்ரயித்ததாயும், புத்திமுதலிய கார்யங்கள் காரணத்தினும் வேறுபட்டதாக இல்லாவிடினும் ஏதோ சொல்பபேதத்தை முன்னிட்டு ஆதாராதேய பாவம் சொல்லப்படுகிறது. உதாஹரணம்—இந்தக்காட்டில் திலகமரங்கள் இருக்கின்றன என்பது போல் என்று முன்னமே சொல்லியிருக்கிறும். **लिङ्गम्**=பிரகிருதியை யறிவதற்கு ஹேதுவாயும் இந்தப்புத்தி முதலியவைகள் எவ்விதம் பிரகிருதியை யறிவதற்

अनेकम्—प्रतिपुरुषं बुद्ध्यादीनां भेदात्। पृथिव्याद्यपि शरीरघटादिभेदेनानेकमेव। आश्रितम्=स्वकारणाश्रितम्। बुद्ध्यादिकार्याणा मभेदेऽपि कथञ्चिद्भेदविवक्षया आश्रयाश्रयिभावः, यथा इहवने तिलकाः इत्युक्तम्। लिङ्गम्—प्रधानस्य। यथाचैते बुद्ध्यादयः प्रधानस्य लिङ्गं तथोपरिष्टाद्वक्ष्यति। प्रधानं तु न प्रधानस्य लिङ्गम्, पुरुषस्य लिङ्गं भवदपीति भावः। सावयवम्—अवयवावयविसंयोगसंयोगि। अथवा, अवयवनमवयवः, अवयवानामवयविनां मिथस्संश्लेषो मिश्रणम्, संयोग इति यावत्। अप्राप्तिपूर्विका प्राप्तिस्संयोगः। तेन सहवर्तत इति सावयवम्। तथाहि पृथिव्यादयः परस्परं संयुज्यन्ते। एवमन्येऽपि। नतु प्रधानस्य बुद्ध्यादिभिस्संयोगः, तादात्म्यात्। नापि सत्वरजस्तमसां परस्परं संयोगः, अप्राप्तेरभावात्। परतन्त्रम्—बुद्ध्यादि। बुद्ध्या हि

---

குச் சாதனமாகின்றனவோ அவ்விதம் பின்னர் சொல்லப்படும். பிரகிருதி புருஷனை யறிவதில் ஹேதுவாக இருந்தபோதிலும் பிரகிருதிக்கே லிங்கமாயாவதில்லை என்று கருத்து. **सावयवम्**=அவயவம் அவயவி இவைகளின் சேர்க்கையுள்ளது, அல்லது சம்யோகம் எனப்படும் சேர்க்கையுள்ளது. சேராமலிருந்து பிறகு சேருவது சம்யோகம் எனப்படும். அஃதுள்ளதாயிருக்கின்றது. எவ்விதமெனின்—பிருதிவீ முதலியவைகள் ஒன்றுடன் ஒன்று சேருகின்றன. இவ்விதமே மற்றவைகளும் ஒன்றுடனொன்று சேருகின்றன. பிரகிருதியோ மற்றவைகளுடன் சம்யோகம் என்ற சேர்க்கையை யடைவதில்லை. பின்னேயோவெனின் தாதாத்மயம் (ஒருமைப்படுதல்) என்ற சம்பந்தமே பிரகிருதிக்கும் மற்றவைகளுக்கு முள்ளது. 'அப்ராப்தி' என்றப்பிரிவு கிடையாதாகையால் சத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களுக்கும் சம்யோகம் கிடையா. **परतन्त्रम्** = பாதந்திரமாயு மிருக்கின்றது. புத்தி முதலியவைகள் தத்தமது கார்யத்தை யுண்டுபண்ணவேண்டுமாயின் பிரகிருதியின் சஹாயத்தை யபேக்ஷிக்கின்றது: இல்லாவிடில் சக்தியின் குறைவையடைந்து தமது காரியமான அஹங்காரம் முதலியவற்றை யுண்டுபண்ணுவதில்லை என்று சித்தாந்தம். இவ்விதமே

स्वकार्येऽहङ्कारे जनयितव्ये प्रकृत्यापूरोऽपेक्ष्यते । अन्यथा क्षीणा सती नालं महङ्कारं जनयितुमितिस्थितिः । एवमहङ्कारादिभिरपि स्वकार्यजनने इति सर्वं स्वकार्येषु प्रकृत्यापूरमपेक्षते । तेन परां प्रकृतिमपेक्षमाणंकारणमपि स्वकार्यजनने परतन्त्रं व्यक्तम् । विपरीतमव्यक्तम्—व्यक्तात् । अहेतुमत्, नित्यम्, व्यापि, निष्क्रियम्, (यद्यप्य व्यक्तस्याऽस्ति परिणामलक्षणाक्रिया, तथापि परिस्पन्दोनास्ति ।) एकम्, अनाश्रितम्, अलिङ्गम्, अनवयवम्, स्वतन्त्रम्, अव्यक्तम् ॥ १० ॥

तदनेन प्रबन्धेन व्यक्ताव्यक्तयोर्वैधर्म्यमुक्तम् । संप्रति तयोस्साधर्म्यं, पुरुषाच्च वैधर्म्यमाह—

मू० । त्रिगुणमविवेकि विषयः सामान्यमचेतनं प्रसवधर्मि ।
व्यक्तं, तथा प्रधानं, तद्विपरीतस्तथाच पुमान् ॥

---

எல்லாம் தத்தமது காரியத்தையுண்டு பண்ணுவதற்கு பிரகிருதியின் சஹாயத்தை யபேக்ஷிக்கின்றன. ஆகவே வியக்தங்கள் யாவும் மூலப்பிரகிருதியை எதிர்பார்த்தே தத்தமது காரியத்தை யுண்டு பண்ணுவதால் காரணமாயிருந்த போதிலும் பாதந்திரமாகின்றன. अव्यक्तम् = பிரகிருதி विपरीतम् = முன் சொல்லியதற்கு மாறாக இருக்கின்றது. அதாவது—காரணமற்றதாயும், அழிவற்றதாயும், வியாபகமாயும், அசைவற்றதாயும், (பிரகிருதிக்கும் பரிணமம்=மாறுதல் என்ற கிரியை இருக்கின்றது. ஆயினும் அசைவு என்ற கிரியைகிடையாது) ஒன்றை யாதாரமாக வுடையாததாயும், பிரகிருதியை யறிவதற்கு லிங்கமாயில்லாததாயும், சம்யோகமற்றதாயும், சுவதந்திரமாயு மிருக்கின்றது.

(அ - கை) மேற்சொல்லிய சுலோகத்தினல் வியக்தம், அவ்யக்தமிவைகட்கு இன்னின்ன அம்சத்தால் வேற்றுமை என்பது சொல்லப்பட்டது. இப்பொழுது அவைகட்கு இன்னின்ன அம்சத்தால் ஒற்றுமை என்பதையும், புருஷனிடமிருந்து இன்னின்ன அம்சத்தால் வேற்றுமை என்பதையும் சொல்லுகிருர்—

त्रिगुणमिति। त्रयो गुणाः सुखदुःखमोहा अस्येति त्रिगुणम्। तदनेन सुखादीनामात्मगुणत्वं पराभिमतमपाकृतम्। "अविवेकि"। यथा प्रधानं स्वतो न विविच्यते, एवं महदादयोऽपि न प्रधानाद्विविच्यन्ते, तदात्मकत्वात्। अथवा, संभूयकारितात्राविवेकिता, न हि किञ्चिदेकं पर्याप्तं स्वकार्ये, अपि तु सम्भूय। तत्र नैकस्मात् यस्य कस्यचित् केनचित्सम्भव इति ॥

---

(ப - ரை) व्यक्तम्='வியக்தம்' எனப்படும் பிருகிருதி முதலிய வஸ்து त्रिगुणम्=மூன்றுகுணமுள்ளதாயும் अविवेकि=பகுத்தறிவற்றதாயும் विषयः=விஷயமாயும் सामान्यम्=அனைவராலுமனுபவிக்கக்கூடியதாயும் अचेतनम्=சைதன்யமற்றதாயும் प्रसवधर्मि=எப்பொழுதும் மாறுதலுள்ளதாயும் (अस्ति=இருக்கின்றது) प्रधानम्=பிரகிருதியும் तथा=அவ்விதமேயுள்ளது, மேற்சொல்லிய தர்மமுள்ளதாகவே இருக்கின்றது. पुमान्=புருஷன் तथाच=சில அம்சங்களில் பிரகிருதி, வியக்தமிவைகளுடன் ஒற்றிருந்தாலும் तद्विपरीतः=இங்குசொல்லிய தர்மமில்லாமையால் பிரகிருதி வியக்தமிவைகளினும் வேறுபட்டவனாக இருக்கின்றான்.

(தா - ம்) (1) பிருகிருதி முதலியகாரியம், சுகம் துக்கம் மோஹம் என்ற முக்குணமுள்ளது. (சுகம்முதலியவைகளே முறையே சத்வம், ரஜஸ், தமஸ் எனப்படும்.) தார்க்கிகர்கள் சுகம் துக்கம்முதலியவற்றை ஆத்மாவின் குணமாகக்கருதுகின்றனர். அது இதனால் நிராகரிக்கப்பட்டதாயாகின்றது. (2) பிரகிருதி எவ்விதம் தன்னிலையையறிவதற்குச் சக்தியற்றதோ அவ்விதமே அதன் காரியமாயிருப்பதுபற்றி அதனிலும் வேறுபடாத மஹத்தத்துவம் முதலியவைகளும் தம்மைப் பிரகிருதியினின்றும் பகுத்தறிவதற்குச் சக்தியற்றவைகளாயிருக்கின்றன. சங்கை—இனிச் சொல்லப்போகின்ற 'அசேதனம்' என்றதனாலேயே 'அவிவேகி' என்றபதத்தின் பொருள் சொல்லப்பட்டதாயாகலாமன்றோ வெனின்? உத்தரம்—வேறுவிதமா யர்த்தங்கூறுவராம். பல ஒன்று சேர்ந்தே யாதானுமோர் கார்யத்தை யுண்டுபண்ணுகின்றன. தனிமையில் எக்காரியத்தை யுமுண்டுபண்ணுவதில்லை. இத்தன்மையே 'அவிவேகி'

ये त्वाहुः—‘ विज्ञानमेव हर्षविषादमोहशब्दाद्यात्मकम्, न पुनरितो ऽन्यस्तद्धर्मा’ इति–तान् प्रत्याह–“ विषय ” इति। ‘ विषयो ’ ग्राह्यः। विज्ञानाद्बहिरिति यावत्। अत एव “ सामान्यम् ” साधारणम्, घटादिवत्,

---

என்றதால் சொல்லப்படுகின்றது. இத்தர்மம் பிருதிவீ முதலிய கார்யங்களிலிருக்கின்றது. (3) “ஞானந்தான் சுகம், துக்கம், மோஹம், சப்தம்முதலிய குணமுள்ளது; மேற்கூறிய தர்மமுள்ளதாய் அதனிலும்வேறுபட்ட பாஹ்யவஸ்துகிடையாது” என்று விக்ஞானவாதிகள் சொல்லுகின்றனர். அவர்களின் மதத்தைக்கண்டிப்பதற்காகச் சொல்லுகிறார் * विषय इति விஷயமாகின்றது. அதாவது-வியக்தம் எனப்படும் பிருதிவீ முதலியகாரியங்கள் க்ஞானத்தினும் வேறுபட்டவைகளாயும், வெளியிலிருப்பவைகளாயுமறியப்படுகின்றன. (4) ஆனதுபற்றியே குடம் முதலியவைகளைப்போல் சாதாரணமாயுள்ளது. அதாவது பலரால் கிரஹிக்கப்படுகின்றது. ஒருவனாலறியப் படுகின்றவஸ்து அவனதுக் ஞானவடிவமாகவே இருக்குமாயின், அந்த:கரணவிருத்தி ரூபமானக் ஞானம் என்பது அசாதாரண (ஒருவனால் மட்டுமனுபவிக்கக்கூடியது) மாதலால் அவ்வஸ்துவும சாதாரணமாக இருக்கவேண்டும். ஒரேவஸ்துவை

---

*“சுவப்னதசையில் எத்தனையோ சமாசாரங்களை நேரில் காண்கிறோம் இரவில் பகலையும், நமதுதலையே துண்டிக்கப் பட்டிருப்பதாயும் காண்கிறோம். அப்பொழுது உண்டாகின்ற அறிவிற்கு விஷயமான வஸ்துக்கள் உண்மையில் இல்லை என்பதை எவரும் மறுக்கமாட்டார். ஆயினுமவ்வறிவு எவ்விதமுண்டாயிற்றென்றால் வாசனையுடன் கூடிய அந்த:கரண விருத்திரூபமான விக்ஞானத்தையே விஷயமாக்கிக்கொண்டு உண்டாயிற்றென்று தானே அங்கீகரிக்கவேண்டும். அவ்விதமே ஏன் ஜாக்கிரத்தசையிலுண்டாகின்ற ஞானங்களையு மங்கீகரிக்கக்கூடாது? ஞானம் தன்னையே கிரஹித்துக்கொள்ளுகிறது. ஆதலால் க்ஞானத்தைத் தவிர்த்து வெளியில் அறியப்படுகின்ற வஸ்துகிடையாது” என்று விக்ஞானவாதிகள் சொல்லுகின்றனர். இவர்களின் மதரஹஸ்யத்தையும் இதிலுள்ள தூஷணங்களையும் பிரும்ம சூத்திரம் 2-வது அத்தியாயம் 2-வது பாதம் 28-வது சூத்திரத்தில் பார்த்துக்கொள்க.

ग्रनेकैः पुरुषैर्गृहीतमित्यर्थः । विज्ञानाकारत्वे तु, असाधारण्याद्विज्ञानानां वृत्तिरूपाणां, ते ऽप्यसाधारणाः स्युः। विज्ञानं परेण न गृह्यते, परबुद्धेरप्रत्यक्षत्वादित्यभिप्रायः । तथा च नर्तकीभ्रूलताभङ्गे एकस्मिन् बहूनां प्रतिसन्धानं युक्तम् । अन्यथा तन्न स्यादिति भावः ॥ "अचेतनम्" । सर्व एव प्रधानबुध्द्यादयो ऽचेतनाः, न तु वैनाशिकवत् चैतन्यम्बुद्धेरित्यर्थः ॥ "प्रसवधर्मि"। प्रसवरूपो धर्मो यः सो ऽस्यास्तीति प्रसवधर्मि । (प्रसवधर्मेति वक्तव्ये मत्वर्थीयः प्रसवधर्मस्य नित्ययोगमाख्यातुम् । ) सरूपविरूपपरिणामाभ्यां न कदाचिदपि वियुज्यते इत्यर्थः ॥ व्यक्तवृत्तमव्यक्ते ऽतिदिशति, "तथा प्रधानम्" इति । यथा व्यक्तं तथा ऽव्यक्तमित्यर्थः ॥ ताभ्यां वैधर्म्यं पुरुषस्याऽऽह—"तद्विपरीतः पुमान्" इति ॥ स्यादेतत्—अहेतुमत्त्व-

---

ஒரேசமயத்தில் பலரறிதல் என்பது பொருந்தாது. பாஹ்யவஸ்துக்கள் விக்ஞானத்திலும் வேறுபட்டிருப்பதாலேயே நாட்டியஞ் செய்கின்றப் பெண்மணி புருவத்தை நெரித்தால் அதை எல்லோரும் ஒரேசமயத்திலுணர்வது பொருந்துகின்றது. இல்லாவிடில் அது சம்பவிக்காது. (5) பிரகிருதி, புத்தி முதலிய சகலமும் சைதன்யமற்றிருக்கின்றன. வைநாசிகன் சொல்லுவதுபோல் சைதன்யம் புத்தியின் தர்மமல்ல. (6) மாறுதல் என்ற தர்மமுள்ளது. **प्रसवधर्मा** என்று சொல்லவேண்டிய விடத்தில் "மதுப்" என்ற பிரத்தியத்தின் அர்த்தமுள்ள **इनि** பிரத்தியத்தைச் சேர்த்து **प्रसवधर्मि** என்று எதற்காகச் சொல்லப்பட்டதென்றால் 'மாறுதல் என்ற தர்மம் எப்பொழுது மிருக்கின்றது என்பதைக் காண்பிக்கவே' என்க. பிரகிருதி, அதன் காரியம் இவைகள் ஒற்றுமை யுள்ளதாகவோ வேற்றுமை யுள்ளதாகவோ யுள்ள மாறுதலினின்றும் ஒருபொழுதும் விடுபடுவதில்லை. புருஷன்மேற் சொல்லிய தர்மமற்றவனாக இருக்கின்றான். சங்கை —இதெல்லா மிருக்கட்டும். 10-வது சுலோகத்திற்சொல்லியகாரணமற்றிருத்தல், நித்தியமா யிருத்தல் முதலிய பிரகிருதியின் தர்மமும், அநேகமா யிருத்தல் முதலிய விபந்த ஜ்ஞய்பும் காரிய தர்மமும் புருஷ

नित्यत्वादि प्रधानसाधर्म्यमस्ति पुरुषस्य, एवमनेकत्वं व्यक्तसाधर्म्म्, तत्कथमुच्यते 'तद्विपरीतः पुमान्' इति ? अत आह—"तथा च" इति चकारो ऽप्यर्थः, यद्यप्यहेतुमत्त्वादिकं साधर्म्यम्, तथाप्यत्रैगुण्यादि वैपरीत्यमस्त्येवेत्यर्थः ॥ ११ ॥

त्रिगुणमित्युक्तत्, तत्र के ते त्रयो गुणाः, किं च *तल्लक्षणमित्यत आह—

मू० । प्रीत्यप्रीतिविषादात्मकाः प्रकाशप्रवृत्तिनियमार्थाः ।
अन्योन्याभिभवाश्रयजननमिथुनवृत्तयश्च गुणाः ॥ १२ ॥

"गुणाः" (परार्थाः) "सत्त्वं लघु प्रकाशकम्" (कारिका १३)

---

னிட மிருப்பதால் புருஷன் அவைகளுடன் ஒற்றுமைப் பெற்றவனுகவே ஆகின்றான். அவ்வித மிருக்கும்பொழுது நீர் எங்ஙனம் அவைகளினின்றும் புருஷன் வேறுபட்டவன் என்று சொன்னீர்? என்றால் சொல்லுகிறார்—तथाचेति । च என்ற பதத்திற்கு अपि என்ற பதத்தின் பொருள் கொள்ளவேண்டும். காரணமற்றிருத்தல் முதலிய தர்ம மிருப்பதால் பிரகிருதி முதலியவற்றுடன் ஒற்றுமை இருந்தபோதிலும் மூன்று குணமற்றிருத்தல் முதலியவற்றால் வேற்றுமையு மிருக்கின்றது. அதுவே இங்கு சொல்லப்படுகின்றது.

பன்னிரண்டாவது சுலோகம்.

(அ - கை) முன் சுலோகத்தில் 'பிருதிவீ முதலிய காரியம் மூன்று குணமுள்ளது' என்று சொல்லப்பட்டது. அம் மூன்று குணங்கள் எவை ? அவற்றின் லக்ஷணம் என்ன ? என்றால் பதிலளிக்கிறார்—

गुणाः=சத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் (क्रमेण=முறையே) प्रीत्यप्रीतिविषादात्मकाः=சுகம், துக்கம், மோஹம் இவைகள் வடிவமா யிருக்கின்றன. सत्वंलघु प्रकाशकम् என்ற சுலோகத்தில் குணங்கள் இன்னின்னவை என்று சொல்லப்படப்போகின்றன.

---

* तदुपलक्षणम् என்றும் பாடமிருக்கிறது.

इत्यत्र निर्देक्ष्यन्ते। तदनागतावेक्षणेन तन्त्रयुक्त्या वा प्रीत्यादीनां यथासंख्यं वेदितव्यम् ॥

एतदुक्तं भवति—प्रीतिः सुखम्, प्रीत्यात्मकः सत्त्वगुणः, अप्रीतिर्दुःखम्, अप्रीत्यात्मको रजोगुणः, विषादो मोहः, विषादात्मकस्तमोगुणः इत्यर्थः। ये तु मन्यन्ते "न प्रीतिर्दुःखाभावादतिरिच्यते, एवं दुःखमपि न प्रीत्यभावादन्यदिति," तान् प्रति "आत्म"—ग्रहणम्। नेतरेतराभावाः

---

*அனுகதாவேக்ஷணம் என்ற நியாயத்தாலோ, தந்திரம் என்ற நியாயத்தாலோ அவைகளை இங்குக் கிரஹித்துக்கொண்டு கிரமத்தை யனுசரிக்க வேண்டும். ஆகவே பிரீதி என்றால் சுகம். அதன் சுவரூபமாக சத்வகுண மிருக்கின்றது. அப்ரீதி என்றால் துக்கம். அதன் சுவரூபமாக ரஜோகுண மிருக்கின்றது. விஷாதம் என்றால் மோஹம். அதன் சுவரூபமாக தமோகுண மிருக்கின்றது. எவர்கள் சுகம் என்பது துக்கத்தி னில்லாமையினும் வேறுபட்டதல்ல வென்றும், இவ்விதமே துக்கம் என்பது சுகத்தின் இல்லாமையினும் வேறுபட்டதல்லவென்றும் கருதுகின்றனரோ அவர்களுக்காக இந்தச் சுலோகத்தில் **आत्म** என்ற பதம் போடப்பட் டிருக்கிறது. அதனால் சுகம், துக்க மிவைகளு ளொன்றை மற்றொன்றின் இல்லாமையாகக் கருதக் கூடாது என்று ஏற்படுகிறது. ஏனென்றால் **आत्म** என்ற பதத்திற்கு **भाववस्तु** என்று பொருள். ஆகவே பிரீதி என்ற பாவவஸ்துவாக சத்வகுண மிருக்கின்றது என்று முடிவான பொருள் ஏற்படுகிறது. இவ்விதமே துக்கம் என்ற பாவவஸ்துவாக ரஜோகுண மிருக்கின்றது; மோஹம் என்ற பாவவஸ்துவாக தமோகுண மிருக்கின்றது என்று கருத்துக் கொள்ளவும். சுகம், துக்கம் முதலிய

---

* எவ்விடத்தில் மேல் சொல்லப்போவதைக் கவனித்துக் கொண்டு முன்னமேயே அதைப்பற்றி வியவஹாரஞ் செய்யப்படுகின்றதோ அங்கு "அனுகதாவேக்ஷணம்" என்ற நியாயம். பலவிடங்களிலுப யோகப்பட்டுமொன்று ஓரிடத்தி லொன்றைச் சொல்வது "தந்திரம்" என்ற நியாயம்.

सुखादयः, अपि तु भावाः, आत्मशब्दस्य भाववचनत्वात्। प्रीतिः आत्मा भावो येषां ते प्रीत्यात्मानः। एवमन्यदपि व्याख्येयम्। भावरूपता चैषामनुभवसिद्धा। परस्पराभावात्मकत्वं तु परस्पराश्रयापत्तेरेकस्याप्यसिद्धेरुभयासिद्धिरिति भावः॥ स्वरूपमेषामुक्त्वा प्रयोजनमाह—"प्रकाशप्रवृत्तिनियमार्थाः" इति। अत्रापि यथासंख्यमेव। रजः प्रवर्तकत्वात् सर्वत्र लघु सत्त्वं प्रवर्तयेत्, यदि तमसा गुरुणा न नियम्येत। तमोनियतन्तु क्वचिदेव प्रवर्तयतीति भवति तमोनियमार्थम्॥

---

வைகளுக்கு பாவவஸ்துவாக இருக்குகை அனுபவத்தால் சித்திக்கின்றது. சுகத்தின் இல்லாமை துக்கம், துக்கத்தின் இல்லாமை சுகம் என்றால் அன்யோன்யாச்ரயம் என்ற தோஷம் வருமாதலால் இரண்டும் சித்திக்காமல் போய்விடும் என்று தாத்பர்யம்.

இந்த மூன்று குணங்களின் சுவரூபத்தைச் சொல்லிவிட்டு பிரயோஜனத்தை (அசாதாரண காரியத்தை)ச் சொல்லுகிறார்—**प्रकाशप्रवृत्तिनियमार्थाः**—**प्रकाश**=பிரகாசம் (ஒளி) **प्रवृत्ति**= பிரவிருத்தி (கிரியை) **नियम**=தடைசெய்தல் இவைகளை **अर्थाः**=பிரயோஜனமாயுடையன. இங்கும் யதாசங்கியத்தை யனுசரிக்கவேண்டும். அதாவது:—சத்வ குணத்தின் பிரயோஜனம் பிரகாசம், ரஜோ குணத்தின் பிரயோஜனம் பிரவிருத்தி, தமோகுணத்தின் பிரயோஜனம் தடைசெய்தல் என்று முறையை யனுசரிக்கவேண்டும். ரஜோகுணத்திற்கு பிரவிருத்தியை யுண்டுபண்ணுவதே சுவபாவமாதலால் அது லாகவம் (கனத்திற் கெதிரிடையான வஸ்து) என்ற தன்மையுள்ள சத்வகுணத்தை குருத்வம் (கனம்) என்ற குணமுள்ள தமோகுணத்தினால் தடுக்கப்படாவிடில் எங்கு மலையும்படி செய்துகொண் டிருக்கநேரிடும். அவ்விதமோ நாம் காண்பதில்லை. ஆதலால் தமோகுணம் பிரவிருத்தியைத் தடைசெய்வதால் ஏதோ சிலவிடத்தில்மட்டும் ரஜோகுணம் பிரவிருத்தியை யுண்டுபண்ணுகிறது. ஆகவே தமோகுணத்தின் காரியம் தடைசெய்தல் என்று சித்திக்கின்றது.

प्रयोजनमुक्त्वा क्रियामाह—"अन्योन्याभिभवाश्रयजननमिथुनवृत्तयश्च" इति। वृत्तिः क्रिया, सा च प्रत्येकमभिसम्बध्यते। 'अन्योन्याभिभववृत्तयः'। एषामन्यतमेनार्थवशादुद्भूतेनान्यदभिभूयते। तथा हि—सत्त्वं रजस्तमसी अभिभूय शान्तामात्मनो वृत्तिं प्रतिलभते, एवं रजः सत्त्वतमसी

---

சத்வம் முதலிய குணங்களா லுண்டாகின்ற பிரயோஜனத்தைச் சொல்லி அவற்றின் வியாபாரத்தைச் சொல்லுகிறார்—अन्योन्याभिभवाश्रयजननमिथुनवृत्तयः। वृत्ति என்றால் கிரியை. அதை ஒவ்வொன் றுடனும் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஆகவே अन्योन्याभिभववृत्तयः, अन्योन्याश्रयवृत्तयः, अन्योऽन्यजननवृत्तयः, अन्योन्यमिथुनवृत्तयः என்று ஏற்பட்டது. முறையே பொருள் எழுதுகிறோம்—अन्योन्याभिभववृत्तयः—अन्योन्य= ஒன்று மற்றவைகளால் अभिभव= அடக்கப்படுவது (என்ற) वृत्तयः= வியாபாரமுடையன. (தன்மையுடையன.) சத்வம் முதலிய குணங்களுள் ஒன்று புருஷார்த்தங் காரணமாய் ஆதிக்யத்தை யடையுமானல் மற்றவை யடக்கப்பட்டுவிடும். அதாவது—சத்வகுணம், ரஜஸ் தமஸ் இவைகளை யடக்கி சாந்தி என்று சொல்லப்படும் தனது விருத்தியை யடைகின்றது. இவ்விதமே ரஜோகுணம் சத்வம், தமஸ் இவைகளை யடக்கி கோரம் என்று சொல்லக்கூடிய தனது விருத்தியை யடைகின்றது. இவ்விதமே தமோகுணம், சத்வம், ரஜஸ் இவைகளையடக்கி மூடம் என்று சொல்லக்கூடிய தனது விருத்தியை யடைகின்றது.* अन्योन्याश्रयवृत्तयः—अन्योन्य=ஒன்று

---

* எந்தமனிதன் எந்தச் சமயத்தில் கோபதாபமற்றுச் சாந்தகுணமுள்ளவனயிருக்கிறானே அப்பொழுது அவனிடம் சத்வகுணம் மேலிட்டு மற்றவைகளையடக்கி தனது விருத்தியை யடைந்திருப்பதாயும், எவன் எந்தச் சமயத்தில் சண்டைபோடுவது, அதிககோபம் முதலிய உக்கிரஸ்வபாவமுள்ளவனயிருக்கிறானே அப்பொழுது அவனிடம் ரஜோகுணம் மேலிட்டு மற்றவைகள் அடங்கி தனது விருத்தியைப் பெற்றிருப்பதாயும்,எவன் எச்சமயத்தில் எக்கார்யத்திலும்சேம்பலுள்ளவனயும், சுருசுருப்பற்றவனயும், மூடனயுமிருக்கின்றானே அவனிடமச்சமயம் தமோகுணம் மேலிட்டு மற்றவைகளையடக்கித்தனது விருத்தியை யடைந்திருப்பதாயு மறிய

अभिभूय घोराम्, एवं तमः सत्त्वरजसी अभिभूय मूढामिति । 'अन्योन्याश्रयवृत्तयः' । यद्यप्याधाराधेयभावेन नायमर्थो घटते, तथाऽपि यदपेक्षया यस्य क्रिया स तस्याश्रयः । तथा हि, सत्त्वं प्रवृत्तिनियमावाश्रित्य रजस्तमसोः प्रकाशेनोपकरोति, रजः प्रकाशनियमावाश्रित्य प्रवृत्त्येतरयोः, तमः प्रकाशप्रवृत्ती आश्रित्य नियमेनेतरयोरिति । 'अन्योन्यजननवृत्तयः' ।

---

*மற்றவைகளை* **आश्रय**= *ஆச்ரயித்திருப்பது (என்ற)* **वृत्तयः**=*தன்மையையுடையன. சத்வம் முதலிய குணங்கள் ஒன்று மற்றவைகளை யாச்ரயித்திருப்பது என்ற தர்மமுடையனவா யிருக்கின்றன. ஒன்று மற்றவைகளை யாச்ரயிப்பது என்றால் ஆதாராதேய பாவங் கொள்ளக் கூடாது. ஒன்று மற்றவைகளை எதிர்பார்த்து அவற்றின் சஹாயத்தைப் பெற்றே தனது கார்யத்தைச் செய்கின்றது என்று தாத்பர்யங் கொள்ளவேண்டும். சத்வகுணம், ரஜஸ்தமஸ் இவைகளுக்குத் தனது காரியமான பிரகாசத்தினால் உபகரிக்க வேண்டுமானால் ரஜஸ், தமஸ் இவைகளின் காரியமான பிரவிருத்தி தடைசெய்தல் என்றவைகளைச் சஹாயமாகக்கொண்டே உபகரிக்கின்றது. இவ்விதமே ரஜோகுணம் சத்வ குணத்தின் காரியமான பிரகாசம், தமோகுணத்தின் காரியமானத் தடைசெய்தல் இவைகளைச் சஹாயமாகக்கொண்டே தனது காரியமான பிரவிருத்தியினால் சத்வம், தமஸ் இவைகட்கு உபகரிக்கின்றது. தமோகுணம் பிரகாசம் பிரவிருத்தி இவைகளையாச்ரயித்தே தனது காரியமான தடையைச் செய்வதால் சத்வம் ரஜஸ் இவைகட்கு உபகரிக்கின்றது என்று அறியவேண்டும்.* **अन्योन्यजननवृत्तयः**—**अन्योन्य**=*ஒன்று மற்றவைகளை யாச்ரயித்து* **जनन**= *பரிணமமடைதல் (மாறுதலடைதல்) என்ற* **वृत्तयः**=*தன்மையையுடையனவாக இருக்கின்றன. சத்வம் முதலிய குணங்கள் ஒன்றி*

---

*வேண்டும். இவ்விதமொவ்வொரு சமயத்தில், ஒவ்வொருகுணம் தலைக்கிளப்புவதற்கும் மற்றவையடங்குவதற்கும் காரணம் புருஷனுடைய சுகதுக்கானுபவத்திற்குக்காரணமான கர்மமேயாம் என்றறியவும்.*

अन्यतमोऽन्यतममपेक्ष्य जनयति। जननं च परिणामः, स च गुणानां सदृशरूपः। अत एव न हेतुमत्त्वम्, तत्त्वान्तरस्य हेतोरसम्भवात्, नाप्यनित्यत्वम्, तत्त्वान्तरे लयाभावात्। 'अन्योन्यमिथुनवृत्तयः'। अन्योन्यसहचराः, अविनाभाववृत्तय इति यावत्। 'च' समुच्चये। भवति चात्रागमः-

"अन्योन्यमिथुनाः सर्वे सर्वे सर्वत्रगामिनः।
रजसो मिथुनं सत्त्वं सत्त्वस्य मिथुनं रजः॥
तमसश्चापि मिथुने ते सत्त्वरजसी उभे।
उभयोः सत्त्वरजसोर्मिथुनं तम उच्यते॥
नैषामादिः सम्प्रयोगो वियोगो वोपलभ्यते"॥
इति देवीभागवतम्-३।८॥ १२॥

---

றொன்று ஆச்ரயித்து வேறுவிதமான நிலையை யடைகின்றன. வேறுவிதமான நிலை என்பது சத்வம் முதலிய குணங்களுக்கு ஒத்ததாகவே இருக்கின்றது * ஆனதுபற்றியே அதற்குக் காரணத்துடன் கூடி இருக்குகை என்ற தர்மங்கிடையாது. ஏனென்றால் சத்வம் முதலிய குணங்களுக்கு ஹேதுவாகச் சொல்லக் கூடிய வேறு தத்துவமொன்றுமில்லை. அவைகட்கு நாசமுங் கிடையாது. ஏனென்றால் வேறுதத்துவத்தில் லயம் என்பது சம்பவிக்கிறதில்லை என்க. अन्योन्यमिथुनवृत्तयः— अन्योन्य=ஒன்று மற்றவைகளை मिथुन=விட்டுப் பிரியாமல் சேர்ந்திருத்தல் என்ற वृत्तयः=தன்மையுடையனவா யிருக்கின்றன. சத்வவம் முதலிய குணங்கள் ஒன்றுடன் ஒன்று சேர்ந்தே இருக்கின்றன. பிரிந்திருப்பதில்லை. च என்றபதம் போடப்பட்டிருப்பதால் மேற்

---

* "சிதிசக்தி" என்று சொல்லக்கூடிய புருஷனைத்தவிர்த்து மற்ற வஸ்துக்கள் ஒவ்வொருக்ஷணமும் மாறிக்கொண்டே இருக்கின்றதென்பது சாங்கியர்களின் சித்தாந்த மாகையால் சத்வம் முதலியகுணங்களும் மாறுதலை யடைகின்றன. ஆயினும் முன்னிலையிலும் பரிணாம நிலை வேறுபட்டதல்ல. ஒத்ததாகவே இருக்கின்றது. ஆதலால் "ஹேதுமத்வம்" என்றுக ாரியங்களுக்குச் சொல்லிய சாதர்ம்யமிங்கு சம்பவிக்காது என்று கருத்து.

"प्रकाशप्रवृत्तिनियमार्थाः" इत्युक्तम्, तत्र के ते इत्थम्भूता कुतश्चेत्यत आह—

मू०। सत्त्वं लघु प्रकाशकमिष्टम्, उपष्टम्भकं चलं च रजः, ।
गुरु वरणकमेव तमः, प्रदीपवच्चार्थतो वृत्तिः ॥ १३ ॥

---

சொல்லியவையாவும் சத்வம் முதலிய குணங்களில் சேர்ந்திருக்கின்றன என்று ஏற்படுகின்றது. இவ்விதமே "சத்வம் முதலிய குணங்கள் ஒன்றுடன்ஒன்று விட்டுப் பிரியாமலிருக்கும்படி சேர்ந்திருக்கின்றன. அவை எல்லாக் கார்யங்களிலும் சம்பந்தித்திருக்கின்றன. ரஜஸ் சத்வ குணத்துடன் சேர்ந்திருக்கின்றது. சத்வம் ரஜஸ்ஸுடன் சேர்ந்திருக்கின்றது. தமஸ், சத்வம் ரஜஸ் இவைகளுடன் சேர்ந்திருக்கிறது. சத்வம், ரஜஸ் இவ்விரண்டும் தமோகுணத்துடன் சேர்ந்திருக்கின்றது. இம்மூன்று குணங்களுக்கு மாதியோ, சேராமலிருந்து சேர்ந்தகாலமோ, பிரிந்திருந்தலோ அறியப்படுவதில்லை" என்று பெரியோர்களும் சொல்லி இருக்கின்றனர்.

பதிமூன்றாவது சுலோகம்.

(அ - கை) முன் சுலோகத்தில் "சத்வம் முதலிய குணங்கள் பிரகாசம் பிரவிருத்தி, தடைசெய்தல் இவைகளைப் பிரயோஜனமாக வுடையன" என்று சொல்லப்பட்டது. அவ்வித மிருக்கின்றவை எவை? எதனுலிவைகள் அவற்றின் காரியமாக ஆகின்றன என்றால் சொல்லுகிறார்—

(ப-ரை) सत्वम् एव=சத்வம் என்ற குணந்தான் लघु=லாகவம் என்ற குணத்துடன்கூடி இருப்பதால் * प्रकाशकम्=பிரகாசத்தைக்

---

உலகிலுள்ள எல்லாப்பொருள்களுக்கும் பிரகாசமிருக்கின்றது. தீபத்தில் சத்துவாம் சமதிக மிருப்பதால் அதில் பிரகாசமதிகமாயிருக்கின்றது. இருளையும் விலக்குகின்றது. குடம் முதலியவற்றில் சத்வாம் சம் குறைவு பட்டிருப்பதால் இருட்டில் குடம் முதலியன புலப்படுவதில்லை. அந்தப் பிரகாசம் வாயிலாகவே வெளியிலுள்ள விஷயங்கள் புத்தியை வந்தடைகின்றன. அதுவே சத்வகுணத்தின் காரியம். அதன்வாயிலாக

"सत्त्वम्" इति। सत्त्वमेव लघु प्रकाशकमिष्टम्—सांख्याचार्यैः। तत्र कार्योद्गमने हेतुर्धर्मो लाघवम् गौरवप्रतिद्वन्द्वि यतोऽग्नेरूर्ध्वज्वलनं भवति, तदेव लाघवम् कस्यचित्तिर्यग्गमने हेतुर्भवति, यथा वायोः। एवं करणानां वृत्तिपटुत्वहेतुर्लाघवम्, गुरुत्वे हि मन्दानि स्युरिति सत्त्वस्य प्रकाशात्मकत्वमुक्तम्॥

सत्त्वतमसी स्वयमक्रियतया स्वकार्यप्रवृत्तिं प्रत्यवसीदन्ती रजसोपष्टभ्येते, अवसादात् प्रच्याव्य स्वकार्ये उत्साहं प्रयत्नं कार्येते। तदिदमुक्तम्—

---

கொடுக்கக்கூடியதாக **इष्टम्**=சாங்கிய சாஸ்திரத்தை ஏற்படுத்திய பெரியோர்களால் ஒப்பப்பட்டது. வஸ்து சுயமாய் மேலேகிளம்பிச் செல்லுவதற்குச் சாதனமாயிருக்கின்ற தர்மம் லாகவம் எனப்படும். அது கனத்திற்கு எதிரிடையானது. அஃதிருப்பதாலேயே அக்னியின் ஜ்வாலைமேல் நோக்கிச் செல்லுகின்றது. அந்தலாகவம் என்ற குணமே சில வஸ்துக்கள் குறுக்காகச் செல்லுவதற்குக் காரணமாகின்றது. உதாஹரணம்—காற்று குறுக்காகச் செல்லுகின்றது. அதனிடம் லாகவம் என்ற குணமிருக்கிறது. இந்த லாகவம் என்ற குணம் இந்திரியங்களுக்கு விஷயரூபமாய் விருத்தி ஏற்படுவதற்குக்காரணமாகின்றது. கனம் என்றகுணம் இந்திரியங்களி லிருக்குமாயின் மந்தசக்தியுள்ளவைகளாக இருக்க வேண்டி நேரிடும். அவ்விதமோ இல்லை. ஆகவே 'சத்வம் என்ற குணத்திற்கு பிரகாசம் காரியம்' என்றோம்.

**रज एव**=ரஜோகுணந் தான் **चलम्**=அசைவுள்ளதாக இருப்பதால் **उपष्टंभकम्**=தளர்ச்சியைப் போக்கி உத்ஸாஹத்தை விருத்தி செய்கிறது. சத்வம் தமஸ், இவைகள் சலிப்பதற்குச் சக்தியற்

---

வே விஷயங்களறியப்படுகின்றமையால் பிரகாசம் என்ற பதத்திற்கே ஞானம் என்று பெரியோர் பொருள் கொண்டனர் என்று இதனின்று மூஹிக்கிறோம்.

"उपष्टम्भकं रजः" इति । कस्मादित्यत उक्तम्—"चलम्" इति । तद्नेन रजसः प्रवृत्त्यर्थत्वं दर्शितम् ॥

रजस्तु चलतया परितस्त्रैगुण्यं चालयेत्, गुरुणाऽऽवृण्वता च तमसा तत्र तत्र प्रवृत्तिप्रतिबन्धकेन क्वचिदेव प्रवर्त्यते इति ततस्ततो व्यावृत्त्या तमो नियामकमुक्तम्—"गुरु वरणकमेव तमः" इति । एवकारः प्रत्येकं भिन्नक्रमः सम्बध्यते, सत्त्वमेव, रज एव, तम एवेति ॥

ननु 'एते परस्परविरोधशीला गुणाः सुन्दोपसुन्दवत् परस्परं ध्वंसन्त

---

*றிருப்பதால் தமது காரியத்தை யுண்டுபண்ணப் பிரவிருத்திப் பதில் தளர்ச்சியை யடைகின்றன. அச்சமயத்தில் ரஜோகுணம் தளர்ச்சியைப்போக்கி தத்தமது கார்யத்தில் பிரவிருத்தியை யுண்டுபண்ணுகின்றது. இதுவே* **उपष्टंभकं रजः** *என்றதால் சொல்லப்பட்டது. ரஜோகுணத்திற்கு இத்தன்மை எதனுலென்ருல் சொல்லுகிருர்—* **चलम् इति** *கிரியையுள்ளது. இதனுல் ரஜோ குணத்திற்கு பிரவிருத்தி பிரயோஜனம் என்று காண்பிக்கப் பட்டதாயாகின்றது.*

*ரஜோகுணம், பிரவிருத்தியை யுண்டுபண்ணுவதே தனது காரியமாகையால் மூன்று குணவடிவமான காரியத்தை எங்கு மலையும்படிச் செய்யும். ஆயினும்* **கனம்** *என்ற குணமிருப்பது பற்றி தடங்குதலைச் செய்கின்ற தமஸ்ஸினுல் ஆங்காங்குத் தடை ஏற்படுவதால் சிலவிடத்தில் மாத்திரம் பிரவிருத்தியை யுண்டு பண்ணுகிறது. ஆகவே தமோகுணம் ஆங்காங்குத் தடங்குதலைச் செய்கின்றபடியால் அது தடங்குதலைச் செய்வதாகச் சொல்லப் பட்டது.* **तम एव**=*தமோகுணந் தான்* **गुरु**=*கனம் என்ற குணம் பொருந்தி யிருப்பதால்* **वरणकम्**=*தடங்குதலைச் செய்கின்றதா யாகின்றது.* **एव** *என்ற பதத்தை* **सत्वम्, रजः, तमः** *என்ற பதங் களுடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். சங்கை—இம்மூன்று குணங்களும் வெவ்வேறு சுபாவமுள்ளதா யிருப்பதால் சுந்தன்,*

इत्येव युक्तम्, प्रागेव त्वेतेषामेकक्रियाकर्तृता'—इत्यत आह—"प्रदीपवच्चार्थतो वृत्तिः" इति। दृष्टमेवैतत्, यथा वर्त्तितैले ऽनलविरोधिनी, अथ मिलिते सहानलेन रूपप्रकाशलक्षणं कार्यं कुरुतः, यथा च वातपित्तश्लेष्माणः परस्परविरोधिनः शरीरधारणलक्षणकार्यकारिणः, एवं सत्त्वरजस्तमांसि मिथोविरुद्धान्यप्यनुवर्त्स्यन्ति स्वकार्यं करिष्यन्ति। "अर्थत" इति पुरुषार्थत इति यावत्, यथा च वक्ष्यति—

---

*உபசுந்தன் என்ற அசுரர்கள் போல் ஒன்றிற்கொன்று அடித்துக்கொண்டு நாசத்தை யடைகின்றன என்பது தான் பொருந்தும். இவைகட்கு ஒருகாரியத்தை ஒற்றுமையுடன் செய்வதென்பது மிகவும் பொருந்தவில்லையே என்றால் சொல்லுகிறார்—प्रदीपवच्चाऽर्थतोवृत्तिः इति। प्रदीपवत्=விளக்குப்போல் अर्थतः=புருஷனின் சுகதுக்கானுபவங் காரணமாக वृत्तिः=சேர்ந்து ஒரு காரியத்தைச் செய்தல் சம்பவிக்கின்றது. இதை நாம் கண்டிருக்கிறோம்—திரியும் எண்ணெயும் தனித்தனியே அக்னி ஜ்வாலைக்கு விருத்தமானவைகளே. இரண்டும் சேர்ந்து அக்னிசம்பந்தம் பெற்றால் ரூபத்தைப் பிரகாசப் படுத்துவதென்ற காரியத்தைச் செய்கின்றன. இவ்விதமே வாதம், பித்தம், கபம் என்ற தாதுக்கள் ஒன்றிற்கொன்று விருத்தமானவைகளே. ஆயினும் மூன்றும் சேர்ந்தால் சரீரத்தைச் சரியான நிலையில் வைத்தல் என்ற காரியத்தைச் செய்கின்றன. அவ்விதமே சத்வம், ரஜஸ், தமஸ் இவைகள் ஒன்றுடன் ஒன்று விருத்தங்களா யிருந்தபோதிலும் ஒன்றை மற்றவைகள் அநுசரிக்கின்றன. தமது காரியத்தைச் செய்கின்றன—अर्थतः என்ற பதத்திற்கு புருஷார்த்தங் காரணமாய் என்று பொருள் கொள்ளவேண்டும். இவ்விதமே "புருஷ

---

* சுந்தன், உபசுந்தன் என்ற இரண்டு அசுரர்களும் மிக்கபல சாலிகள். அவ்விரண்டுபேர்களும் ஒரே ஸ்திரீயினிடம் ஆசைகொண்டு அதன் மூலம் ஒருவரையொருவர் அடித்து மாண்டனர் என்ற கதையைக் ஞாபகப்படுத்திக்கொள்ளவும்.

"पुरुषार्थ एव हेतुर्न केनचित् कार्यते करणम्"
इति ॥ (कारिका ३१)

अत्र च सुखदुःखमोहाः परस्परविरोधिनः स्वस्वानुरूपाणि सुखदुःखमोहात्मकान्येव निमित्तानि कल्पयन्ति । तेषां च परस्परमभिभाव्याभिभावकभावान्नानात्वम् । तद्यथा एकैव स्त्री रूपयौवनकुलशीलसम्पन्ना स्वामिनं सुखाकरोति, तत्कस्य हेतोः ? स्वामिनं प्रति तस्याः सुखरूपसमुद्भवात् । सैव स्त्री सपत्नीर्दुःखाकरोति ; तत् कस्य होतोः ? ताः प्रति तस्याः दुःखरूपसमुद्भवात् । एवं पुरुषान्तरं तामविन्दमानं सैव मोहयति ; तत् कस्य हेतोः ? तम्प्रति तस्या मोहरूपसमुद्भवात् । अनया च स्त्रिया सर्वे भावा

---

னுக்கு ஏற்படவேண்டிய சுகதுக்கானுபவம் தான் பிரகிருதிக்குப் பிரவிருத்தி யுண்டாவதற்குக் காரணம், வேறு ஒருவனாலும் தூண்டப்படுவதில்லை" என்று சொல்லப்போகிறார்.

உலகிலுள்ள எல்லாவஸ்துக்களும் சுகம், துக்கம், மோஹம் என்ற மூக்குணவடிவமாக இருக்கின்றன என்றுமுன் சொல்லப் பட்டது. அது எங்ஙனம்? வெளியிலுள்ள வஸ்துக்கள் சுகம் துக்கம் முதலியவைகட்குக் காரணமாகுமே யல்லாது சுகதுக்க மாகவே ஆகுமா? என்றால் அதனுண்மையை இங்கு கூறுகிறார்— अत्रचेति। ஒன்றிற்கொன்று விருத்தமானவைகளுமந்த: காரணத் தின் விருத்தி ரூபமானவைகளுமான சுகம், துக்கம், மோஹ மிவைகள் தத்தமக்கனு குணமான நிமித்தங்களை சுகம், துக்கம், மோஹ மிவைகள் ரூபமாகவே கல்பிக்கின்றன. அவைகள், ஒன்றினால் மற்றவையடக்கப் படுவதால் பலவிதமாக இருக்கின் றன. இதை உதாஹரணம் வாயிலாக நிரூபித்துக்காண்பிப்பாம். ரூபம், யௌவனம், நல்லகுலம், நன்னடத்தை இவைகளையுடைய ஒருஸ்தீயை எடுத்துக் கொள்வோம். அவள் தனதுபுருஷனுக்கு சுகத்தைக்கொடுக்கின்றாள். எதனால்? என்றால் தனது புருஷன் விஷயத்தில் அவளிடமுள்ள சுகவடிவம் தலையெடுப்பதால் என்க. அந்த ஸ்திரீயே தனது சக்களத்திமார்களை துக்கப்படுத்து

व्याख्याताः। तत्र यत् सुखहेतुः तत् सुखात्मकम् सत्त्वम्, यद् दुःखहेतुस्तद्दुःखात्मकं रजः, यन्मोहहेतुस्तन्मोहात्मकं तमः। सुखप्रकाशलाघवानां त्वेकस्मिन् युगपदुद्भूतावविरोधः, सहदर्शनात्। तस्मात् सुखदुःखमोहैरिव विरोधिभिः अविरोधिभिरेकैकगुणवृत्तिभिः सुखप्रकाशलाघवैर्न निमित्तभेदा उन्नीयन्ते। एवं दुःखोपष्टम्भकत्वप्रवर्तकत्वैः, एवं मोहगुरुत्वावरणैः—इति सिद्धं त्रैगुण्यमिति ॥ १३ ॥

---

*கிறாள். அது எதனால்? என்றால் அவர்கள் விஷயத்தில் அவளிடமுள்ள துக்கவடிவம் தலைக்கிளப்புவதால் என்க. அந்தஸ்திரீயை மனைவியா யடையாத மற்றப்புருஷனை மோஹமடையும்படி செய்கிறாள். அது எதனால்? என்றால் அந்தப்புருஷன் விஷயத்தில் அவளிடமுள்ள மோஹவடிவம் தலைக்கிளப்புவதால் என்க. இந்தஸ்திரீ வியக்தியைப்போலவே மற்றவைகளையுமறியவும். ஒருவஸ்துவினிடம் சுகத்திற்குக் காரணமாயிருக்குந்தன்மை எதுவோ அதுவே சத்வம் எனப்படும். அது சுகஸ்வருபம். துக்கத்திற்குக் காரணமாக இருக்கும் தன்மை எதுவோ அதுவே ரஜஸ் எனப்படும் அது துக்கஸ் வரூபமுள்ளது. மோஹத்திற்குக் காரணமாக இருக்கும் தன்மை எதுவோ அதுவே தமஸ்எனப்படும். அது மோஹ வடிவமுள்ளது. ஒரே வஸ்து ஒரேசமயத்தில் பார்க்கின்ற புருஷர்களின் பேதத்தை யனுசரித்து சுகதுக்க மோஹங்களைக் கொடுப்பதால் ஒரே சமயத்தில் அவ் வஸ்துவினிடம் மூன்றும் தலைக் கிளப்புகின்றன என்றல்லவோ அங்கீகரிக்கவேண்டும். அவைகள் ஒன்றிற்கொன்று விருத்தமா யிருப்பதால் அவ்விதம் சம்பவிக்குமா? என்றால், சேர்ந்திருப்பதாகவே அனுபவ மிருப்பதால் சம்பவிக்கலாம். அனுபவத்திற்கு விருத்தமாயொன்றைச் சொல்வதே "அனுபபத்தி" எனப்படும். அது இங்கு கிடையாது. சங்கை-சுகம், துக்கம், மோஹமிவைகளால் எவ்விதம் முறையே சத்வம், ரஜஸ், தமது என்ற காரணங்க ளனுமிக்கப்பட்டனவோ அவ்விதமே சத்வத்தின் காரியமான சுகம், பிரகாசம், லாகவ மிவைகளாலும் தனித்தனியே காரணங்க ளனுமிக்கப்படலா மென்றோ? வென்றால் உத்தரம்—சுகம் துக்கம், மோஹமிவைகள்*

स्यादेतत्—अनुभूयमानेषु पृथिव्यादिष्वनुभवसिद्धा भवन्त्वविवेकित्वादयः । ये पुनः सत्त्वादयो नानुभवपथमधिरोहन्ति तेषां कुतस्त्यमविवेकित्वं विषयत्वमचेतनत्वं प्रसवधर्मित्वं च? इत्यत आह—

मू० । अविवेक्यादेः सिद्धिस्त्रैगुण्यात्तद्विपर्ययाभावात् ।
कारणगुणात्मकत्वात्कार्यस्याव्यक्तमपि सिद्धम् ॥ १४ ॥

"अविवेक्यादेः" इति । अविवेकित्वमविवेकि—यथा 'द्व्येकयोर्द्विवच-

---

ஒன்றிற்கொன்று விருத்தமானவைக ளாதலால் தனித்தனியே காரணத்தைக் கல்பித்தோம். சுகம், பிரகாசம், லாகவமிவைகளோ வெனின் ஒன்றிற்கொன்று விரோத மற்றிருப்பதால் தனித்தனியே காரணங் கல்பிக்கப்படுவதில்லை. சத்வகுணமொன்றே மூன்றிற்கும் காரணமாகின்றது. இவ்விதமே துக்கம், உத்ஸாஹத்தை விருத்திசெய்தல், பிரவிருத்தியை யுண்டுபண்ணுதலிவைகளாலும், மோஹம், குருத்வம் (கனம்) தடைசெய்தல் இவைகளாலும் தனித்தனியே ரஜஸ்தமஸ் இவைகளைத்தவிர்த்து வேறு நிமித்தம் கல்பிக்கப்படுவதில்லை. ஆகவே மூன்றுதான்குணம் என்று சித்தித்தது.

பதினான்காவது சுலோகம்.

(அ - கை) இஃதெல்லாமிருக்கட்டும். அனுபவத்திற்கு விஷயமாகின்ற பிருதிவீமுதலிய வற்றில் பலஒருங்கு சேர்ந்தே ஒரு காரியத்தை யுண்டுபண்ணுதல் முதலிய 11-வது சுலோகத்திற் சொல்லிய தர்மங்கள் அனுபவிக்கப் படுகின்றமையால் அவ்விதமே இருக்கட்டும். எந்த ஸத்வம் முதலியவஸ்துக்கள் அனுபவத்திற்கு விஷயமாகின்றதில்லையோ அவைகட்கு 11-வது சுலோகத்தில் சொல்லிய அவிவேகித்வம், விஷயத்வம், அசேதனத்வம், பிரசவதர்மித்வம் முதலிய தர்மங்கள் எவ்விதம் சித்திக்கின்றன என்றால் சொல்லுகிறார்—

(ப - ரை) **सत्वादेः**= சத்வம் முதலியவற்றிற்கு **अविवेक्यादेः**= 11-வது சுலோகத்திற்சொல்லிய அவிவேகித்வம் முதலிய தர்மம்

नैकवचने' (पाणिनिसूत्र. १।४।२२) इत्यत्र द्वित्वैकत्वयोरिति अन्यथा-द्व्येकेष्विति स्यात्। कुतः पुनरविवेकित्वादेः सिद्धिरित्यत आह—"त्रैगुण्यात्" इति। 'यद्यत् सुखदुःखमोहात्मकं तत्तत् अविवेकित्वादियोगि यथेदमनुभूयमानं व्यक्तम्'—इति स्फुटत्वात् अन्वयो नोक्तः। व्यतिरेकमाह—"तद्विपर्ययाभावात्" इति। अविवेक्यादिविपर्यये पुरुषे त्रैगुण्याभावात् अथ वा व्यक्ताव्यक्तं पक्षीकृत्य अन्वयाभावेनावीत एव हेतुस्त्रैगुण्यादिति वक्तव्यः ॥

---

**त्रैगुण्यात्**=*மூன்று குணமுள்ளதாயிருப்பதால்* **सिद्धिः**=*சித்திக்கின்றது. மூன்று குணமுள்ளதா யிருத்தல் என்பது* **तद्विपर्ययाभावात्-तत्**=*அந்த அவிவேகித்வம் முதலிய தர்மம்* **विपर्यय**=*இல்லாத விடத்தில்* **अभावात्**=*இல்லாமையால் ஹேதுவாகின்றது.* **कार्यस्य**=*காரியம்* **कारणगुणात्मकत्वात्**=*காரணத்தின் குணமுள்ளதாயிருப்பதால்* **अव्यक्तमपि**=*பிரகிருதியும்* **सिद्धम्**=*சித்திக்கின்றது.*

*(தா-ம்)* **अविवेक्यादेः** *என்று படிக்கப்பட்டிருந்த போதிலும்* **अविवेकित्वादेः** *என்று பொருள் கொள்ளவேண்டும்.* **द्व्येकयोर्द्विवचनैकवचने** *என்றபாணினியின் ஸூத்திரத்தில்* **द्वित्वैकत्वयोः** *என்றுபொருள் கொள்ளாவிடில்* **द्व्येकेषु** *என்று இருக்கவேண்டிவரும் என்று பயந்து பொருள் கொண்டதுபோல் என்க. அவிவேகித்வம் முதலிய தர்மங்கள் எதனால் சித்திக்கின்றனவென்றால் சொல்லுகிறார்.* **त्रैगुण्यादिति** *"எந்த எந்த வஸ்து சுகம், துக்கம், மோஹமிவைகளாக இருக்கின்றனவோ அந்தந்த வஸ்து அவிவேகித்வம் முதலிய தர்மமுள்ளதா யிருக்கின்றது. உதாஹரணம்—நம்மால் நேரில் அனுபவிக்கப்படுகின்ற வியக்தமெனப்படும் பிருதிவீ முதலியவைகள்" என்ற அந்வய வியாப்தி வெளிப்படையாயிருப்பதால் சொல்லவில்லை. வியதிரேக வியாப்தியைக் காண்பிக்கிறார்—* **तद्विपर्ययाभावात्** *அவிவேகித்வம் முதலிய தர்மமற்ற புருஷனிடம் மூன்று குணங்களில்லை. அல்லது வியக்தம் அவ்யக்த மிவைகளைப் பக்ஷமாகவைத்துக்கொண்டு அந்வய வியாப்தி சம்பவிக்கிறதில்லை*

स्यादेतत्—अव्यक्तसिद्धौ सत्यां तस्याविवेकित्वादयो धर्माः सिध्यन्ति। अव्यक्तमेव त्वद्यापि न सिध्यति, तत्कथमविवेकित्वादिसिद्धिरत आह—"कारणगुणात्मकत्वात्" इति। अयमभिसन्धिः—कार्यं हि कारणगुणात्मकं दृष्टम्, यथा तन्त्वादिगुणात्मकं पटादि। तथा महदादिलक्षणेनापि कार्येण सुखदुःखमोहरूपेण स्वकारणगतसुखदुःखमोहात्मना भवितव्यम्। तथा च तत्कारणं सुखदुःखमोहात्मकं प्रधानमव्यक्तं सिद्धम् भवति ॥१४॥

---

யாகையால் त्रैगुण्यम् என்றஹேதுவை கேவலவியதிரேகிஹேது வாகவே அங்கீகரிப்போம். சங்கை—இஃதெல்லாமிருக்கட்டும். அவ்யக்தம் எனப்படும் பிரகிருதி இருப்பதாய் சித்தித்தாலல்லவா அதற்கு அவிவேகித்வம் முதலிய தர்மங்கள் சித்திக்கும். பிரகிருதியே யிருப்பதாய்ச் சித்திக்கவில்லையே. அவ்விதமிருக்கும் பொழுது எங்ஙனம் அவிவேகித்வம் முதலிய தர்மங்கள் சித்திக்கின்றன என்றால் பதில் சொல்லுகிறார். कारणगुणात्मकत्वात् इति। இதற்குப் பின்வருமாறு தாத்பர்யம்-காரியம் காரணத்தின் குணம் (தன்மை, அல்லது சுவபாவம்) உள்ளதாயிருக்கின்றதென்பதைக்கண்டிருக்கிறோம். வஸ்திரம் முதலிய காரியங்களைக் கவனிப்போம். *அவை நூல் முதலியவற்றின் குணமுள்ளனவாயிருக்கின்றன. அவ்விதமே மஹத்முதலிய காரியமும் சுகம், துக்கம், மோஹ மிவைகளுடன்கூடி இருப்பதால் அதன் காரணமும் சுகதுக்க மோஹமுள்ளதாய் ஒன்றிருக்கவேண்டுமென்று ஊஹிக்கிறோம். ஆகவே அவற்றின் காரணமாயும், சுகம், துக்கம், மோஹ மிவைகளின் சுவரூபமாயும் "பிரதானம், அவ்யக்தம்" என்று சொல்லக்கூடியதாயுமுள்ள வஸ்து சித்திக்கின்றது.

---

* நூல் சிவந்திருந்தால் வஸ்திரமும் சிவந்திருக்கிறது. நூல் வெளுத்திருந்தால் வஸ்திரமும் வெளுத்திருக்கிறது என்று அறியவும். காரணமான பிரகிருதி சுகதுக்க மோஹங்களினும் வேறுபடாமலிருப்பினும் ஏதோ சுவல்பபேதத்தை யனுசரித்து இங்கு இவ்விதம் சொல்லப்படுகின்றது என்று அறியவும்,

स्यादेतत्—'व्यक्तात् व्यक्तमुत्पद्यते' इति कणभक्षाक्षचरणतनयाः, परमाणवो हि व्यक्ताः, तैर्द्व्यणुकादिक्रमेण पृथिव्यादिलक्षणं कार्यं व्यक्तमारभ्यते। पृथिव्यादिषु च कारणगुणक्रमेण रूपाद्युत्पत्तिः। तस्मात् व्यक्तात् व्यक्तस्य तद्गुणस्य चोत्पत्तेः कृतमदृष्टचरेणाव्यक्तेनेत्यत आह—

मू०। भेदानां परिमाणात् समन्वयात् शक्तितः प्रवृत्तेश्च।
कारणकार्यविभागादविभागाद्वैश्वरूप्यस्य॥ १५॥
कारणमस्त्यव्यक्तम्, प्रवर्तते त्रिगुणतः समुदयाच्च।
परिणामतः सलिलवत् प्रतिप्रतिगुणाश्रयविशेषात् १६॥

---

(அ - கை) இஃதெல்லாமிருக்கட்டும். வியக்தமெனப்படும் வஸ்துவினிடமிருந்து வியக்த முண்டாகின்றது என்று கணாதர் கௌதமர் இவர்களின் சித்தாந்தத்தை யனுசரித்தவர் சொல்லுகின்றனர். அதாவது பரமாணுக்கள் * வியக்தம் எனப்படும். இரண்டு பரமாணுக்கள் ஒன்று சேர்ந்தால் "த்வயணுகம்" எனப்படும் வஸ்து உண்டாகின்றது. மூன்று த்வயணுகம் ஒன்று சேர்ந்தால் "த்ர்யணுகம்" எனப்படும் வஸ்துவுண்டாகின்றது. இம்முறையை யனுசரித்து வியக்தமெனப்படும் பிருதிவீ முதலிய கார்யங்கள் பரமாணுக்களா லுண்டுபண்ணப்படுகின்றன. பிருதிவீ முதலிய வற்றில் காரணத்தின் குணத்தை யனுசரித்து ரூபம் முதலிய குணங்களுண்டாகின்றன. அதாவது—காரணம் எந்த குணமுள்ளதாக இருக்கின்றதோ அந்தக் குணமுள்ளதாகவே அதன் காரியமுமிருக்கும். நூல் வெளுத்திருந்தால் வஸ்திரமும் வெளுத்திருக்கும். ஆகவே வியக்தத்தினிடமிருந்தே வியக்தமும் அதன்குணமும் உண்டாகலாமாகையால் நேரில் காணப்படாத அவ்யக்தம் எனப்படும் வஸ்து வேண்டியதில்லை என்றால் பதிலளிக்கிறார்—

---

* வீட்டின் மத்தியிலுள்ள இடைவெளிவாயிலாக உள்ளே பிரவேசித்த சூரிய கிரணத்தில் சிறிய தூளிகளைப் பார்க்கலாம். அவற்றுள் எந்தத்தூளி மிகவும் சிறியதோ அதன் ஆறி லொருபாகம் "பரமாணு" எனப்படும்.

"भेदानाम्" इति । भेदानाम् विशेषाणां महदादीनां भूतानां कार्याणां कारणं मूलकारणमस्त्यव्यक्तम् । कुतः ? "कारणकार्यविभागाद्-विभागाद्वैश्वरूप्यस्य" । कारणे सत् कार्यमिति स्थितम् । तथा च यथा कूर्म-

---

(ப-ரை) **वैश्वरूप्यस्य**=எல்லாவிதமான காரிய வஸ்துவுக்கும் **कारणकार्यविभागात्**=காரணத்திலுண்டாவதற்கு முன்னிருக்கின்ற காரியத்திற்கே ஒரு சமயத்தில் பிரிந்திருத்தல் என்பது சம்பவிப்பதாலும் **अविभागात्**=பிரிந்திராமை என்பது சம்பவிப்பதாலும் **शक्तितः**=காரணத்தின் சக்தியை யனுசரித்து **प्रवृत्तेश्च**=காரியமுண்டாவதாலும் **परिमाणात्** = வியாபகமாக இல்லாமலிருப்பதாலும் **समन्वयात्** = நன்கு தொடர்ந்ததாக இருப்பதாலும் **भेदानाम्**= மஹத்தத்துவம் முதலிய காரியங்களுக்கு **अव्यक्तम्**=அவ்யக்தம் என்ற **कारणम्**=மூலகாரணம் **अस्ति**=இருக்கின்றது. (**तत्**=அந்த அவ்யக்தம்) **त्रिगुणतः**=சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குண வடிவமாகவும் **समुदयाच्च** = சமூஹமாகவும் **प्रवर्तते**=மாறுகின்றது **प्रतिप्रतिगुणाश्रयविशेषात्**=ஒவ்வொரு குணத்தை யாச்ரயித்து ஏற்படுகின்ற யாதொரு விசேஷமுண்டோ அதனாலுண்டான **परिणामतः**=மாறுதலால் **सलिलवत्**=ஜலம்போல் (**अनेक विकल्पान्**=பலவிதமான மாறுதல்களை **लभते**=அடைகின்றது.)

(தா-ம்) மஹத்தத்துவம் முதல் ஐந்து பூதங்கள் முடிவாகவுள்ள காரியங்களுக்கு அவ்யக்தம் என்று சொல்லக்கூடிய மூல காரணம் ஒன்றிருக்கின்றது. ஏனென்றால் உலகிலுள்ள காரியங்கள் யாவும் உபாதான காரணத்தில் காரணவியாபார முண்டாவதற்குமுன் இருந்துகொண்டே காரண வியாபாரத்தினால் வெளிப்படுவதாலும், பிறகு காரணத்திலேயே லயம் என்ற புலப்படக்கூடாத நிலையை யடைவதாலும் என்க. இதைப் பின் வருமாறு நிரூபித்துக் காண்பிப்பாம். உபாதான காரணத்தில் காரியம் காரண வியாபாரமுண்டாவதற்கு முன்னு மிருப்பதாய் முன்னர் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஆமையின் சரீரத்திலிருக்கின்ற அங்கங்கள் வெளிப்பட்டால் அவைகளைத் தனியாகப்பிரி

शरीरे सन्त्येवाङ्गानि निःसरन्ति विभज्यन्ते—'इदं कूर्मशरीरं, एतान्येतस्याङ्गानि'—इति एवं निविशमानानि तस्मिन् अव्यक्तीभवन्ति। एवं कारणान्मृत्पिण्डाद्धेमपिण्डाद्वा कार्याणि घटमुकुटादीनि सन्त्येवाविर्भवन्ति विभज्यन्ते। सन्त्येव पृथिव्यादीनि कारणात्तन्मात्रादाविर्भवन्ति विभज्यन्ते, सन्त्येव च तन्मात्राण्यहङ्कारात् कारणात्, सन्नेवाहङ्कारः कारणान्महतः, सन्नेव च महान् परमाव्यक्तात्। सो ऽयं कारणात् परमाव्यक्तात् साक्षात्

---

த்து 'இது ஆமையின் சரீரம், இவை ஆமையின் அங்கங்கள்" என்று எவ்விதம் வியவஹாரிக்கிறோமோ, மேலும் ஆமையின் சரீரத்தில் அதே அங்கங்கள் அடங்கிவிட்டால் எவ்விதம் அவ்யக்தம் என்ற புலப்படக்கூடாத நிலையை யடைந்தவைகளாய் அவைகளை வியவஹாரிக்கின்றோமோ அவ்விதமே உபாதான காரணமான மண்ணுருண்டையினின்றோ தங்க உருண்டையினின்றோ குடம் கிரீடம் முதலிய காரியங்களுண்டாவதற்கு முன் இருந்துகொண்டே காரண வியாபாரத்தினுல் வெளிப்படுகின்றபொழுது இது குடம், இது மண்ணுருண்டை என்று பிரித்து வியவஹாரிக்கப்படுகின்றன. உண்டாவதற்கு முன் இருக்கின்ற பிருதிவீ முதலியவைகளே தன்மாத்திரை என்ற தத்துவத்தினின்றும் வெளிப்படும் பொழுது முன்போல் பிரித்து வியவஹாரிக்கப்படுகின்றன. உண்டாவதற்கு முன் இருக்கின்ற தன்மாத்திரை என்ற தத்துவமே அஹங்காரம் என்ற தத்துவத்தினின்றும் வெளிப்படும் பொழுது முன்போலவே பிரித்து வியவஹாரிக்கப்படுகின்றது. உண்டாவதற்கு முன்னிருக்கின்ற அஹங்காரமே தனக்குக் காரணமான மஹத்தத்துவத்தினின்றும் வெளிப்படும் பொழுது முன்போலவே பிரித்து வியவஹாரிக்கப்படுகின்றது. உண்டாவதற்கு முன் இருக்கின்ற மஹத்தத்துவமே பரமாவ்யக்தம் என்று சொல்லக்கூடிய காரணத்தினின்றும் வெளிப்பட்டால் முன்போலவே பிரித்து வியவஹாரிக்கப் படுகின்றது. இதுதான் பரமாவ்யக்தம் என்ற காரணத்தினின்றும் நேரிலோ பரம்பரையாகவோ பிரகிருதி சம்பந்தம் பெற்ற எல்லாக்காரியத்திற்கு முள்ள சிருஷ்டியின்

पारम्पर्येणान्वितस्य विश्वस्य कार्यस्य विभागः। प्रतिसर्गे तु मृत्पिण्डं सुवर्णपिण्डं वा घटमुकुटादयो विशन्तो ऽव्यक्तीभवन्ति। तत्कारणरूपमेवानभिव्यक्तं कार्यमपेक्ष्याव्यक्तं भवति। एवं पृथिव्यादयस्तन्मात्राणि विशन्तः स्वापेक्षया तन्मात्राण्यव्यक्तयन्ति, एवं तन्मात्राण्यहङ्कारं विशन्त्यहङ्कारमव्यक्तयन्ति, एवमहाङ्कारो महान्तमाविशन् महान्तमव्यक्तयति, महान् प्रकृतिं स्वकारणं विशन् प्रकृतिमव्यक्तयति। प्रकृतेस्तु न क्वचिन्निवेश इति सा सर्वकार्याणामव्यक्तमेव। सो ऽयमविभागः प्रकृतौ वैश्वरूप्यस्य नानारूपस्य कार्यस्य (स्वार्थिकः ष्यञ्)। तस्मात् कारणे कार्यस्य सत एव विभागाविभागाभ्यामव्यक्तं कारणमस्ति॥

---

பிரளயகாலத்திலோ வெனின் மண்ணுருண்டையிலோ, தங்க உருண்டையிலோ குடம், கிரீடம் முதலியவைகள் அடங்கினவுடன் அவ்யக்தம் என்ற வெளிப்படாத நிலையை யடைகின்றன. அந்தக்காரணமே வெளிப்படாத காரியத்தைக்குறித்து அவ்யக்தம் என்ற பெயரை யடைகின்றது. இவ்விதமே பிருதிவீ முதலியவைகள் தந்மாத்திரை என்ற தத்துவங்களி லடங்கிய பொழுது அவைகளைக் குறித்து தந்மாத்திரைகள் அவ்யக்தம் என்ற பெயரை யடைகின்றன. இவ்விதமே தந்மாத்திரைகள் அஹங்காரம் என்றதத்துவத்தில் அடங்கியபொழுது அவைகளைக் குறித்து அஹங்காரம் அவ்யக்தம் என்ற பெயரை யடைகின்றது. இவ்விதமே அஹங்காரம் என்ற தத்துவம் மஹத்தத்துவத்தி லடங்கியபொழுது அதைக்குறித்து அஹங்காரம் அவ்யக்தம் என்ற பெயரை யடைகின்றது. மஹத்தத்துவம் தனது காரணமான பிரகிருதியி லடங்கின பொழுது அதைக்குறித்து பிரகிருதி அவ்யக்தம் என்ற பெயரை யடைகின்றது. பிரகிருதியோ வெனில் வேறு ஒரு தத்துவத்திலு மடங்குவதில்லை யாகையால் அது எல்லாக்காரியங்களைக் குறித்தும் அவ்யக்தமாகவே இருக்கின்றது. மேற்சொல்லியபடி சகலவிதமான காரியத்திற்கும் காரணத்திலும் [illegible]

इतश्चाव्यक्तमस्तीत्यत आह—"शक्तितः प्रवृत्तेश्च" इति। कारणशक्तितः कार्यं प्रवर्तत इति सिद्धम्, अशक्तात् कारणात् कार्यस्यानुपपत्तेः, शक्तिश्च कारणगता न कार्यस्याव्यक्तत्वादन्या। न हि सत्कार्यपक्षे कार्यस्याव्यक्तताया ऽन्यस्यां शक्तौ प्रमाणमस्ति। अयमेव हि सिकताभ्यस्तिलानां तैलोपादानानां भेदो यदेतेष्वेव तैलमस्त्यनागतावस्थं न सिकतास्विति॥

स्यादेतत्—शक्तितः प्रवृत्तिः कारणकार्यविभागाविभागौ च महत एव परमाव्यक्तत्वं साधयिष्यतः, कृतं ततः परेणाव्यक्तेनेत्यत आह—"परिमा-

---

உபாதான காரணத்தில் உண்டாவதற்கு முன்னுமிருக்கின்ற காரியத்திற்கே தனியாய்ப் புலப்படுகை அஃதில்லாமை இரண்டும் சம்பவிப்பதால் அவ்யக்தம் என்ற காரண மொன்றிருக்க வேண்டுமென்று சித்திக்கின்றது.

பின் சொல்லப்படும் காரணத்தினாலும் அவ்யக்தம் ஒன்றிருக்க வேண்டுமென்று சித்திக்கின்றது शक्तितः प्रवृत्तेश्च காரணத்திலிருக்கின்ற சக்தியையனுசரித்துக்காரிய முண்டாகின்றதென்பதை முன்னரே ஸ்தாபித்திருக்கிறோம். ஏனென்றால் சக்தியற்ற காரணத்தினின்றும் காரிய முண்டாவதில்லை. காரணத்திலிருக்கின்ற சக்தியானது கார்யத்தின் அவ்யக்த நிலையைக் காட்டிலும் வேறுபட்டதல்ல. காரியம் காரண வியாபார முண்டாவதற்கு முன்னு மிருக்கின்றது என்று சொல்வோரின் கக்ஷியில் கார்யத்தின் வெளிப்படாத நிலையைக் காட்டிலும் வேறுபட்டதாய் ஒரு சக்தி இருக்கின்றது என்று சொல்வதில் யாதானும் பிரமாணமிருக்கின்றதா? இல்லை. எண்ணெக்கு உபாதான காரணமான எள்ளுக்கும் மணலுக்குமுள்ள வித்தியாசம் இதுவே. அதாவது—எள்ளில் தான் எண்ணெ வெளிப்படாத நிலையிலிருக்கின்றது. மண்ணிலில்லை என்பது.

இஃதெல்லா மிருக்கட்டும். காரணத்தின் சக்தியை யனுசரித்துக் காரியமுண்டாகின்றதென்பதும் காரணத்தினின்றும் காரி

णात्'' इति। परिमितत्वात्, अव्यापित्वादिति यावत्। विवादाध्यासिता महदादिभेदा अव्यक्तकारणवन्तः, परिमितत्वात्, घटादिवत्। घटादयो हि परिमिताः मृदाद्यव्यक्तकारणका दृष्टाः। उक्तमेतद्यथा कार्यस्याव्यक्तावस्था कारणमेवेति, यन्महतः कारणं तत् परमाव्यक्तम्, ततः परतराव्यक्तकल्पनायां प्रमाणाभावात्॥

इतश्च विवादाध्यासिता भेदाः अव्यक्तकारणवन्तः—''समन्वयात्''। भिन्नानां समानरूपता समन्वयः। सुखदुःखमोहसमन्विता हि बुद्ध्यादयोऽध्यवसायादिलक्षणाः प्रतीयन्ते। यानि च यद्रूपसमनुगतानि तानि तत्स्व-

---

யத்திற்கு வெளிப்படுகை வெளிப்படாமை இவைகளும் மஹத் தத்துவத்திற்கே மூலகாரணமாயிருக்குகையைச் சாதிக்கின்றன அதனிலும் வேறாய் ஒரு மூலகாரணமானவஸ்து இருப்பதாய் அங்கீகரிக்கவேண்டியதில்லை. என்றால் பதிலளிக்கிறார்-**परिमाणात् इति।** மஹத்தத்துவம் வியாபகமாக இல்லாமலிருப்பதால் மூலகாரணமா யாகமாட்டாது. குடம் முதலியவைகள். வியாபகமாக இல்லாமல் இருப்பதால் எவ்விதம் மண் முதலிய அவ்வியக்த்தை காரணமாயுடையன வாகின்றனவோ அவ்விதமே மஹத்தத்வம் முதலியனவும் வியாபகமாக இல்லாமல் இருப்பதால் அவ்யக்தமாகிய ஒரு வஸ்துவைக் காரணமா யுடையன. வெளிப்படாத நிலையிலுள்ள காரியத்திற்கு ஆதாரமாய் இருப்பதுதான் காரணம் என்பதை முன்னரே சொல்லி இருக்கிறோம். ஆகவே மகத்தத்வத்திற்கு எது காரணமோ அது தான் மூலகாரணம் அதற்கும் வேறு காறணம் இருப்பதாய் அங்கீகரிப்பதில் பிரமாணமில்லை.

பின் சொல்லப்படும் காரணத்தாலும் மஹத்தத்வம் முதலியவைகள் அவ்யக்தத்தை காரணமாயுடையனவாக இருக்கவேண்டும் என்று சித்திக்கின்றது. **समन्वयात्** பலவிதமாய் பிரிந்திருக்கின்ற வஸ்துக்கள் ஒருவிஷயத்தில் ஒறுமைப்பட்டிருக்கின்றன. அதாவது. புத்திமுதலியகாரியங்கள் சுகம், துக்கம், மோஹம், இவையுள்ளதாக வல்லவோ அறியப்படுகின்றன. எவை எந்த

भावाव्यक्तकारणानि, यथा मृद्धेमपिण्डसमनुगताः घटमुकुटादयो मृद्धेमपिण्डाव्यक्तकारणका इति—कारणमस्त्यव्यक्तं भेदानामिति सिद्धम् ॥

अव्यक्तं साधयित्वा अस्य प्रवृत्तिप्रकारमाह—"प्रवर्तते त्रिगुणतः" इति। प्रतिसर्गावस्थायां सत्त्वं रजस्तमश्च सदृशपरिणामानि भवन्ति। परिणामस्वभावा हि गुणा नापरिणमय्य क्षणमप्यवतिष्ठन्ते। तस्मात् सत्त्वं सत्त्वरूपतया रजो रजोरूपतया तमस्तमोरूपतया प्रतिसर्गावस्थायामपि प्रवर्तते। तदिदमुक्तम् "त्रिगुणतः" इति ॥

---

தர்மமுள்ளனவாய் இருக்கின்றனவோ அவை அந்தத்தர்மமுள்ள அவ்யக்தத்தைக் காரணமாயுடையனவா யிருக்கிறன. உதாஹரணம்—குடம்கிரீடம் முதலியவைகள் மண் தங்கம் இவைகளின் தன்மையை விட்டு விலகாமல் இருப்பதால் மேற்கண்ட தர்மமுள்ள மண் தங்கம் இவைகளையே உபாதான காரணமாயுடையனவாயிருக்கின்றன. ஆகையால் காரியங்களுக்கு அவ்யக்தம் எனப்படும் காரணம் இருக்கின்றது என்று சித்திக்கின்றது.

அவ்யக்தம் எனப்படும் மூலகாரணத்தைச் சாதித்த பிறகு அது எவ்விதம் மாறுதலையடைகின்ற தென்பதைச் சாதிக்கிறார். **प्रवर्तते त्रिगुणतः** மஹத்தத்வம் முதலிய காரியங்கள் உண்டாகாமல் இருக்கும்பொழுது ஸத்வம், ரஜஸ், தமஸ், இம்மூன்றும் ஒத்ததான மாறுதலை யடைகின்றன. ஏனென்றால் மாறுதல் அடைவதையே ஸ்வபாவமாயுடைய குணங்கள் மாறுதலை யடையாமல் ஒரு க்ஷணநேரமும் இருப்பதில்லை. ஆகையால் ஸத்வம் ஸத்வ குணவடிவமாகவும் ரஜஸ் ரஜோகுணவடிவமாகவும், தமஸ் தமோ குணவடிவமாகவும் மாறுகின்றது. இதுவே **त्रिगुणतः** என்றதால் சொல்லபட்டிருக்கிறது.

வேறு விதமான மாறுதலைச் சொல்லுகிறார் **समुदयाच्चेति।** மூன்றுஞ்சேர்ந்து வேறுவிதமான மாறுதலை யடைகின்றன. அது குணங்களுக்கு உயர்வு தாழ்வு அன்றியில் சம்பவிக்காது.

प्रवृत्त्यन्तरमाह—“समुदयाच्च” इति। समेत्य उदयः ‘समुदयः’ समवायः। समुदयश्च गुणानां न गुणप्रधानभावमन्तरेण सम्भवति, न च गुणप्रधानभावौ वैषम्यं विना, न च वैषम्यमुपमर्दोपमर्दकभावादृते, इति महदादिभावेन प्रवृत्तिर्द्वितीया ॥ स्यादेतत्—कथमेकरूपाणां गुणानामनेकरूपा प्रवृत्तिरित्यत आह—“परिणामतः सलिलवत्” इति। यथा हि वारिदविमुक्तमुदकमेकरसमपि तत्तद्भूविकारानासाद्य नारिकेल ताल ताली बिल्व-चिरबिल्व तिन्दुकामलक प्राचीनामलक कपित्थ फल रसतया परिणमन्मधुराम्ललवणतिक्तकषायकटुतया विकल्प्यते, एवमेकैकगुणसमुद्भवात् प्रधानगुणाः परिणामभेदान् प्रवर्तयन्ति। तदिदमुक्तम्—“प्रतिप्रतिगुणाश्रयविशेषात्”। एकैकगुणाश्रयेण यो विशेषस्तस्मादित्यर्थः ॥ १६ ॥ १६ ॥

---

உயர்வு தாழ்வு என்பது அதிகமாகுதல் குறைவுபடுதல் என்ற வைஷம்யம் அன்றியில் சம்பவிக்காது. அந்த வைஷம்யம் என்பது ஒன்றினால் மற்றொன்று அடக்கப்படுவது என்ற தர்மமின்றிச்சம்பவிப்பதில்லை. ஆகவே, ஸத்வம் முதலியகுணங்கள் மஹத் முதலிய காரியமாக மாறுதலை யடைவது இரண்டாவது பிரவிருத்தி. இஃதெல்லாம் இருக்கட்டும், ஒரேவிதமாயுள்ள குணங்கள் எவ்விதம் அநேகவிதமான காரிய ஸ்வரூபமாய் மாறுதலை யடைகின்றன என்றால் சொல்லுகிறார் परिणामतः सलिलवत् इति மேகத்தினால் பொழியப்பட்ட ஜலம் ஒரேவிதமாய் இருந்த போதிலும் அந்தந்த விதமான பூமியின் விகாரமான காரியங்களை யடைந்து இளநீர், பனைநீர், வில்வநீர், முதலியவைகளாய்மாறி தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு முதலியருசிகளை யடைகின்றதோ இவ்விதமே ஸத்வம், ரஜஸ், தமஸ், என்கிற மூன்று குணங்களுள் ஒவ்வொரு குணம் அதிகரிப்பதால் அந்தந்த விதமான பரிணாமங்கள் ஏற்படுகிறன. இதுதான் प्रतिप्रतिगुणाश्रयविशेषात् என்றதால் சொல்லப்படுகின்றது.

ये तु तौष्टिका अव्यक्तं वा महान्तं वा ऽहङ्कारं वा इन्द्रियाणि वा भूतानि वा ऽऽत्मानमभिमन्यमानास्तान्येवोपासते तान् प्रत्याह—

मू० । संघातपरार्थत्वात् त्रिगुणादिविपर्ययादधिष्ठानात् ।
पुरुषो ऽस्ति भोक्तृभावात्कैवल्यार्थं प्रवृत्तेश्च ॥ १७ ॥

---

பதினேழாவது சுலோகம்.

(அ - கை) சாந்தத் தர்சனக்காரர்கள் அவ்யக்தத்தையோ, (பிரகிருதியையோ) மஹத்தத்துவத்தையோ, அஹங்காரத்தையோ, இந்திரியங்களையோ, ஐந்து பூதங்களையோ ஆத்மவஸ்துவாகக்கருதி அவைகளையே உபாஸிக்கின்றனரோ அவர்களைக்குறித்துச் சொல்லுகிறார்—

(ப - ரை) संघात परार्थत्वात्–संघात=பலவஸ்துக்களின் சேர்க்கையானது परार्थत्वात्=தன்னைவிடவேறான ஒன்றினது பிரயோஜனத்திற்காக ஏற்பட்டிருப்பதாலும் त्रिगुणादिविपर्ययात् = சத்வம், ரஜஸ், தமஸ் என்றமூன்று குணங்களுள்ளது முதலியவற்றிற்கு மாறுதலாயிருப்பதாலும், अधिष्ठानात्=சத்வம்முதலிய மூன்றுகுணமுள்ள வஸ்துக்களின் பிரவிருத்தி மூன்று குணமற்ற வேறு ஒருவனையாச்ரயித்திருப்பதாலும் भोक्तृभावात्=அநுகூலம், பிரதிகூலம் என்று நினைக்கக்கூடிய சுகதுக்கமுள்ளதாயிருப்பதாலும் कैवल्यार्थम्=முற்றிலும் துக்க நிவிருத்தியையடைதல் என்ற நிலையைக்குறித்து (शास्त्राणां महर्षीणां च दिव्यलोचनानां उपदेशस्य= சாஸ்திரங்கள், திவ்ய திருஷ்டிவாய்ந்த மஹருஷிகள் இவர்களின் உபதேசத்தின்) प्रवृत्तेश्च=பிரவிருத்தியிருப்பதாலும் पुरुषः=ஆத்மா अस्ति=அவ்யக்தம் முதலியதினும் வேறுபட்டதாயிருக்கிறான்.

(தா - ம்) அவ்யக்தம் முதலியவற்றினும் வேறுபட்டவனாய் புருஷனொருவனிருக்கின்றான். ஏனென்றால் * சங்காதமாயிருக்

---

* "சங்காதம்" என்றால் பலவற்றின் சேர்க்கை என்று பொருள். "பரார்த்தம்" என்றால் தன்னைவிட வேறான ஒன்றினது பிரயோஜனத்திற்காக ஏற்பட்டிருப்பது என்று பொருள். இனி உபயோகிக்கப்படும் இவ்விரண்டு பதங்களுக்கும் இப்பொருளையே கொள்ளவேண்டும்.

"संघातपरार्थत्वात्" इति। पुरुषो ऽस्ति, अव्यक्तादेर्व्यतिरिक्तः। कुतः? "संघातपरार्थत्वात्"। अव्यक्तमहदहङ्कारादयः परार्थाः, संघातत्वात्, शयनासनाभ्यङ्गादिवत्, सुखदुःखमोहात्मकतया ऽव्यक्तादयः सर्वे संघाताः॥ स्यादेतत्—शयनासनादयः संघाताः संहतशरीरार्था दृष्टाः, न त्वात्मानमव्यक्ताद्यतिरिक्तं प्रति परार्थाः। तस्मात् संघातान्तरमेव परं गमयेयुः, न त्वसंहतात्मानम् इत्यत आह—"त्रिगुणादिविपर्ययात्" इति। अयमभि-

---

கும் வஸ்து பாரார்த்தமாகவே இருக்கின்றது என்பதுபற்றியே. அவ்யக்தம் முதலியவைகளில் 'பாரார்த்தமாயிருக்குந் தன்மை' என்ற ஹேது எவ்விதஞ் சித்திக்கின்றது என்றால்—படுக்கை, ஆசனம், எண்ணை முதலியவைகள் சங்காதமாயிருப்பதுபற்றி எவ்விதம் பாரார்த்தமாகின்றனவோ, அதாவது தன்னைவிட வேறான ஒன்றிற்காக ஏற்பட்டதாயாகின்றனவோ அவ்விதமே அவ்யக்தம், மஹத், அஹங்காரம் முதலியவைகளும் சங்காதமாயிருப்பதால் பாரார்த்தமாகின்றன; அதாவது தன்னைவிட வேறான ஒருவனுடைய பிரயோஜனத்திற்காக ஏற்படுகின்றன என்ற அனுமானத்தினால் சித்திக்கின்றது என்க. அவ்யக்தம் முதலியவைகள் சுகம், துக்கம், மோஹம் எனப்படும் சத்வம், ரஜஸ், தமஸ் இவையுள்ளனவாக இருப்பதால் சங்காதமாகின்றன. ஆதலால் அவ்யக்தம் முதலியவற்றினும் வேறுபட்டவனாய் புருஷனொருவனிருக்கின்றான்.

இஃதெல்லாமிருக்கட்டும். படுக்கை, ஆசனம், எண்ணை முதலிய சங்காதங்கள் மற்றுமோர் சங்காதமான சரீரம் முதலியவற்றிற்காக ஏற்பட்டிருப்பதை நாம் கண்டிருக்கிறோம். அவ்யக்தம் முதலியவற்றினும் வேறுபட்டிருக்கின்ற ஆத்மாவுக்காக ஏற்பட்டிருப்பதாக நாம் அனுபவிக்கவில்லை. ஆகையால் அவ்யக்தம் முதலியவற்றிலிருக்கும் பாரார்த்தமாயிருக்குந் தன்மை என்றஹேதுவால் மற்றுமோர் சங்காதம் சித்திக்குமேயல்லாது சங்காதமாக இல்லாத வேறு ஒரு ஆத்மவஸ்து சித்திக்காது என்றால் பதிலளிக்கிறார்—त्रिगुणादिविपर्ययात् इति। இவ்விதஞ் சொன்

प्रायः—संघातान्तरार्थत्वे हि तस्यापि संघातत्वात् तेनापि संघातान्तरार्थेन भवितव्यम्; एवं तेन तेनेत्यनवस्थास्यात्। न च व्यवस्थायां सत्यामनवस्था युक्ता, कल्पनागौरवप्रसङ्गात्। न च 'प्रमाणबलेन कल्पनागौरवमपिमृष्यत' इति युक्तम्, संहतत्वस्य पारार्थ्यमात्रेणान्वयात्। दृष्टान्तदृष्टसर्वधर्मानुरोधेन त्वनुमानमिच्छतः सर्वानुमानोच्छेदप्रसङ्ग इत्युपपादितं न्यायवार्तिकतात्पर्यटीकायामस्माभिः। तस्मादनवस्थाभिया ऽस्यासंघातत्वमिच்छता ऽत्रिगुणत्वंविवे-

---

னதின் அபிப்ராயம் பின்வருமாறு— அவ்யக்தம் முதலியவைகள் வேறு ஒரு சங்காதத்திற்காக ஏற்பட்டிருக்கின்றன என்று அங்கீகரித்தால் அதையும் வேறு ஒரு சங்காதத்திற்காக ஏற்பட்டிருப்பதாய் யங்கீகரிக்கவேண்டும். பிறகு அதையும் வேறு ஒரு சங்காதத்திற்காக ஏற்பட்டிருப்பதா யங்கீகரிக்கவேண்டிவரும். இதனல் அனவஸ்தை என்றதோஷம் பிரசங்கிக்கும். வியவஸ்தை (ஓர் இடத்தில் முடிவு) சம்பவிக்கும்பொழுது அநவஸ்தையையங்கீகரிப்பது உசிதமாகுமா? அவ்விதமங்கீகரித்தால் கல்பனுகௌரவம் (அநேகத்தையொத்துக்கொள்ளுதல்) என்ற தோஷம் ஏற்படும். பிரமாணமிருப்பதால் பலவஸ்துக்களிருப்பதா யங்கீகரிப்பதென்பதையும் பொருத்துக்கொள்ளுகிறோம் என்றும் சொல்லமுடியாது. ஏனென்றால் சங்காதமாயிருப்பதுபற்றி பரார்த்தமாக இருக்கவேண்டும் என்று மட்டும் சித்திக்கின்றதே யல்லாது அந்தப்பரமான (வேறான) வஸ்து சங்காதமாகவும் இருக்கவேண்டும் என்பதும் இந்தஹேதுவால் சித்திக்காது. அனுமிக்கப்படும் பொருள் திருஷ்டாந்தத்தில் காணப்படும் வஸ்துவுக்கு எல்லா அம்சத்திலும் ஒத்திருக்கவேண்டும் என்று அபிப்ராயப்படுகிறவனுக்கு இவ்விதம் ஓரிடத்திலும் சம்பவிக்காதாகையால் எல்லா அனுமானத்திற்கும் நாசம் ஏற்பட்டுவிடும்; அதாவது ஒரு அனுமானத்தாலும் ஒன்றையுமனுமிக்க முடியாது என்று நாம் நியாயவார்த்திகதாத்பர்ய டீகையில் நிரூபணஞ் செய்திருக்கிறோம். ஆதலால் அநவஸ்தை என்றதோஷத்தினிடமிருந்து பயந்து பரமானவஸ்துவுக்கு சங்காதமாயிருக்குந்தன்மையை யங்கீகரிக்கமுடி

कित्वम् अविषयत्वम् असामान्यत्वं चेतनत्वमप्रसवधर्मित्वञ्चाभ्युपेयम् । त्रिगुणत्वादयो हि धर्माः संहतत्वेन व्याप्ताः । तत्संहतत्वमस्मिन् परे व्यावर्तमानं त्रैगुण्यादि व्यावर्तयति, ब्राह्मणत्वमिव व्यावर्तमानं कठत्वादिकम् । तस्मादाचार्येण 'त्रिगुणादिविपर्ययात्' इति वदता ऽसंहतः परो विवक्षितः, स चात्मेतिसिद्धम् ॥

---

யாதாகையால் மூன்று குணமற்றிருத்தலையும், பகுத்தறிவுள்ளதாயிருக்குந்தன்மையையும், விஷயமாக இல்லாமலிருக்குந்தன்மையையும், சாதாரணமா யில்லாமலிருக்குந் தன்மையையும், சேதனனுயிருக்குந் தன்மையையும், மாறுதலற்றிருக்குந் தன்மையையும் ஒத்துக்கொள்ளவேண்டும். மூன்று குணங்களுடன் கூடி இருக்குந்தன்மை முதலிய தர்மங்கள் சங்காதமாயிருக்குகை என்றதுடன் வியாப்தியை யுடையனவாக இருக்கின்றன. அதாவது—சங்காதமாயிருக்குந்தன்மை என்பது எங்குசம்பவிக்குமோ அங்குதான் மூன்று குணங்களுடன் கூடி இருக்குந் தன்மை என்றதர்மம் சம்பவிக்கும். அந்தச்சங்காதமாயிருக்குந் தன்மை என்ற தர்மம் இப்பொழுது சாதிக்கப்படும் புருஷனிடமில்லாமையால் மூன்று குணங்களுடன் கூடி இருக்குந்தன்மை முதலிய தர்மங்களும் இல்லாதவைகளாக ஆகின்றன. உதாஹரணம்—கடம் முதலியவைகள் பிராம்மணனின் உட்பிரிவுஜாதிகள். கடம் என்ற சாகையை (வேதபாகத்தை) அத்யயனஞ்செய்பவன் கடனெனப்படுவன். ஆகவேபிராம்மணனுக இல்லாதவனிடம் கடம்முதலிய ஜாதிகள் எவ்விதம் சம்பவிக்கிறதில்லையோ அவ்விதமே இங்குமறியவும். ஆதலால் அனுமிக்கப்படும் ஆத்மவஸ்து சங்காதரூபமாயிருக்கக்கூடாது என்பதே त्रिगुणादिविपर्ययात् என்று சொன்ன ஆசிரியரின்கருத்து. அது தான் "ஆத்மா" எனப்படும்.

பின் சொல்லப்படும் காரணத்தினுலும் அவ்யக்தம் முதலியவற்றினும் வேறு பட்டவனுய் புருஷனெருவ னிருக்கின்றுன் என்று சித்திக்கின்றது. अधिष्ठानात् மூன்று குணமுள்ள வஸ்துக்கள் யாவும் மற்றவனுல் தூண்டப்பன்டுகிறன. எங்கெதந்

इतश्च परः पुरुषो ऽस्ति—"अधिष्ठानात्"। त्रिगुणात्मकानामधिष्ठीयमानत्वात्। यद्यत्सुखदुःखमोहात्मकं तत्सर्वं परेणाधिष्ठीयमानं दृष्टम्, यथा रथादिर्यन्त्रादिभिः। सुखदुःखमोहात्मकं चेदं बुद्ध्यादि, तस्मादेतदपि परेणाधिष्ठातव्यम्। स च परस्त्रैगुण्यादन्य आत्मेति॥

इतश्चास्ति पुरुषः—"भोक्तृभावात्" भोक्तृभावेन भोग्ये सुखदुःखे उपलक्षयति। भोग्ये हि सुखदुःखे अनुकूलप्रतिकूलवेदनीये प्रत्यात्ममनुभूयेते। तेनानयोरनुकूलनीयेन प्रतिकूलनीयेन च केनचिदप्यन्येन भवितव्यम्। न चानुकूलनीयाः प्रतिकूलनीया वा बुद्ध्यादयः, तेषां सुखदुःखाद्यात्मकत्वेन

---

வஸ்து சுகம், துக்கம், மோஹ மிவைகட்குக் காரணமாக இருக்கின்றதோ அஃதெல்லாம் மற்றவனை நியந்தாவாக வுடையதாயிருக்கின்றது. ஒரு வண்டியை எடுத்துக்கொள்வோம். அது சத்வம் முதலிய மூன்று குணமுள்ளதா யிருக்கின்றது. அது தனது கார்யத்தைச் செய்யவேண்டு மானால் வண்டிக்காரனை யபேக்ஷிக்கின்றது. புத்தி முதலியவைகளும் சுகம், துக்கம், மோஹமிவைகளுக்குச் சாதனமாயிருக்கின்றன. ஆதலால் இதுவும் மற்றவனின் தூண்டுதலால் பிரவிருத்தியை யடையவேண்டும். அவனே மூன்று குணமுள்ள வஸ்துக்களினும் வேறுபட்ட ஆத்மா எனப்படுவன்.

பின் சொல்லப்படும் காரணத்தினாலும் புருஷனொருவனிருக்கின்றான்—**भोक्तृभावात् भोक्तृभाव** என்ற பதம் அனுபவிக்கத்தகுந்த சுகம் துக்கம் இவைகளைக் குறிப்பிடுகின்றது. சுகம் அனுகூலம் என்றும், துக்கம் பிரதிகூலம் என்றும் ஒவ்வொருவனாலு மனுபவிக்கப்படுகின்றது. ஆனகயினால் சுகம் துக்கமிவைகளை அனுகூலம் பிரதிகூலம் என்று கருதுகின்றவன் இருக்கவேண்டுமென்று சித்திக்கின்றது. அனுகூலம் பிரதிகூலம் என்று கருதுகின்ற வஸ்து புத்தி முதலியவைகளே என்று சொல்லமுடியாது. ஏனென்றால் அவைகள் சுகதுக்காத்மகமாக இருக்கின்ற

स्वात्मनि वृत्तिविरोधात्। तस्मात् यो ऽसुखाद्यात्मा सो ऽनुकूलनीयः प्रतिकूलनीयो वा, स चा ऽऽत्मेति ॥ अन्ये त्वाहुः—भोग्या दृश्या बुद्ध्यादयः। न च द्रष्टारमन्तरेण दृश्यता युक्ता तेषाम्। तस्मादस्ति द्रष्टा दृश्यबुद्ध्याद्यतिरिक्तः, स चा ऽऽत्मेति ॥ भोक्तृभावात् द्रष्टृभावात्, दृश्येन द्रष्टुरनुमानादित्यर्थः। दृश्यत्वं च बुद्ध्यादीनां सुखाद्यात्मकतया पृथिव्यादिवदनुमितम् ॥

इतश्चास्ति पुरुष इत्याह—"कैवल्यार्थं प्रवृत्तेश्च" इति। शास्त्राणां महर्षीणांच दिव्यलोचनानां। कैवल्यमात्यन्तिकदुःखत्रयप्रशमलक्षणं न बुद्ध्यादीनां

---

படியால் தன்னையே தான் அனுபவித்தல் என்பது விருத்தம் என்பது பற்றியே என்க. ஆகையால் எவன் உண்மையில் சுகம் முதலியவைகளற்றவனோ அவனே அனுகூலம் பிரதிகூலம் என்று கருதுகின்றவன். அவனே ஆத்மவஸ்து. மற்றவர்கள் வேறு விதமாக வியாக்யானஞ் செய்கின்றனர்—போக்யம் என்றால் அறியக்கூடியது என்று பொருள். அறிகிறவனன்னியில் பிருதிவீ முதலிய வஸ்துக்களுக்கு அறியப்படுகை என்பது சம்பவிக்காது. ஆதலாலறிகிறவ னொருவன் அறியப்படுகின்ற புத்தி முதலியவற்றினும் வேறுபட்டவனா யிருக்கின்றான். அவனே ஆத்மா எனப்படுவன். **भोक्तृभावात्** என்றால் அறிகிறவனா யிருப்பதால் என்று பொருள். அதாவது அறியப்படுகின்ற வஸ்துக்களைக்கொண்டு அறிகிறவன் அனுமிக்கப்படுகிறான். புத்தி முதலியவைகள் சுகம் முதலியவற்றின் வடிவமாக இருப்பதால் பிருதிவீ முதலியவற்றிற்குப்போல் அறியப்படுகை அனுமிக்கப்பட்டது.

பின்சொல்லப்படும் காரணத்தினாலும் புருஷனிருப்பதா யனுமிக்கிறோம் என்கிறார்—**कैवल्यार्थं प्रवृत्तेश्च** இங்கு **शास्त्राणां महर्षीणां च दिव्यलोचनानाम्** என்றதைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். முற்றிலும் மூன்று துக்கங்களும் விலகுதல் என்ற கைவல்யம் புத்தி முதலியவற்றிற்குச் சம்பவிக்காது. அவைகள் துக்கவடிவமாகவே இருப்பதால் அவற்றின் சுவபாவமான சுகம் துக்

सम्भवति । ते हि दुःखाद्यात्मकाः कथं स्वभावाद्वियोजयितुं शक्यन्ते । तद्‌-तिरिक्तस्यतु अतदात्मनस्ततो वियोगः शक्यसम्पादः, तस्मात्‌ कैवल्यार्थं प्रवृत्तेः आगमानां महाधियां च अस्ति बुद्ध्यादिव्यतिरिक्त आत्मेति सिद्धम्‌ ॥१७॥

तदेवं पुरुषास्तित्वं प्रतिपाद्य, स किं सर्वशरीरेष्वेकः किमनेकः प्रति-क्षेत्रमिति संशये, तस्य प्रतिक्षेत्रमनेकत्वमुपपादयति—

मू० । जननमरणकरणानां प्रतिनियमादयुगपत्प्रवृत्तेश्च ।
पुरुषबहुत्वं सिद्धं त्रैगुण्यविपर्ययाच्चैव ॥ १८ ॥

---

கம் முதலியவற்றினின்றும் எவ்விதமவற்றைப் பிரிக்கமுடியும்? புத்தி முதலியவற்றினும் வேறு பட்டவனுக்கோவெனில் சுகதுக்கம்முதலியவற்றைச்சுவபாவமாயுடையாதவனுயிருப்பதால் பிரிவு சம்பவிக்கலாம். ஆகையால் கைவல்யம் என்ற நிலை சம்பவிப்பதற்காக சாஸ்திரங்களும் மேதாவிகளும் பிரவிருத்திப்பதால் புத்தி முதலியவற்றினும் வேறுபட்டவனுய் ஆத்மா ஒருவனிருக்கின்ருன் என்று ஏற்பட்டது.

பதினெட்டாவது சுலோகம்

(அ - கை) இவ்விதம் மேற்சொல்லிய ஹேதுக்களால் அவ்யக்தம் முதலியவற்றினும் வேறுபட்டவனுய் புருஷனொருவனிருக்கின்ருன் என்று சாதித்து, அவன் எல்லாச் சரீரங்களினுமொருவனு? அல்லது ஒவ்வொரு சரீரத்திற்கும் ஒவ்வொரு புருஷன் வீதம் அனேகனு? என்று சந்தேகமேற்படவே ஒவ்வொரு சரீரத்திற்கும் ஒவ்வொரு புருஷன் வீதம் அநேகனுயிருக்கிருன் என்பதை ஸ்தாபிக்கிருர்—

(ப - ரை) **जननमरणकरणानाम्**=பிறவி, இறப்பு, கண், காது முதலிய இந்திரியங்கள், இவைகள் **प्रतिनियमात्**=ஒவ்வொருவனுக்கு ஒவ்வோர் விதமாயிருப்பதாலும் **अयुगपत्प्रवृत्तेश्च**=ஒரே சமயத்தில் பிரவிருத்தி ஏற்படாமலிருப்பதாலும் **त्रैगुण्य विपर्ययाच्च**=ஸத்வம், ரஜஸ், தமஸ் முதலிய குணங்களுக்கு வித்தியாச மிருப்ப

"जननेत्यादिना। "पुरुषबहुत्वं सिद्धम्"। कस्मात्? "जननमरणकरणानां प्रतिनियमात्"। निकायविशिष्टाभिरपूर्वाभिर्देहेन्द्रियमनोऽहङ्कारबुद्धिवेदनाभिः पुरुषस्याभिसम्बन्धो जन्म, न तु पुरुषस्य परिणामः, तस्यापरिणामित्वात्। तेषामेव च देहादीनामुपात्तानां परित्यागो मरणम्, नत्वात्मनो विनाशः, तस्य कूटस्थनित्यत्वात्। करणानि बुद्ध्यादीनि त्रयोदश। तेषां जननमरणकरणानां प्रतिनियमो व्यवस्था। सा खल्वियं सर्वश-

---

தாலும் पुरुषबहुत्वम्=புருஷன் என்ற தத்துவத்திற்கு அநேகமாயிருக்குந் தன்மை एव=நிச்சயமாய் सिद्धम्=சித்திக்கின்றது.

(தா - ம்) ஓரிடத்தில் சேர்ந்திருக்கும் நிலையையடைந்த புதியதான சரீரம், இந்திரியம், மனஸ், அஹங்காரம், புத்தி, அநுபவம் இவைகளுடன் புருஷனுக்கு ஏற்படும் சம்பந்தம் "ஜன்ம" எனப்படும். புருஷனுக்கு ஜன்மமுண்டாகின்றதென்ருல் பரிணுமமுண்டாகிறது என்று கொள்ளக்கூடாது. ஏனென்ருல் புருஷன் பரிணுமமற்றவன் என்பதை முன்னரே ஸ்தாபித்திருக்கிருேம். ஸ்வீகரிக்கப்பட்டதேஹம் முதலியவற்றை விடுதலே "மரணம்" எனப்படும். மரணம் என்ருல் புருஷனுக்கு அழிவு என்று கொள்ளக்கூடாது. ஏனென்ருல் புருஷன் பரிணுமமற்றிருப்பதுபற்றி நித்யனுக இருக்கின்ருன். கர்மேந்திரியம் 5. ஞானேந்திரியம் 5. மனஸ் 1. புத்தி 1. அஹங்காரம் 1- ஆக இப்பதின்மூன்றும் கரணம் எனப்படும். ஆகவே ஜனனம், மரணம், கரணம் இவைகள் வியவஸ்தையுள்ளனவாக இருக்கின்றன. அதாவது—இன்னுர் இந்தச்சமயத்தில் மரணமடைவது, இன்னுர் இந்தச்சமயத்தில் ஜனனமடைவது என்றதுமுதலிய வியவஸ்தை இருக்கின்றது. இந்தவியவஸ்தையானது எல்லாச் சரீரங்களிலும் ஒரேபுருஷனிருக்கின்ருன் என்ருல் சம்பவிக்காது. எல்லாச்சரீரங்களிலும் ஒருபுருஷனே இருக்கின்ருன் என்று அங்கீகரிப்போமாகில் ஒருபுருஷன் பிறவியையடைந்தால் எல்லோரும் அதேசமயத்தில் பிறவியையடைய வேண்டிவரும். ஒருவன் மரணமடைந்தால் எல்லோரும் மரணமடையவேண்டிவரும். ஒரு

रीरेष्वेकस्मिन् पुरुषे नोपपद्यते । तदा खल्वेकस्मिन् पुरुषे जायमाने सर्वे जायेरन्, म्रियमाणे च म्रियेरन्, अन्धादौ चैकस्मिन् सर्व एव अन्धादयो, विचित्ते चैकस्मिन् सर्व एव विचित्ताः स्युरित्यव्यवस्था स्यात् । प्रतिक्षेत्रं तु पुरुषभेदे भवति व्यवस्था । न च 'एकस्यापि पुरुषस्य देहोपादानभेदाद्व्यवस्था' इति युक्तम्, पाणिस्तनाद्युपाधिभेदेनापि जन्ममरणादिव्यवस्थाप्रसङ्गात् । न हि पाणौ वृक्णे जाते वा स्तनादौ महत्यवयवे युवतिर्मृता जाता वा भवतीति ॥

इतश्च प्रतिक्षेत्रं पुरुषभेद इत्याह—"अयुगपत्प्रवृत्तेश्च" इति । प्रवृत्तिः प्रयत्नलक्षणा यद्यप्यन्तःकरणवर्तिनी, तथाऽपि पुरुषे उपचर्यते ।

---

வன் குருடுமுதலிய இந்திரியதோஷத்தைப் பெற்றால் அத்தோஷத்தை அனைவரும் பெறவேண்டிவரும். ஒருவனுக்குச் சித்தங் கெட்டுப்போனால் எல்லோருடைய சித்தமும் கெடவேண்டிவரும். அவ்விதமோ நாமனுபவத்தில்காணவில்லை. ஒவ்வொரு சரீரத்திலும் ஒவ்வொருபுருஷனிருக்கிறான் என்றால் வியவஸ்தை சம்பவிக்கலாம். சங்கை—புருஷன் ஒருவனாக இருந்தபோதிலும் சரீரம் என்ற உபாதி அனேகமாயிருப்பதால் மேற்சொல்லிய வியவஸ்தை சம்பவிக்கலாமெனின், உத்தரம்—அது சரியல்ல. அவ்விதமாயின் கை, ஸ்தனம் முதலிய உபாதிகளில் வேற்றுமை ஏற்பட்டாலும் பிறவி, இறப்பு, முதலியவியவஸ்தையை யங்கீகரிக்கவேண்டிவரும். கையைவெட்டிவிடுவதாலோ, ஸ்தனம் முதலிய பெறிய அவயவ முண்டாவதாலோ யுவதியானவள் மரணமடைந்தவளாகவோ, ஜனனமடைந்தவளாகவோ ஆகின்றாளா? இல்லை. ஆதலால் நீ சொல்வது சரியல்ல.

பின் சொல்லப்படும் காரணத்தினாலும் புருஷன் அநேகனாயிருக்கவேண்டும் என்பது சித்திக்கின்றது—**अयुगपत्प्रवृत्तेश्चेति ।** பிரயத்னரூபமான பிரவிருத்தி என்பது அந்தக்கரணத்தின் தர்மமாயினும் அந்தக்கரணத்தின் சாமீப்யத்தால் புருஷனிடமிருப்பதாய்ச் சொல்லப் படுகின்றது. புருஷன் ஒருசரீரத்தில் பிரவிருத்

तथा च तस्मिन्नेकत्र शरीरे प्रयतमाने, स एव सर्वशरीरेष्वेक इति सर्वत्र प्रयतेत, ततश्च सर्वाण्येव शरीराणि युगपच्चालयेत्। नानात्वे तु नायं दोष इति॥

इतश्च पुरुषभेद इत्याह—"त्रैगुण्यविपर्ययाच्चैव" इति। एवकारो भिन्नक्रमः 'सिद्धम्' इत्यस्यानन्तरं द्रष्टव्यः, सिद्धमेव नासिद्धम्। त्रयो गुणास्त्रैगुण्यम् तस्य विपर्ययो ऽन्यथात्वम्। केचित्खलु सत्त्वनिकायाः सत्त्व-बहुलाः, यथोर्ध्वस्रोतसः, केचिद्रजोबहुलाः, यथा मनुष्याः, केचित्तमोबहु-लाः, यथा तिर्यग्योनयः। सो ऽयमीदृशस्त्रैगुण्यविपर्ययो ऽन्यथाभावस्तेषु सत्त्वनिकायेषु न भवेत् यद्येकः पुरुषः स्यात्, पुरुषभेदे त्वयमदोष इति॥१८

---

தியையடைந்தால் எல்லாச்சரீரங்களிலும் புருஷன் ஒருவனுகவே இருப்பதுபற்றி எல்லாச் சரீரங்களிலும் பிரவிருத்தியை யடைய வேண்டிவரும். ஆகவே எல்லாச் சரீரங்களிலும் ஒரேசமயத்தில் அசைதலுண்டாகவேண்டும். அவ்விதமேற்படுவதாகவோ நாமனு பவத்தில் காணவில்லை. அநேகம் என்று ஒற்றுக்கொண்டால் முற் கூறியதோஷம் பிரசங்கிக்காது. பின்சொல்லப்படும் வேறுகார ணத்திலும் புருஷன் அனேகனுக இருக்கவேண்டும் என்கிறூர் त्रैगुण्यविपर्ययाच्चैवेति एव என்ற பதத்தைப் பிரித்தெடுத்து सिद्धम् என்றபதத்திற்குப் பிறகு சேர்த்துக்கொள்ளவேண்டும். புருஷ னுக்கு அனேகனுயிருக்குந்தன்மை நிச்சயமாய்ச் சித்திக்கின்றது; ஒருபொழுதும் அசித்தமாவதில்லை என்று ஏற்படுகின்றது. ஒவ் வொரு புருஷனிடத்திலும் சத்வம்முதலிய குணங்களில் உயர்வு தாழ்வு இருக்கின்றது. அதாவது தேவதைகள் அதிகமாய் சத்வகுணமுள்ளவர்களாகவும், மனிதர்கள் ரஜோகுணம் நிறைந்த வர்களாகவும், பசுபக்ஷி முதலியவைகள் தமோகுணம் நிறைந்த வைகளாகவுமிருக்கின்றன. இத்தகையகுணங்களின் உயர்வு தாழ் வு புருஷன் ஒருவனுக இருந்தால் பொருந்தாது. புருஷன் அனேகனுக இருந்தால் மேற்சொல்லியகுணங்களின் உயர்வு தா ழ்வு தோஷமாக ஏற்படாது. ஆதலால் ஒவ்வொரு சரீரத்திற் கும் ஒவ்வொருபுருஷன் வீதம் புருஷன் அனேகனுக இருக்கின் றுன் என்று சித்திக்கின்றது.

एवं पुरुषबहुत्वं प्रसाध्य विवेकज्ञानोपयोगितया तस्य धर्मानाह—

मू० ॥ तस्माच्च विपर्यासात्सिद्धं साक्षित्वमस्य पुरुषस्य ।
कैवल्यम्माध्यस्थ्यं द्रष्टृत्वमकर्तृभावश्च ॥ १९ ॥

"तस्माच्च" इति । 'च' शब्दः पुरुषस्य बहुत्वेन सह धर्मान्तराणि समुच्चिनोति । 'विपर्यासादस्मात्' इत्युक्ते त्रैगुण्यविपर्ययादित्यनन्तरोक्तं सम्बध्येत; अतस्तन्निरासाय 'तस्मात्' इत्युक्तम् । अनन्तरोक्तं हि सन्निधानादिदमो विषयो, विप्रकृष्टं च तदः, इति विप्रकृष्टं त्रिगुणमविवेकीत्यादि सम्बध्यते ॥

---

பத்தொன்பதாவது சுலோகம்.

(அ - கை) இவ்விதம் புருஷன் அநேகனுக இருக்கின்றானென்பதை ஸ்தாபித்து புருஷன், பிரகிருதி இவைகளைப்பகுத்தறிவதற்குச் சாதனமான புருஷனின் அசாதாரணதர்மங்களையுபதேசிக்கிறார்—

(ப - ரை) तस्मात्=11வது சுலோகத்திற் சொல்லிய மூன்று குணங்களுடன் கூடி இருக்குந்தன்மை முதலிய தர்மமுள்ளதைக் காட்டிலும் विपर्यासात्=வேற்றுமைஇருப்பதால்அதாவது-மூன்று குணங்களற்றிருத்தல் முதலிய தர்மங்களிருப்பதால் अस्य=இந்த पुरुषस्य=புருஷனுக்கு साक्षित्वम्=சாக்ஷியாக இருக்கும் தன்மையும், कैवल्यम्=முற்றிலும் மூன்றுவித துக்கமற்ற நிலையான கைவல்யமும் माध्यस्थ्यम्=மத்யஸ்தனுயிருக்கும் தன்மையும், द्रष्टृत्वम्=அறிகின்றவனுயிருக்கும் தன்மையும், अकर्तृभावश्च=கர்த்தாவாக இல்லாமலிருக்கும்தன்மையும் सिद्धम्=சித்திக்கின்றது.

(தா - ம்) तस्माच्चेति । च என்றபதம் போட்டபடியால் புருஷனிடம் அனேகனுக இருக்குந்தன்மை என்ற தர்மத்துடன் இங்கு சொல்லப்படுகின்ற மற்றதர்மங்களும் சேர்ந்திருக்கின்றன என்பது தெரிவிக்கப்படுகின்றது. विपर्यासादस्मात् என்று சுலோ

तस्मात्त्रिगुणादेर्यो विपर्यासः स पुरुषस्यात्रिगुणत्वं विवेकित्वमविषयत्वमसाधारणत्वं चेतनत्वमप्रसवधर्मित्वञ्च। तत्र चेतनत्वेनाविषयत्वेन च साक्षित्वद्रष्टृत्वे दर्शिते। चेतनो हि द्रष्टा भवति, नाचेतनः, साक्षी च दर्शितविषयो भवति; यस्मै प्रदर्श्यते विषयः स साक्षी, तथा हि लोकेऽर्थिप्रत्यर्थिनौ विवादविषयं साक्षिणे दर्शयतः; एवं प्रकृतिरपि स्वचरितं विषयं पुरुषाय दर्शयतीति पुरुषः साक्षी, न चाचेतनो विषयो वा शक्यो विषयं दर्शयितुम्, इति चैतन्यादविषयत्वाच्च भवति साक्षी। अत एव द्रष्टाऽपि भवति॥

---

கத்தை எழுதினல் சென்ற சுலோகத்தின் முடிவில் சொல்லப்பட்ட त्रैगुण्य विपर्ययाच्च என்பது इदम् என்றபதத்தால் எடுத்துக் கொள்ளப்படும். அவ்விதம் அதை இங்குக்கிரஹித்துக் கொள்ளக்கூடாதென்பதற்காக तस्मात् என்றபதம் போடப்பட்டது. इदम् என்ற வார்த்தை சமீபத்திலிருப்பதைக்குறிக்கும்; तत् என்ற வார்த்தை தூரத்திலிருப்பதைக்குறிக்கும் என்ற நியாயத்தை யனுசரித்து தூரத்திலிருக்கின்ற त्रिगुणमविवेकि என்ற சுலோகத்திற்சொல்லிய தர்மங்களைக் கிரஹித்துகொள்ள வேண்டும். ஆகவே புருஷனிடமுள்ள, மூன்றுகுணமற்றிருத்தல், விவேகியாக இருத்தல், விஷயமாக ஆகாமலிருத்தல், பரிணாமமற்றிருத்தல் என்ற யாதொரு தர்மங்களுண்டோ அவைகளுள் சேதனனுக இருத்தல் என்றதர்மத்தாலும், விஷயமாக ஆகாமலிருத்தல் என்றதர்மத்தாலும், ஸாக்ஷியாக இருக்குதல் திரஷ்டாவாக (அறிகின்றவனுக) இருக்குதல் என்ற இரண்டுதர்மங்கள் புருஷனிடம் சித்திக்கின்றன. எவ்விதமெனின் சேதனன் விஷயங்களை யறிகின்றவனுக ஆகக்கூடுமேயல்லாது மற்றது அவ்விதமாகாது. எவனிடம் விஷயங்கள் காண்பிக்கப்படுகின்றனவோ அவனே ஸாக்ஷியாவன். இவ்விஷயத்தில் லோகானுபவத்தைக் கவனிப்போம். வாதி, பிரதிவாதி இரண்டுபேர்களும் தகராறுனவிஷயத்தை சாக்ஷியினிடம் காண்பிக்கின்றனர். இவ்விதமே பிரகிருதியும் தனது நடத்தையானவிஷயத்தை புருஷனிடம் காண்பிக்

अत्रैगुण्याच्चास्य कैवल्यम्। आत्यन्तिको दुःखत्रयाभावः कैवल्यम्। तच्च तस्य स्वाभाविकादेवात्रैगुण्यात् सुखदुःखमोहरहितत्वात्सिद्धम्॥

अत एवात्रैगुण्यान्माध्यस्थ्यम्। सुखी हि सुखेन तृप्यन् दुःखी हि दुःखं द्विषन् मध्यस्थो न भवति। तदुभयरहितस्तु मध्यस्थ इत्युदासीन इति चाख्यायते। विवेकित्वादप्रसवधर्मित्वाच्चाकर्तेति सिद्धम्॥ १९॥

स्यादेतत्—प्रमाणेन कर्तव्यमर्थमवगम्य 'चेतनोऽहं चिकीर्षन् करोमि' इति कृतिचैतन்யयोः सामानाधिकरण्यमनुभवसिद्धम्; तदेतस्मि-

---

கின்றது. ஆனதுபற்றிப் புருஷன் சாக்ஷியாகின்றான். அசேதனத்தினிடமோ விஷயத்தினிடமோ விஷயத்தைக்காண்பிப்பதென்பது சம்பவிக்காது. ஆதலால் சேதனனுயிருப்பதாலும், விஷயமாக ஆகாமலிருப்பதாலும், புருஷன் சாக்ஷியாகின்றான். ஆனதுபற்றியே திரஷ்டாவாக (பார்க்கின்றவனுக) வுமாகின்றான். புருஷனிடம் சத்வம்முதலிய குணங்கள் சுவபாவத்திவில்லாமலிருப்பதால் கைவல்யம் என்றதர்மம் சித்திக்கின்றது. முற்றிலும் மூன்றுவிதமானதுக்கத்தின் நிவிருத்தி கையல்யம் எனப்படும். அது சுவபாவ சித்தமான மூன்றுகுணமற்றிருத்தல் என்றதர்மத்தால் சித்திக்கின்ற சுகம், துக்கம், மோஹம் இவைகளற்றிருத்தல் என்றதர்மத்தால் ஏற்படுகின்றது. மூன்றுகுணமற்றிருப்பதாலேயே மத்யஸ்தனுயிருக்குந்தன்மை என்ற தர்மமும் சித்திக்கின்றது. மூன்றுகுணமுள்ளவனே சுகத்தால் திருப்தியடைவதாலும் துக்கத்தால் துவேஷமடைவதாலும் மத்யஸ்த நிலையையடையமாட்டான். சுகதுக்கமற்றவனே வெனின் உதாசீனனென்றும், மத்யஸ்தனென்றும் சொல்லப்படுவான். விவேகியாக் இருப்பதாலும், பரிணமமற்றிருப்பதாலும் அகர்த்திருத்வம் (கர்த்தாவாக இல்லாமலிருத்தல்) என்ற தர்மம்சித்திக்கின்றது.

(அ - கை) இஃதெல்லாமிருக்கட்டும். பிரமாணம் வாயிலாகச் செய்யவேண்டிய கார்யத்தையறிந்து சேதனனனநான்

न्मते, नावकल्पते, चेतनस्याकर्तृत्वात् कर्तुश्चाचैतन्यात् इत्यत आह—

मू० ॥ तस्मात्तत्संयोगादचेतनं चेतनावदिव लिङ्गम् ।
गुणकर्तृत्वे च तथा कर्तेव भवत्युदासीनः ॥ २० ॥

"तस्मात्" इति । यतश्चैतन्यकर्तृत्वे भिन्नाधिकरणे युक्तितः सिद्धे, तस्मात् भ्रान्तिरियमित्यर्थः । 'लिङ्गम्' महदादिसूक्ष्मपर्यन्तं वक्ष्यति । भ्रान्तिबीजं तत्संयोगः तत्सन्निधानम् । अतिरोहितार्थमन्यत् ॥ २०

---

இதைச் செய்யவேண்டுமென்று விரும்பிச் செய்கின்றேன் என்று அனுபவமிருப்பதால் சைதன்யமும், பிரயத்னமும் ஒருவனிடமே இருப்பதாய்ச் சித்திக்கின்றது. சாங்கிய சித்தாந்தத்தில் எவன் சேதனனோ அவன் கர்த்தாவாக ஆகிறதில்லையாகையாலும், எவன் கர்த்தாவோ அவன்சேதனனாக ஆவதில்லையாகையாலும் மேற்சொல்லியபடி கர்த்தாவும் சேதனனும் ஒருவனே என்பது சித்திக்காதே என்றால் பதிலளிக்கிறார்.

(ப - ரை) तस्मात्=சைதன்யமும், கர்த்திருத்வமும் வெவ்வேறிடத்தில்தான் இருக்கவேண்டுமென்று சித்தித்து விட்டபடியால் अचेतनम्=சைதன்யமற்ற लिङ्गम्=மஹத், அஹங்காரம், 11 இந்திரியம், ஐந்து பூதங்களின் தன்மாத்திரைகள் இவைகள் तत्संयोगात्=சேதனனின் சேர்க்கையால் चेतनावदिव = சைதன்யமுள்ளது போலாகின்றது. गुणकर्तृत्वेऽपि=மூன்று குணமுள்ள புத்தியினிடம் கர்த்திருத்வம் என்ற தர்மமிருந்தபோதிலும், उदासीनः=கர்தாவாகாத புருஷன் (तत्संयोगात्=கர்த்தாவுடன் சேர்க்கையால்) कर्तेव=கர்த்தாவைப்போல் भवति=ஆகின்றான்.

(தா - ம்) லிங்கம் எனப்படும் மஹத், அஹங்காரம், 11இந்திரியங்கள், ஐந்து பூதங்களின் தந்மாத்திரைகள், இவைகள் உண்மையில் சைதன்யமற்றதாயினும் சைதன்யமுள்ள புருஷனின் சேர்க்கையால் சைதன்யமுள்ளவைகள் போல் பாஸிக்கின்றன. இதுப்பிரமமே. இவ்விதமே கர்த்தாவாக இல்லாத புரு

'तत्संयोगात्' इत्युक्तम्, न च भिन्नयोः संयोगोऽपेक्षां विना, न चेयमुपकार्योपकारकभावं विनेत्यपेक्षाहेतुमुपकारमाह—

मू०। पुरुषस्य दर्शनार्थं कैवल्यार्थं तथा प्रधानस्य ।
पङ्ग्वन्धवदुभयोरपि संयोगस्तत्कृतः सर्गः ॥ २१ ॥

---

ஷனும் உண்மையில் கர்த்தாவாக இருக்கின்ற புத்தியின் சேர்க்கையால் கர்த்தாவைப் போலாகின்றான். (எ - று)



## இருபத் தோன்றுவது சுலோகம்.

(அ - கை) முந்திய சுலோகத்தில் கர்த்தாவான அந்தக்கரணம் புருஷன் இருவருக்கும் சேர்க்கை சொல்லப்பட்டது. தனிப்பட்ட இரண்டு வஸ்துக்களுக்குச் சேர்க்கையானது ஒன்றிற்கொன்று அபேக்ஷையின்றிச் சம்பவிக்காது. அவ்வபேக்ஷை என்பது பரஸ்பரம் உபகார்யோபகாரகபாவம் (ஒன்றிற்கொன்று உபகார மேற்படுதல்) இல்லாவிடில் நேராது. என்பது பற்றி அபேக்ஷை யுண்டாவதற்குக் காரணமான உபகாரத்தைச் சொல்லுகிறார்—

(ப - ரை) **प्रधानस्य**=பிரகிருதிக்கு (**पुरुषेण**=புருஷனால்) **दर्शनार्थम्**=பார்வை ஏற்படுவதற்காகவும் **तथा**=அவ்விதமே **पुरुषस्य**=புருஷனுக்கு **कैवल्यार्थम्**=மூன்றுவித துக்கமற்ற நிலை சம்பவிப்பதற்காகவும் ***पङ्ग्वन्धवत्**=நொண்டி குருடன் இவர்களுக்குப்போல

---

* ஓர் நொண்டி நடுக்காட்டில், தன்னையாராவது நகரத்திற்கு எடுத்துச் சென்றால் தேவலையே ஒருவரையும் காணேமே என்று மிகவும் கஷ்டப்பட்டு நான்கு திக்குகளையும் பார்த்துக் கொண்டிருந்தான். அக்காட்டிலேயே ஓர் குருடனும் கண்தெரியும் மனிதர்களுள் யாராவது தன்னை அழைத்துச் செல்வாரா ஒன்றும் தெரியவில்லையே என்று மிக்கவருத்தப்பட்டு கொண்டிருந்தான். இருவரும் தற்செயலாய்ச் சேர்ந்து குருடனின் கழுத்தில் நொண்டி ஏறி உட்கார்ந்து வழியைக்காட்டவே குருடன் நொண்

"पुरुषस्य" इति । प्रधानस्येति कर्मणि षष्ठी । प्रधानस्य सर्वकारणस्य यद्दर्शनं पुरुषेण तदर्थम् । तदनेन भोग्यता प्रधानस्य दर्शिता । ततश्च भोग्यं प्रधानं भोक्तारमन्तरेण न सम्भवतीति युक्ताऽस्य भोक्त्रपेक्षा ॥

पुरुषस्य अपेक्षां दर्शयति—"पुरुषस्य कैवल्यार्थम्" इति । तथा हि भोग्येन प्रधानेन संभिन्नः पुरुषः तद्गतं दुःखत्रयं स्वात्मन्यभिमन्यमानः कैवल्यं प्रार्थयते । तच्च सत्वपुरुषान्यताख्यातिनिबंन्धनम् । न च सत्वपुरुषान्यताख्यातिः प्रधानमन्तरेणेति कैवल्यार्थं पुरुषः प्रधानमपेक्षते । अनादित्वाच्च संयोगपरम्पराया भोगाय संयुक्तो ऽपि कैवल्याय पुनः संयुज्यत इति युक्तम् ॥

---

**संयोगः**=சேர்க்கை (**भवति**=உண்டாகின்றது) **सर्गः**=மஹத், அஹங்காரம் என்றக் கிரமமாக பிரபஞ்ச சிருஷ்டி **तत्कृतः**=பிரகிருதி புருஷன் இவர்களின் சேர்க்கையால் ஏற்படுகின்றது.

(தா - ம்) 'பிரகிருதி, புருஷனின் பார்வையைப்பெறுவதற்காகப்புருஷனை அபேக்ஷிக்கின்றது' என்று சொன்னதிலிருந்து பிரகிருதி போக்யம் என்று நிரூபித்ததாயாகின்றது. ஆகவே போக்யமானது (அனுபவிக்கப்படும் பொருள்) போக்தா (அனுபவிக்கிறவன்) இன்றி சம்பவிக்காதாகையால் பிரகிருதிக்கு போக்தாவானபுருஷனைப்பற்றிய அபேக்ஷை (எதிர்பார்த்தல்) பொருத்தமுள்ளதாயாகின்றது. புருஷனுக்குப் பிரகிருதி விஷயமாயுண்டாகும் அபேக்ஷையைக் காண்பிக்கிறார். **पुरुषस्य कैवल्यार्थम्**=போக்யமான பிரதானத்துடன் தாதாத்மியாத்யாசத்தை (பிரகிருதி என்பது நானேஎன்ற அபிமானத்தை)யடைந்தால்தான் புருஷன் அந்தப் பிரகிருதியினிடமுள்ள மூன்று விதமான துக்கங்களைத் தன்னிடமுள்ளதாய்ப் பாவித்து அதனால் வருந்தி அந்த மூன்று வித துக்கமற்ற நிலையான கைவல்யத்தை விரும்பக்கூடும்.

---

டியைச்சுமந்து நகரமடைந்து இருவரும் லாபமடைந்தனர். இதுவே "பங்க்வந்த நியாயம்" எனப்படும்.

ननु भवत्वनयोः संयोगो, महदादिसर्गस्तु कुत इत्यत आह— "तत्कृत स्सर्ग" इति। संयोगो हि न महदादिसर्गमन्तरेण भोगाय कैवल्याय च पर्याप्त इति संयोग एव भोगापवर्गार्थं सर्गं करोतीत्यर्थः ॥ २१ ॥

सर्गक्रममाह—

---

அந்தக் கைவல்யமோ பிரகிருதி புருஷன் இவைகளைப்பற்றிய பேதக்ஞானத்தைக் காரணமாயுடையது. மேற் சொல்லிய பேதக்ஞானம் பிரகிருதி இல்லாவிடில் சம்பவிக்காது. ஆனது பற்றிப் பிரகிருதியைப் புருஷனும் அபேக்ஷிக்கின்றான். சங்கை—போகத்தைக் கொடுக்கின்ற அநாதியான சேர்க்கையின் வரிசையானது இருக்கும் பொழுது எவ்விதம் கைவல்யம் ஏற்படுவதற்காகப் போகத்திற்கு விரோதியான ஸம்யோகம் ஏற்படும் எனின்? உத்தரம்—பல விதமான புண்யகர்மங்கள் காரணமாய் பிரகிருதி புருஷன் இவர்களைப்பற்றிச் சிரவணஞ்செய்து அதனால் எவனுக்கு மித்யாக்ஞானம் (பிரகிருதியே நான் என்ற அபிமானம்) துலேகின்றதோ அவனுக்குக் கைவல்யத்திற்குக் காரணமான பிரகிருதி புருஷ ஸம்யோகம் ஏற்படலாம். ஆகவே போகத்தைக் கொடுக்கின்ற பிரகிருதி புருஷ ஸம்யோகம் வேறுபட்டதாயும், மோக்ஷத்திற்குக் காரணமான பிரகிருதி புருஷ ஸம்யோகம் வேறுபட்டதாயுமிருப்பதால் இரண்டிற்கும் ஒரே சமயத்தில் சம்பவம் கிடையாதானது பற்றி மேற்ச் சொல்லிய சந்தேஹத்திற் கிடமில்லாமலாகிவிட்டது. சங்கை—பிரகிருதி புருஷன் இருவருக்கும் மேற் சொல்லிய காரணங்களால் சேர்க்கையுண்டாகட்டும். மஹத்முதலிய கார்யங்கள் எதற்காக உண்டாகின்றன என்றால்? உத்தரம் तत्कृतस्सर्गः பிரகிருதி புருஷன் இவர்களின் சேர்க்கை மஹத்முதலிய கார்யசிருஷ்டி ஏற்படாவிடில் போகத்தையோ கைவல்யத்தையோ தராதானதுபற்றி பிரகிருதி புருஷன் இவர்களின் சேர்க்கையே போகம் மோக்ஷம் இவைகள் ஏற்படுவதற்காகச் சிருஷ்டியைச் செய்கின்றது.

मू०। प्रकृतेर्महांस्ततो ऽहङ्कारस्तस्माद्गणश्च षोडशकः ।
तस्मादपि षोडशकात्पंचभ्यः पंच भूतानि ॥ २२ ॥

"प्रकृतेः" इति । प्रकृतिरव्यक्तम् । महदहङ्कारौ वक्ष्यमाणलक्षणौ । एकादशेन्द्रियाणि वक्ष्यमाणानि, तन्मात्राणि च पंच, सोयं षोडशसंख्यापरिमितो गणः षोडशकः । तस्मादपि षोडशकादपकृष्टेभ्यः पंचभ्यः तन्मात्रेभ्यः पंच भूतान्याकाशादीनि ॥

---

இருபத்திரண்டாவது சுலோகம்

(அ - கை) பிரபஞ்ச சிருஷ்டிக் கிரமத்தை உபதேசிக்கிறார்—

(ப - ரை) **प्रकृतेः**=மூலப்பிரகிருதியினிடமிருந்து **महान्**=மஹத்தத்துவமும், **ततः**=அந்த மஹத்தத்துவத்தினிடமிருந்து **अहङ्कारः**=அஹங்காரம் என்ற தத்துவமும் **तस्मात्**=அதனிடமிருந்து **षोडशकोगणश्च**=11 இந்திரியங்கள், 5 தந்மாத்திரைகள் என்ற 16 வஸ்துக்களடங்கிய கூட்டமும் **तस्मादपि षोडशकात्**=மேற்கூறின 16 வஸ்துக்களடங்கிய கூட்டத்தைக் காட்டிலும் (**अपकृष्टेभ्यः**=குறைந்த எண்ணுள்ள) **पञ्चभ्यः**=ஐந்து தந்மாத்திரைகளினின்றும் **पञ्चभूतानि**=பிருதிவீ, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம் என்ற ஐந்து பூதங்களும் (**भवन्ति**=உண்டாகின்றன.)

(தா - ம்) ஸ்தூலமான பூதங்களுக்குக் காரணமான சூக்ஷ்மமான ஓர் வித வஸ்து "தந்மாத்திரை" எனப்படும். அது ஒவ்வொரு பூதத்திற்கும் ஒவ்வொன்று வீதம் ஐந்து விதமாக இருக்கின்றது. ஆகாசம் என்ற பூதத்திற்குக் காரணமான தந்மாத்திரை சப்ததந்மாத்திரை என்றும், காற்றிற்குக் காரணமான தந்மாத்திரை ஸ்பர்ச தந்மாத்திரை என்றும், அக்னிக்குக் காரணமான தந்மாத்திரை ரூப தந்மாத்திரை என்றும், ஜலத்திற்குக் காரணமான தந்மாத்திரை ரஸ தந்மாத்திரை என்றும், பிருதிவிக்குக் காரணமான தந்மாத்திரை கந்த தந்மாத்திரை என்

तत्र शब्दतन्मात्रादाकाशं शब्दगुणं, शब्दतन्मात्र सहितात् स्पर्शतन्मात्राद्वायुः शब्दस्पर्शगुणः, शब्दस्पर्शतन्मात्रसहिताद्रूपतन्मात्रात्तेजः शब्दस्पर्शरूपगुणं, शब्दस्पर्शरूपतन्मात्रसहिताद्रसतन्मात्रादापः शब्दस्पर्शरूपरसगुणाः शब्दस्पर्शरूपरसतन्मात्रसहिताद्गन्धतन्मात्राच्छब्दस्पर्शरूपरसगन्धगुणा पृथिवी जायत इत्यर्थः ॥ २२ ॥

अव्यक्तं सामान्यतो लक्षितम् "तद्विपरीतमव्यक्तम्" (कारिका १०) इत्यनेन, विशेषतश्च "सत्वं लघु प्रकाशकम्" (कारिका १३) इत्यनेन, व्यक्तमपि सामान्यतो लक्षितम् "हेतुमत्" (कारिका १०) इत्यादिना । सम्प्रति विवेकज्ञानोपयोगितया व्यक्तविशेषं बुद्धिं लक्षयति—

---

றும், சொல்லப்படும். அவற்றுள் சப்த தந்மாத்திரை யினின்றும் சப்தம் என்ற குணமுள்ள ஆகாசமும், சப்ததந்மாத்திரையுடன் கூடினஸ்பர்சதந்மாத்திரை யினின்றும் சப்தம் ஸ்பர்சம் இவ்விரண்டு குணமுள்ள வாயுவும், சப்ததந்மாத்திரை ஸ்பர்ச தந்மாத்திரை இவ்விரண்டுடன் கூடின ரூப தந்மாத்திரை யினின்றும் சப்தம், ஸ்பர்சம், ரூபம் என்ற குணமுள்ள தேஜஸ்ஸும், சப்த தந்மாத்திரை, ஸ்பர்ச தந்மாத்திரை, ரூப தந்மாத்திரை இவைகளுடன் கூடின ரஸ தந்மாத்திரை யினின்றும் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் இன்னான்கு குணங்களுள்ள ஜலமும், சப்த தந்மாத்திரை, ஸ்பர்சதந்மாத்திரை, ரூப தந்மாத்திரை, ரஸ தந்மாத்திரை, இவைகளுடன் கூடின கந்த தந்மாத்திரை யினின்றும் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவ்வைந்து குணங்களுள்ள பிருதிவியும் உண்டாகின்றது. ஆனது பற்றியே பிருதிவீ முதலியவற்றில் மேற்கூறியப் பிரகாரம் குணங்களனுபவிக்கப்படுகின்றன.

---

## இருபத்து மூன்றுவது சுலோகம்.

(அ - கை) **तद्विपरीतमव्यक्तम्** என்ற 10வது காரிகையால் அவ்யக்தம் பொதுவினும் **सत्वंलघुप्रकाशकम्** என்ற 13வது

मू०। अध्यवसायो बुद्धिर्धर्मो ज्ञानं विराग ऐश्वर्यम्।
सात्त्विकमेतद्रूपं तामसमस्माद्विपर्यस्तम्॥ २३॥

" अध्यवसाय " इति। ' अध्यवसायो बुद्धिः ' क्रियाक्रियावतो-रभेदविवक्षया। सर्वो व्यवहर्ताऽऽलोच्य मत्वा ऽहमत्राधिकृत इत्यभिमत्य कर्तव्यमेतन्मयेत्यध्यवस्यति, ततश्च प्रवर्तत इति लोकसिद्धम्। तत्र यो यं कर्तव्यमिति विनिश्चयःचितिसन्निधानादापन्नचैतन्याया बुद्धेः सोध्यव-

---

சுலோகத்தால் விசேஷமாகவும் லக்ஷணங்கள் வாயிலாக நிரூபிக்கப்பட்டன. வியக்தமும் **हेतुमदनित्यम्** என்ற 10வது சுலோகத்தால் பொதுவில் நிரூபிக்கப்பட்டது. இப்பொழுது விவேகக் ஞானம் ஏற்படுவதற்காக வியக்த விசேஷமான புத்தியை நிரூபணஞ் செய்கிறார்.

(ப - ரை) **बुद्धिः**=புத்தி **अध्यवसायः**=நாம் இதைச் செய்ய வேண்டும் என்ற நிச்சயரூபமான விருத்தியை அஸாதாரண தர்மமாக உடையது. **धर्मः**=தர்மமும், **ज्ञानम्**=அறிவும் **विरागः**=வைராக்யமும், **ऐश्वर्यम्**=அணிமா முதலிய சித்திகளுக்குக் காரணமான ஓர்வித தர்மமும் **एतत्**=இவையாவும் **सात्त्विकंरूपम्**=சத்வகுணத்தினால் புத்தியில் ஏற்படக்கூடிய குணங்கள். **अस्मात्**=மேற்சொல்லிய தர்மஞானாதிகளைக் காட்டிலும் **विपर्यस्तम्**=மாறுபட்ட- அதர்மம், அக்ஞானம், அவைராக்யம், அனைச்வர்யம் இவைகள் **तामसंरूपम्**=புத்திக்கு தமோகுணத்தினால் ஏற்படக் கூடிய தர்மங்கள்.

(தா - ம்) கிரியை (கார்யம்) கிரியாவத் (காரணம்) இவ்விரண்டும் ஒன்றெனக்கருதி **अध्यवसायो बुद्धिः** என்று சொல்லப்பட்டது. அதாவது— அந்தந்தக் கார்யங்களை யனுஷ்டிக்கின்ற ஒவ்வொரு மனிதனும் இந்திரியங்களால் முதலில் வஸ்துக்களை யறிந்து பிறகு அந்த வஸ்துக்கள் இஷ்டசாதனமா, அல்லது அனிஷ்ட சாதனமா, வெளியிடலாமா, வெளியிடக் கூடாதா என்று பகுத்தறிந்து பிறகு நமக்கு இதைச் செய்வதற்குச் சக்தி

सायः, बुद्धेरसाधारणो व्यापारः, तदभेदा बुद्धिः । स च बुद्धेर्लक्षणं समानासमानजातीयव्यवच्छेदकत्वात् ॥

तदेवं बुद्धिं लक्षयित्वा विवेकज्ञानोपयोगिनस्तस्या धर्मान्सात्त्विकतामसानाह—" धर्मो ज्ञानं विराग ऐश्वर्यम् । सात्त्विकमेतद्रूपम्, तामसमस्माद्विपर्यस्तम्" इति । धर्मो ऽभ्युदयनिश्रेयसहेतुः, तत्र यागदानाद्यनुष्ठानजनितो धर्मो ऽभ्युदयहेतुः अष्टाङ्गयोगानुष्ठानजनितश्च निश्रेयसहेतुः । गुणपुरुषान्यताख्यातिर्ज्ञानम् । विरागो वैराग्यम् रागाभावः ॥

तस्य—यतमानसंज्ञा व्यतिरेकसंज्ञा एकेन्द्रियसंज्ञा वशीकारसंज्ञा —इति चतस्रः संज्ञाः । रागादयः कषायाश्चित्तवर्तिनः, तैरिन्द्रियाणि यथास्वं विषयेषु प्रवर्त्यन्ते । तन्मा ऽत्र प्रवर्तिषत विषयेष्विन्द्रियाणीति

---

இருக்கின்றது, நாம் இதில் அதிகாரியே என்று தெரிந்து கொண்டு பிறகு "இது நம்மால் செய்யத்தகுந்தது, அனுஷ்டிக்க வேண்டும்" என்று நிச்சயித்துக் கொள்ளுகிறுன். பிறகே செய்வதற்கு ஆரம்பிக்கிறுன் என்பது லோகானுபவத்தால் சித்திக்கின்றது. புருஷனின் சான்னித்ய வசத்தால் சைதன்யத்தையடைந்த புத்தியினிடம் உண்டாகின்ற "இதைச் செய்யவேண்டும்" என்ற நிச்சய ரூபமான யாதொரு விருத்தியுண்டோ, அதுவே அத்யவசாய மெனப்படும். அவ்வத்யவசாயம் புத்தியின் அஸாதாரணமான வியாபாரம். அந்த வியாபாரத்தினின்றும் அதிக பேதமற்ற தாய்ப்புத்தி இருக்கின்றது. புத்திக்குச் ஸமான ஜாதியங்களான மஹத்முதலிய வற்றினின்றும், அஸமான ஜாதியமான புருஷனிடமிருந்தும் பேதத்தை அறிந்து கொள்வதற்குச்சாதன மாயிருப்பதுபற்றி அத்யவஸாயம் என்பது புத்தியின் லக்ஷணமாக ஆகின்றது.

இவ்விதம் புத்திக்கு லக்ஷணங்கூறி விவேகக்ஞான முண்டாவதற்குச் ஸாதனமான புத்தியின் ஸாத்விக, தாமஸ தர்மங்களையுபதேசிக்கிறுர்—அப்யுதயத்திற்கும் (சுவர்க்கம், பசு, புத்தி

तत्परिपाचनायारम्भः प्रयत्नो यतमानसंज्ञा । परिपाचने चानुष्ठीयमाने केचित्कषायाः पक्काः, पक्ष्यन्ते च केचित्, तत्रैवं पूर्वापरीभावे सति पक्ष्यमाणेभ्यः कषायेभ्यः पक्कानां व्यतिरेकेणावधारणं व्यतिरेकसंज्ञा । इन्द्रियप्र-

---

ரன் முதலிய பலன்களுக்கும்) மோக்ஷத்திற்கும் காரணமாக இருப்பது "தர்மம்" எனப்படும். அவற்றுள் யாகம், தானம் முதலியவற்றை அனுஷ்டிப்பதால் எற்படுகின்ற *அந்தக் காரண ஸம்ஸ்காரரூபமான தர்மம் அப்யுதயத்திற்குக்காரணமாகின்றது. அஷ்டாங்கயோகானுஷ்டானத்தாலுண்டாகின்ற தர்மம் மோக்ஷத்திற்குக் காரணமாக ஆகின்றது. பிரகிருதி புருஷன் இவற்றை வேறுபட்டதாயறிதல் "ஞானம்" எனப்படும். வைராக்கியம் ஆசையில்லாமை. இவையாவும் புத்தியின் தர்மங்களாக ஆகின்றன.

அந்த வைராக்யம்யதமான ஸம்க்ஞை, வியதிரேக ஸம்க்ஞை, எகேந்திரியஸம்க்ஞை, வசீகாரஸம்க்ஞை என்று நான்கு வகைப்படும். காமம், குரோதம் முதலிய தோஷங்கள் சித்தத்திலிருக்கின்றன. அவற்றால் இந்திரியங்கள் தூண்டப்பட்டு அவ்வவற்றின் விஷயங்களில் பிரவிருத்திக்கின்றன. ஆகவே "இந்திரியங்கள் பாஹ்யமான விஷயங்களில் பிரவிருத்திக்கவேண்டாம்" என்று

---

* வைதிக கர்மங்களுள் சிலவற்றிற்கு உபதேசிக்கப்பட்ட பலன்கள் அனுஷ்டிக்கப்படும் கர்மம் முடிவுபெற்ற அடுத்தக்ஷணத்தில் உண்டாகக்கூடாத நிலையிலிருக்கின்றன. சுவர்க்கம், புத்திரன் முதலிய பலன்களை எடுத்துக்கொள்வோம். இவை ஒருக்காலும் யாகம் முதலியவற்றை அனுஷ்டித்து முடித்த அடுத்தக்ஷணத்தில் உண்டாகக்கூடியவையல்ல. ஷை பலன்களைக்குறித்தோ யாகாதிகர்மங்கள் சாதனமாயாகின்றன வென்று வேதங்கள்கூறுகின்றன. இது பொருந்துவதற்காக யாகாதி கர்மங்கள் அனுஷ்டித்து முடிந்தவுடன் அதனால் புருஷனுடைய அந்தக்கரணத்தில் காலாந்தரத்திலுண்டாகக்கூடிய பலத்திற்குச் சாதனமாய் ஓர் வித அதிசயமுண்டாகின்றது. அதுவே "தர்மம்" என்று சொல்லப்படும் என்று அறியவேண்டும்.

वृत्यसमर्थतया पक्वानामौत्सुक्यमात्रेण मनसि व्यवस्थापनमेकेन्द्रियसंज्ञा । औत्सुक्यमात्रस्यापि निवृत्तिरुपस्थितेष्वपि दृष्टानुश्रविकविषयेषु, या संज्ञात्रयात् पराचीना सा वशीकारसंज्ञा । यामत्रभगवान् पतंजलिर्निर्णयांचकार —"दृष्टानुश्रविकविषयवितृष्णस्य वशीकारसंज्ञा वैराग्यम्" इति (योगसूत्र--१।१५) सोऽयं बुद्धिधर्मो विराग इति ॥

---

*விஷயங்களில் தோஷ தர்சனத்தால் காமம் முதலிய தோஷங்களை இந்திரியங்களைத் தூண்டுவதற்குச் சக்தியற்றனவாகச் செய்து கொள்வதற்காக முயற்சிப்பது "யதமான சம்க்ஞை" எனப்படும் சித்ததோஷங்களின் சக்தியைக்குறைத்துக் கொள்வதற்காக முயற்சி செய்துகொண்டு வருங்காலையில் சில தோஷங்களின் சக்தி விலகிவிடும், சில தோஷங்களின் சக்தி விலகவேண்டிய நிலையிலிருக்கும். இவ்விதம் தோஷங்களின் முன்பின் நிலை இருக்கும்பொழுது இன்னதோஷம் இந்திரியங்களைத்தூண்டுவதற்குரிய சக்தியுள்ளதாயிருக்கின்றதென்று பகுத்தறிவது "வியதிரேக ஸம்க்ஞை" எனப்படும். இந்திரியங்களைத் தூண்டுவதற்குச் சக்தியற்றனவாகச்செய்யப்பட்ட காமனையை மனத்திற்குள் மட்டும் நெருத்துவது "ஏகேந்திரியசம்க்ஞை" எனப்படும். ஐஹிகாமுஷ்மிக விஷயங்கள் தனது சமீபத்திலிருந்தபோதிலும், அவற்றைப்பற்றி மனத்தில் இந்திரியங்களைத்தூண்டுவதற்குச் சக்தியற்ற காமனைகூட உண்டாகாமலிருத்தல் "வசீகார ஸம்க்ஞை" எனப்படும். இந்நான்காவதான வைராக்கியத்தையே பதஞ்சலிமஹருஷி* **दृष्टानुश्रविकविषयवितृष्णस्य वशीकारसंज्ञा वैराग्यम्** *என்றதால் நிரூபணஞ் செய்திருக்கிறார். இதன் பொருள்—ஸ்திரீகள், அன்னம், பானம் முதலியன திருஷ்டம் எனப்படும். சுவர்க்கம், தேஹமற்றிருத்தல் முதலியன வேதம் வாயிலாக அறியப்படுவதுபற்றி ஆனுச்ரவிகம் எனப்படும். இவ்விரண்டு விஷயங்களையும்பற்றி இந்திரியங்களைத்தூண்டுவதற்குச் சக்தியற்ற காமனைகூட உண்டாகாமலிருப்பது "வசீகாரஸம்ஞா வைராக்கியம்" எனப்படும் என்பது. மேற் சொல்லிய நான்குவிதமான வைராக்யமும் புத்திதர்மமென்று ஏற்பட்டது.*

ऐश्वर्यमपि बुद्धिधर्मो, यतो ऽणिमादिप्रादुर्भावः । (१) अत्राणिमा अणुभावः, यतः शिलामपि प्रविशति । (२) लघिमा लघुभावः, यतः सूर्यमरीचीनालंब्य सूर्यलोकं याति । (३) गरिमा गुरुभावः, यतो गुरुर्भवति । (४) महिमा महतो भावः, यतो महान् भवति । (५) प्राप्तिः, यतोऽङ्गुल्यग्रेण स्पृशति चन्द्रमसम् । (६) प्राकाम्यम्, इच्छानभिघातः यतो भूमावुन्मज्जति निमज्जति च, यथोदके । (७) वशित्वम्, यतो भूतभौतिकं वशीभवत्यवश्यम् । ईशितृत्वम्, यतो भूतभौतिकानां प्रभवस्थितिलयानामीष्टे । (८) यच्च कामावसायित्वम् सा सत्यसङ्कल्पता, येन यथाऽस्य

---

அணிமா முதலிய சித்திகள் உண்டாவதற்குச் சாதனமாக இருக்கின்ற ஐச்வர்யமும் புத்தியினுடைய தர்மமே. १ अणिमा=மிகவும் சிறியவஸ்துவாக இருத்தல். இதனால் கற்பாறையிலும் பிரவேசிப்பதற்குச் சக்தியுண்டாகின்றது. २ लघिमा=மிகவும் இலேசாக இருத்தல் இதனால். சூரியனின் கிரணங்களைப் பிடித்துக் கொண்டு சூரியலோகஞ் செல்லுவதற்குச் சக்தி ஏற்படுகின்றது. ३ गरिमा=மிகவும் கனமாக இருத்தல். அதனால் மலையைப்போல் மிகவும் பளுப்பெற்றிருப்பான். ४ महिमा=மிகவும் பெரிதாக இருத்தல். இதனால் மலையைப்போல் பெரிதாகக் காணப்படுவான். ५ प्राप्तिः=இருந்தவிடமிருந்துகொண்டே எல்லா வஸ்துவையுமடைதல். இதனால் சந்திரமண்டலத்தையும் கையினால் தொடக்கூடிய சக்தியுண்டாகின்றது. ६ प्रकाम्यम्=சங்கல்பத்திற்குத் தடை ஏற்படாமை. இதனால் ஜலத்தில் மூழ்கிக் கிளம்புவதுபோல் பூமியிலும் மூழ்கிக்கிளம்ப வல்லமை ஏற்படுகின்றது. ७ वशित्वम्=எல்லாவற்றையும் தனக்கு அதீனமாக்கிக்கொள்ளுதல். இதனால் பிருதிவீ, ஜலம் முதலிய பஞ்சபூதங்களும், அதன் கார்யமான மரம் மட்டை முதலியவைகளும் வசமாகி விடுகின்றன. ईशितृत्वम्=பிருதிவீ முதலிய ஐந்து பூதங்கள் அதன் கார்யங்கள் இவற்றின் உத்பத்தி, ஸ்திதி, நாசம் இவற்றிற்குச் சமர்த்தனாக இருத்தல். ८ कामावसायित्वम्=சங்கல்பப்படி ஏற்படுதல். இதனால் பூதங்கள் எங்கெந்தவிதமாக ஆகவேண்டுமென்று சங்கல்பிக்கிறானோ அவ்

सङ्कल्पो भवति भूतेषु, तथैव भूतानि भवन्ति। अन्येषां मनुष्याणां निश्चयाः निश्चेतव्यमनुविधीयन्ते, योगिनस्तु निश्चेतव्याःपदार्थाः निश्चयम्। इति चत्वारः सात्त्विका बुद्धिधर्माः॥ तामसास्तु तद्विपरीता बुद्धिधर्माः। अधर्माज्ञानावैराग्यानैश्वर्याभिधानाश्चत्वार इत्यर्थः ॥ २३ ॥

अहङ्कारस्य लक्षणमाह—

मू०। अभिमानो ऽहङ्कारः, तस्माद्द्विविधः प्रवर्तते सर्गः।
एकादशकश्च गणस्तन्मात्रापञ्चकश्चैव ॥ २४ ॥

---

விதமே ஆகிவிடுகின்றன. அதாவது விஷமும் அமுதமாக வேண்டும் என்று சங்கல்பித்தால் அது அவ்விதமே அமுதமாகிவிடுகின்றது. யோகியைத்தவிர்த்து மற்றவர்கள் பதார்த்தங்களின் நிலையை யனுசரித்து ஒன்றைச் சங்கல்பிக்கவேண்டியவர்களாகவோ, நிச்சயிக்க வேண்டியவர்களாகவோ இருக்கின்றனர் யோகிகளுக் கோவெனில் அவர்களின் சங்கல்பத்தையும், நிச்சயத்தையும் வஸ்துக்கள் அனுஸரிக்கின்றன. மேற்சொல்லிய நான்கு தர்மங்களும் ஸாத்விகமான புத்திதர்மங்கள். தாமஸமான புத்திதர்மங்களோ வெனில் மேற்சொல்லியதற்கு மாறானவைகள் அவையாவன— அதர்மம், அக்ஞானம், அவைராக்யம், அனைச்வர்யம் என்பனவாம்.

---

## இருபத்துநான்காவது சுலோகம்

(அ - கை) அஹங்காரத்தின் லக்ஷணத்தை உபதேசிக்கிறார்—

(ப- ரை) **अहङ्कारः**=அஹங்காரம் என்றதத்துவம் **अभिमानः**= 'நான்' என்ற சித்தவிருத்தியை அஸாதாரண வியாபாரமாயுடையது. **तस्मात्**=அதனிடமிருந்து **एकादशकः**=11 எண்ணுள்ள வஸ்துக்களடங்கிய **गणः**=கூட்டம் **पञ्चकः**=ஐந்து எண்ணுள்ள **तन्मात्रश्च**=தந்மாத்திரை (**इति** = என்ற) **द्विविधः**=இரண்டு விதமான **सर्गः**=சிருஷ்டி **प्रवर्तते**=உண்டாகின்றது.

"अभिमान" इति । 'अभिमानो ऽहङ्कारः' । यत् खल्वालोचितं- मतं च तत्र 'अहमधिकृतः,' 'शक्तः खल्वहमत्र,' 'मदर्था एवामी विषयाः', 'मत्तो नान्यो ऽत्राधिकृतः कश्चिदस्ति,' 'अतो ऽहमस्मि' इति यो ऽभिमानः सो ऽसाधारणव्यापारत्वादहङ्कारः । तमुपजीव्य हि बुद्धिरध्य- वस्यति—'कर्तव्यमेतन्मया' इति निश्चयं करोति ॥

तस्य कार्यभेदमाह—"तस्माद्द्विविधः प्रवर्तते सर्गः" इति। प्रकारद्वय- माह—"एकादशकश्च गणः" इन्द्रियाह्वः, तन्मात्रपञ्चकश्चैव । द्विविध एव सर्गो ऽहङ्कारात् न त्वन्य इति 'एव' कारेणावधारयति ॥ २४ ॥

स्यादेतत्—अहङ्कारादेकरूपात्कथं जडप्रकाशकौ गणौ विलक्षणौ भवत इत्यत आह—

---

(தா - ம்) எந்தவஸ்துவானது இந்திரியங்கள் வாயிலாக அறியப்பட்டு 'இவ்விதந் தானிருக்கின்றது' என்று நிர்ணயிக் கப்பட்டு விட்டதோ அந்த வஸ்துவில் "நான் இதில் அதிகாரம் பெற்றவன், நான் இதைச் செய்வதற்குச் சக்திவாய்ந்தவனல்ல வா? எனக்காகவே இவ்விஷயங்கள் ஏற்பட்டிருக்கின்றன, என் னைத்தவிர்த்து மற்றவர்க்கிதைச் செய்யவதிகாரங்கிடையா, நான் தான் இதைச் செய்வதற்குச் சக்தியுள்ளவன்" என்பது முதலிய யாதொரு 'அபிமானம்' எனப்படும் சித்தவிருத்தியுண்டோ அதை அஸாதாரண வியாபாரமாயுடையதாக அஹங்காரமிருக் கின்றது. அந்த அஹங்காரத்தினலேயே "நாம் இதைச்செய்ய வேண்டும்" என்று உறுதி செய்து கொள்ளுகிறுன். "இந்திரி யங்களும், ஐந்துதந்மாத்திரைகளும் அஹங்காரத்தினிடமி ருந்து உண்டாகின்றன. மேற்சொல்லிய இரண்டினின்றும் வேறுபட்டதாய் மூன்ருவதுபிரிவுள்ள சிருஷ்டி அஹங்காரத்தி னின்றும் உண்டாவதில்லை என்பது एव காரத்தால் தெரிவிக்கப் படுகிறது. (எ - று)

मू०। सात्त्विक एकादशकः प्रवर्तते वैकृतादहङ्कारात्।
भूतादेस्तन्मात्रः स तामसः, तैजसादुभयम् ॥ २५ ॥

"सात्त्विक" इति। प्रकाशलाघवाभ्यामेकादशक इन्द्रियगणः सात्त्विको वैकृतादहङ्कारात्प्रवर्तते। भूतादेस्त्वहङ्कारात्तामसात्तन्मात्रो गणः प्रवर्तते। कस्मात्? यतः 'स तामसः' एतदुक्तम्भवति 'यद्यप्येको ऽहङ्कारस्तथा ऽपि गुणभेदोद्भवाभिभवाभ्यां भिन्नं कार्यं करोति' इति ॥

---

இருபத்தைந்தாவது சுலோகம்

(அ - கை) இஃதெல்லாமிருக்கட்டும். ஒரேவிதமாயுள்ள அஹங்காரத்தினின்றும் ஜடமாயுள்ளதும், பிரகாசகுணமுள்ளதுமான, முற்றிலும் வேறுபட்ட இந்திரியம், தந்மாத்திரை என்ற வஸ்துக்கள் எவ்விதமுண்டாகக் கூடும் எனச் சந்தேஹித்துப் பதிலளிக்கிறார்—

(ப - ரை) **वैकृतात्**=ஸாத்விகமான **अहङ्कारात्**=அஹங்காரத்தினின்றும் **सात्त्विकः**=சத்வகுணத்திக்யம் வாய்ந்த **एकादशकः** = 11 இந்திரியம் **प्रवर्तते**=உண்டாகின்றது **भूतादेः**=பஞ்சபூதங்களுக்குக் காரணமான தாமஸாஹங்காரத்தினின்றும் **तन्मात्रः**=ஐந்து பூதங்களின் காரணமான தந்மாத்திரை என்றதத்துவம் **प्रवर्तते**=உண்டாகின்றது. **सः**=அந்தத் தந்மாத்திரைகளின் கூட்டம் **तामसः**=தமோகுணத்திக்யம் வாய்ந்ததாக இருக்கின்றது. **तैजसात्**=ராஜஸாஹங்காரத்தினின்றும் **उभयम्**=11 இந்திரியம் 5 தந்மாத்திரை இவ்விரண்டும் (**भवति**=உண்டாகிறது.)

(தா - ம்) **सत्त्वं लघु प्रकाशकम्** என்ற சுலோகத்தில் "பிரகாசமும், லாகவமும் சத்வகுணத்தின் கார்யம்" என்று நிரூபித்திருக்கிறோம். தன்னைவிடவேறான வஸ்துவையும் புலப்படும்படிச் செய்தலே பிரகாசம் எனப்படும். மேற்சொல்லிய இரண்டு குணங்களும் இந்திரியங்களிட மிருப்பதால் அவைகள் ரஜஸ்தமோகுணங்கள் குறைவுபட்டு ஸத்வகுணத்திக்யம் வாய்ந்த

ननु यदि सत्त्वतमोभ्यामेव सर्वं कार्यं जन्यते तदा कृतमकिञ्चित्करेण रजसेत्यत आह–"तैजसादुभयम्" इति । तैजसात् राजसादुभयं गणद्वयं भवति । यद्यपि रजसो न कार्यान्तरमस्ति, तथा ऽपि सत्त्वतमसी स्वयमक्रिये समर्थे अपि न स्वस्वकार्यं कुरुतः; रजस्तु चलतया ते यदा चालयति तदा स्वकार्यं कुरुत इति । तदुभयस्मिन्नपि कार्ये सत्त्वतमसोः क्रियोत्पादनद्वारेणास्ति रजसः कारणत्वमिति न व्यर्थं रज इति ॥ २५ ॥

---

அஹங்காரத்தினிட மிருந்து உண்டாகின்றன. அதாவது பிராகிருதமானசகல கார்யங்களும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குண முள்ளனவாக இருக்கின்றன வென்றும், ஒவ்வொரு குணங்களும் தனித்தனியே தலைக்கிளப்பும் பொழுது மற்றவை அடங்கிவிடுகின்றன வென்றும் முன்னர் சொல்லி யிருக்கிறோம். ஆகவே ரஜஸ், தமோகுணங்கள் குறைவுபெற்று ஸத்வகுணம் மேலிட்டிருக்கும் அஹங்காரத்தினின்றும் இந்திரியங்களுண்டாகின்றன. ரஜஸ் ஸத்வகுணங்கள் குறைவு பெற்று தமோகுணம் மேலிட்டிருக்கும் அஹங்காரத்தினின்றும் ஐந்து தந்மாத்திரைகள் உண்டாகின்றன. ஆகவே அஹங்காரம் என்பது ஒன்றாக இருந்த போதிலும் அந்தந்த குணங்கள் தலைக்கிளப்புவதாலும், அடங்கிவிடுவதாலும் வெவ்வேறான கார்யத்தைச் செய்கின்றதென்று சொன்னதாக ஏற்பட்டது. ரஜோகுணமானது இந்திரியசிருஷ்டியிலும், தந்மாத்திரைகளின் சிருஷ்டியிலும் எவ்விதம் கலக்கின்றது என்றால்—ஸத்வம் தமஸ் இவ்விரண்டும் சுவபாவத்தில் கிரியையற்றதாகையால் ரஜோகுணத்தின் ஸம்பந்தம் ஏற்படாவிடில் தத்தமது கார்யத்தைச் செய்வதற்குச் சக்தியற்றதாயாகின்றது. சலிப்பதையே சுவபாவமாயுடைய ரஜோகுணத்தின் ஸம்பந்தம் ஏற்பட்டால் ஸத்வம், தமஸ் இவ்விரண்டு குணங்களும் தத்தமது கார்யத்தையுண்டு பண்ணுகின்றன. ஆகவே ரஜோகுணமானது ஸத்வம், தமஸ் இவ்விரண்டு குணங்களுக்கும் கிரியையையுண்டு பண்ணி இந்திரியங்களையும், தந்மாத்திரைகளையும் உண்டுபண்ணுவதால் இரண்டும் ரஜோகுணத்தாலுண்டாவதாய்ச் சொல்லப்பட்டது. (எ - று)

सात्त्विकमेकादशकमाख्यातुं बाह्येन्द्रियदशकं तावदाह—

मू०। बुद्धीन्द्रियाणि चक्षुःश्रोत्रघ्राणरसनत्वगाख्यानि।
वाक्पाणिपादपायूपस्थाः कर्मेन्द्रियाण्याहुः ॥ २६ ॥

"बुद्धीन्द्रियाणि" इति। सात्त्विकाहङ्कारोपादानत्वमिन्द्रियत्वम्। तच्च द्विविधम्, बुद्धीन्द्रियं कर्मेन्द्रियं च। उभयमप्येतदिन्द्रस्यात्मनश्चिन्हत्वादिन्द्रियमुच्यते। तानि च स्वसंज्ञाभिश्चक्षुरादिभिरुक्तानि। तत्र रूपग्रहणलिङ्गं चक्षुः, शब्दग्रहणलिङ्गं श्रोत्रम्, गन्धग्रहणलिङ्गं घ्राणम्, रसग्रहण-

---

## இருபத்தாறுவது சுலோகம்

(அ - கை) ஸாத்விகமான வஸ்துக்களடங்கிய கூட்டம் இன்னது என்பதை உபதேசிப்பதற்காக வெளியிலிருக்கின்ற 10 இந்திரியங்களை முதலில் உபதேசிக்கிறார்—

(ப-ரை) **चक्षुःश्रोत्रघ्राणरसनत्वगाख्यानि**—கண், காது, மூக்கு, நாக்கு, த்வக் எனப் பெயருள்ள இவ்விந்திரியங்களை **बुद्धीद्रियाणि**= புத்தீந்திரியங்களாகவும், **वाक्पाणिपादपायूपस्थाः**=வாய், கை, கால், மலத்வாரம், ஆண் பெண் குறிகள் இவைகளை **कर्मेन्द्रियाणि**=கர்மேந்திரியங்களாகவும் **आहुः**=சொல்லுகின்றனர்

(தா - ம்) ஸாத்விகமான அஹங்காரத்தை உபாதானகாரணமாயுடைத்தாயிருப்பது "இந்திரியம்" எனப்படும். அவ்விந்திரியம்" புத்தீந்திரியம், "என்றும் கர்மேந்திரியம்" என்றும் இருவகைப்படும். இவ்விரண்டும் இந்திரன் எனப்படும் ஆத்மவஸ்துவை அனுமிப்பதற்குச் சாதனமாயிருப்பது பற்றி "இந்திரியம்" என்ற பதத்தால் வியவஹரிக்கப்படுகின்றது. அவ்விந்திரியங்கள் அவ்வவற்றின் பெயர்களால் சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. கண்ணானது வெளுப்பு, கருப்புமுதலிய நிறங்களின் அறிவை லிங்கமாயுடையதாயிருக்கின்றது. அதாவது வெளுப் புகருப்பு முதலியவற்றைப் பற்றிய அறிவைக்கொண்டு அதை யுண்டுபண்ணக்கூடிய அஸாதாரணமான (இன்றியமை

लिङ्गं रसनम्, स्पर्शग्रहणलिङ्गं त्वक्, इति ज्ञानेन्द्रियाणां संज्ञा । एवं वागादीनां कार्यं वक्ष्यति (कारिका २८) ॥ २६ ॥

एकादशमिन्द्रियमाह–

---

யாத) கருவி ஒன்றிருக்கவேண்டும் என்று ஊஹிக்கிறோம். அது கருவிழியின் நுனியில் இருக்கின்றது அதையே "சக்ஷுரிந்திரியம்" என்றழைக்கிறோம். சப்தவிஷயமான அறிவைக்கொண்டு அதையுண்டுபண்ணக்கூடிய அஸாதாரணமான கருவியொன்றிருக்க வேண்டும் என்று ஊஹிக்கிறோம். அதற்குச் "சுரோத்திரம்" என்று பெயர். நல்லவாஸனை, கெட்டவாஸனை முதலியவற்றைப் பற்றிய அறிவைக்கொண்டு அதையுண்டு பண்ணக்கூடிய அஸாதாரணமான கருவியொன்றிருக்கவேண்டும் என்று ஊஹிக்கிறோம். அது மூக்கின் நுணியிலிருக்கின்றது. அதுவே **घ्राणेन्द्रियम्** எனப்படும். திதிப்பு, புளிப்பு முதலியருசியைப்பற்றிய அறிவைக்கொண்டு அதை யுண்டுபண்ணக்கூடிய அஸாதாரணமானகருவி யொன்றிருக்க வேண்டும் என்று ஊஹிக்கிறோம். அது நாக்கின் நுணியிலிருக்கின்றது. அதுவே ரஸனேந்திரியம் எனப்படும். சுடுகை, குளுமை முதலிய வற்றைப்பற்றிய அறிவைக்கொண்டு அவ்வறிவை யுண்டுபண்ணக் கூடிய அஸாதாரணமான கருவி ஒன்றிருக்கவேண்டும் என்று ஊஹிக்கிறோம். அது சரீரத்தின் எல்லாப்பாகங்களிலும் தோலின் மேலிருக்கின்றது. அதுவே "த்வகிந்திரியம்" எனப்படும். **वाक्, पाणि, पाद, पायु, उपस्थम्** என்ற கர்மேந்திரியங்களின் அஸாதாரணமான கார்யங்களை 28 வது சுலோகத்திற் சொல்லப்போகிறார். ஆகவே இது வரைஞானேந்திரியம் ஐந்தும் நிரூபிக்கப்பட்டன. (எ - று)



### இருபத்தேழாவது சுலோகம்

(அ - கை) பதினொன்றாவது இந்திரியம் இன்னது என்று சொல்லுகிறார்—

मू० । उभयात्मकमत्र मनः, सङ्कल्पकमिन्द्रियं च साधर्म्यात् ।
गुणपरिणामविशेषान्नानात्वं बाह्यभेदाश्च ॥ २७ ॥

"उभयात्मकम्" इति । एकादशस्विन्द्रियेषु मध्ये मन उभयात्मकम्, बुद्धीन्द्रियं कर्मेन्द्रियं च, चक्षुरादीनां वागादीनां च मनोऽधिष्ठितानामेव स्वस्वविषयेषु प्रवृत्तेः ॥

तदसाधारणेन रूपेण लक्षयति "सङ्कल्पकमत्र मनः" इति । सङ्कल्पेन रूपेण मनो लक्ष्यते । आलोचितमिन्द्रियेण 'वस्त्विदम्' इति

---

(ப - ரை) **अत्र**=இந்திரியங்களுள் **एकादशम्**=பதினொன்றுவதான **मनः**=மனஸ் என்ற இந்திரியம் **उभयात्मकम्**=ஞானேந்திரியமாகவும், கர்மேந்திரியமாகவும், ஆகின்றது **संकल्पकम्**=இந்திரியங்கள் வாயிலாக அறியப்படும் வஸ்துவை "இன்னதுதான் என்று" நிச்சயித்தலை அஸாதாரண வியாபாரமாயுடையது. **साधर्म्यात्**=மற்ற இந்திரியங்களிடத்துள்ள ஸாத்விகமான அஹங்காரத்தை உபாதான காரணமாயுடைதல் என்ற பொதுதர்மமுள்ளதாயிருப்பதால் **इन्द्रियंच**=இந்திரியம் என்ற வகுப்பைச் சேர்ந்ததாகவும் ஆகின்றது. **बाह्यभेदाश्च**=வெளியிலுள்ள வஸ்துக்களின் பேதம் போல் **गुणपरिणामविशेषात्**=சப்தம் ரூபம், கந்தம் முதலியவற்றைப் பற்றிய அனுபவத்தைக் கொடுக்கின்ற பிராணிகளின் அதிருஷ்டங்களாகிற ஸஹகாரிகாரணங்களின் பேதத்தால் **नानात्वम्**=இந்திரியங்களிடத்தில் அனேகமாயிருக்கும் தன்மை (**भवति**=ஏற்படுகின்றது.)

(தா - ம்) கண், காது முதலிய ஞானேந்திரியங்களோ, கை, கால் முதலிய கர்மேந்திரியங்களோ, மனஸ் என்ற இந்திரியம் எவ்விதம் தூண்டுகிறதோ அவ்விதமே அவ்வவற்றின் விஷயங்களில் பிரவிருத்தியையடைவதால் அந்தமனஸ் என்ற இந்திரியம் கர்மேந்திரியமாகவும், ஞானேந்திரியமாகவும் ஆகின்றது. அவ்விந்திரியத்திற்கு மற்றவை கட்கில்லாத தர்மத்தையுபதேசம் செய்யும் வாயிலாக லக்ஷணங்கூறுகிறார்—**संकल्पकमिति** । சங்கல்

संमुग्धम् 'इदमेवम्, नैवम्' इति सम्यक्कल्पयतिविशेषणविशेष्यभावेन विवेचयतीति यावत् । यदाहुः—

'संमुग्धं वस्तुमात्रं तु प्राग्गृह्णन्त्यविकल्पितम् ।
तत् सामान्यविशेषाभ्यां कल्पयन्ति मनीषिणः' ॥ इति ॥ तथा हि,

अस्ति ह्यालोचितज्ञानं प्रथमन्निर्विकल्पकम् ।
बालमूकादिविज्ञानसदृशं मुग्धवस्तुजमिति ।
ततः परं पुनर्वस्तुधर्मैर्जात्यादिभिर्यया ।
बुद्ध्या ऽवसीयते सा ऽपि प्रत्यक्षत्वेन संमता ।

---

பம் என்ற தர்மத்தால் மனத்தை மற்றவையினின்றும் பிரித்தறிகிறோம். இந்திரியங்களால் ஒருவஸ்து வானது "ஏதோ இல்லோருவஸ்து" என்று பொதுவிலேயே, இன்னதென்று நிர்ணயிக்கப்படாமல் அறியப்படுகின்றது. பிறகு அவ்வஸ்துவை "இவ்விதம் தானிருக்கின்றது" என்று மனஸ் என்ற இந்திரியம் நிர்ணயிக்கின்றது. ஆனது பற்றி மனஸ்ஸினுடைய அஸாதாரண வியாபாரம் "சங்கல்பம்" என்று சொல்லப்பட்டது. ஓர் வஸ்துவானது முதலில் இன்னதென்று நிர்ணயிக்கப்படாமலேதான் அறியப்படுகின்றது; பிறகே அந்தவஸ்து இத்தகையதென நிர்ணயிக்கப்படுகின்றதென்பதை மேதாவிகளும் அங்கீகரித்திருக்கின்றனர். அதுபின்வருமாறு—பிராணிகள் எல்லா வஸ்துவையும் முதலில் இன்னதென்று நிர்ணயிக்கப்படாத நிலையிலேயே அறிகின்றனர். அதைப்பிறகே, பொதுவான தர்மம், விசேஷமான தர்மம் இவற்றைக்கண்டறிந்து இத்தகையதென நிச்சயிக்கின்றனர். பாலர், ஊமை முதலிய வர்கட்குண்டாகின்ற அறிவுபோலவே முதலில் ஓர்வஸ்துவைப்பற்றி அறிவு உண்டாகின்றது. அது "நிர்விகல்பகம்" எனப்படும்; அதற்குப் பிறகு அந்த வஸ்துவானது ஜாதிமுதலிய தர்மங்களை விஷயீகரிக்கின்ற எந்த அறிவினால் அறியப்படுகின்றதோ அதுவும் பிரத்யக்ஷமென்றே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. என்பதாம்.

सो ऽयं सङ्कल्पलक्षणो व्यापारो मनसः, समानासमानजातीयाभ्यां व्यवच्छिन्दन् मनो लक्षयति ॥

स्यादेतत्—असाधारणव्यापारयोगिनौ यथा महदहङ्कारौ नेन्द्रियम्, एवंमनो ऽप्यसाधारणव्यापारयोगि नेन्द्रियं भवितुमर्हतीत्यत आह—"इन्द्रियं च" इति। कुतः?—"साधर्म्यात्"। इन्द्रियान्तरैः सात्त्विकाहङ्कारोपादानत्वं च साधर्म्यम्, नत्विन्द्रलिङ्गत्वम्, महदहङ्कारयोरप्यात्मलिङ्गत्वेनान्द्रियत्वप्रसङ्गात्, तस्मात्व्युत्पत्तिमात्रमिन्द्रलिङ्गत्वम, न तु प्रवृत्तिनिमित्तम् ॥

---

*மேற்சொல்லிய சங்கல்பம் என்ற வியாபாரம் மனத்திற்கு ஸமான ஜாதியங்களான மற்ற கண், காது முதலிய இந்திரியங்களிடத்தினின்றும், அஸமான ஜாதியங்களான குடம், வஸ்திரம் முதலியவற்றினின்றும் பேதத்தைப் போதிப்பதால் அது மனத்திற்கு லக்ஷணமாகின்றது. சங்கை—மஹத், அஹங்காரம் இவைகள் அஸாதாரண வியாபாரமுள்ளதாயிருப்பதால் எவ்விதம் இந்திரியமாவதில்லையோ, அவ்விதமே மனஸ்ஸும் அஸாதாரண வியாபாரமுள்ளதாயிருப்பதால் இந்திரியமாக ஆகமாட்டாது எனின்பதிலளிக்கிறார்—* **इन्द्रियंच साधर्म्यात्** *ஸாத்விகமான அஹங்காரத்தை உபாதானகாரணமாயுடைதல் என்பது இந்திரியங்களின் பொதுதர்மம். இந்திரனை ஆத்மாவை அறிவதற்குச் சாதனமாயிருத்தல் என்பது இந்திரியங்களின் பொதுதர்மமல்ல. ஏனென்றால் அத்தர்மம் மஹத் அஹங்காரம் முதலியவற்றிலும் இருக்கின்றது. ஆகவே* **इन्द्रलिङ्गत्वम्=** *ஆத்மாவை அனுமிப்பதற்குச் சாதனமாயிருத்தல் என்பது* **इन्द्रियम्** *என்ற சப்தத்தின் அவயவார்தமே யல்லாது அதுவே இந்திரியங்களின் அஸாதாரண தர்மமல்ல. ஆகவே ஸாத்விகமான அஹங்காரத்தை உபாதான காரணமாயுடைதல் என்ற இந்திரியங்களின் பொதுதர்மம் மனஸ் என்ற வஸ்துவினிடமிருப்பதால் அதுவும் இந்திரியமாக ஆகின்றது. ஆகவே அஸாதாரண வியாபாரமுள்ளதாயிருப்பது பற்றி மனஸ் இந்திரியமாக ஆகின்றது என்று ஸ்தாபிக்காததால் நீர்செய்த ஆசங்கைக்கு இடமில்லாமலாகிவிட்டது.*

अथ कथं सात्त्विकाहङ्कारादेकस्मादेकादशेन्द्रियाणीत्यत आह—"गुण-परिणामविशेषात् नानात्वं बाह्यभेदाश्च" इति । शब्दाद्युपभोगसंप्रवर्तकादृष्टसहकारिभेदात्कार्यभेदः । अदृष्टभेदो ऽपि गुणपरिणाम एव । 'बाह्यभेदाश्च' इति दृष्टान्तार्थम्—यथा बाह्यभेदास्तथैतदपीत्यर्थः ॥ २७ ॥

तदेवमेकादशेन्द्रियाणि स्वरूपत उक्त्वा दशानामप्यसाधारणीर्वृत्ती राह—

मू० ॥ शब्दादिषु पञ्चनामालोचनमात्रमिष्यते वृत्तिः ।
वचनादानविहरणोत्सर्गानन्दाश्च पञ्चानाम् ॥ २८ ॥

---

ஸாத்விகாஹங்காரம் ஒன்றினிடமிருந்து எவ்விதம் பதினொரு இந்திரியங்கள் உண்டாகின்றன என்றால் பதிலளிக்கிறார்— **गुणपरिणामविशेषान्नानात्वं बाह्यभेदाश्च** சப்தம், ஸ்பர்சம் முதலிய விஷயானுபவத்தை யுண்டுபண்ணுகின்ற அதிருஷ்டம் என்ற யாதொரு ஸஹகாரிகாரணமுண்டோ அதன் வேற்றுமையால் 11 விதமான இந்திரியங்கள் ஒரேவிதமான ஸாத்விகாஹங்காரத்தினின்று முண்டாகின்றன. அதிருஷ்டத்தின் பேதமும் சத்வம் முதலிய குணங்களின் பரிணாமமாகவே இருப்பதால் **गुणपरिणाम** என்ற பதத்தால் இங்கு குறிக்கப்படுகின்றது. **बाह्यभेदाश्च** என்று சொன்னதைத் திருஷ்டாந்தமாகக் கொண்டு மரம், மட்டை முதலிய வஸ்துக்கள் எவ்விதம் ஒரேவிதமான பிரகிருதியினிடமிருந்துப் பிராணிகளின் அதிருஷ்டத்தை நிமித்தமாகக் கொண்டு பலவாறாக உண்டாகின்றனவோ அவ்விதமே இந்திரியங்களும் பிராணிகளின் அதிருஷ்டத்தினால் 11விதமாயுண்டாகின்றனவென்று கொள்ளல்வேண்டும். (எ - று)

---

இருபத்தெட்டாவது சுலோகம்

(அ - கை) இவ்விதம் 11 இந்திரியங்களின் சுவரூபத்தை யுபதேசித்து முதல் 10 இந்திரியங்களின் அஸாதாரணமான வியாபாரங்களை (கார்யங்களை) உபதேசிக்கிறார்—

बुद्धीन्द्रियाणां सम्मुग्धवस्तुदर्शनमालोचनमुक्तम् । "वचनादानविहरणोत्सर्गानन्दाश्च" पञ्चानाम् कर्मेन्द्रियाणाम् । कण्ठताल्वादिस्थानमिन्द्रियं वाक्, तस्या वृत्तिर्वचनम्, ज्ञानेन्द्रियाणां वृत्तयः स्पष्टाः ॥ २८ ॥

---

(ப - ரை) **पञ्चानाम्**=ஞானேந்திரியம் ஐந்துகளுக்கும் **शब्दादिषु**=சப்தம், ரூபம் முதலியவிஷயங்களில் **आलोचनमात्रम्**="இந்த வஸ்து இத்தகையதுதான்" என்று நிர்ணயிக்கப்படாத நிலையி லுண்டாகின்ற ஞானம் **वृत्तिः**=அஸாதாரண வியாபாரமாக **इष्यते**= அங்கீகரிக்கப்படுகின்றது. **पञ्चानाम्**=கர்மேந்திரியம் ஐந்துகளுக்கும் **वचनादानविहरणोत्सर्गानन्दाः**=பேசுதல், எடுத்தல், நடத்தல் வெளியில் தள்ளுதல் ஆனந்தத்திற்குக் காரணமான சேர்க்கை இவை **वृत्तिः**=அஸாதாரண வியாபாரமாயாகின்றன.

(தா - ம்) வெளுப்பு, சிவப்புமுதலிய நிறங்களையறிதல்நேத்திரேந்திரியத்தின் அஸாதாரண வியாபாரமாகவும், வாசனையை யறிதல் கிராணேந்திரியத்தின் (மூக்கின்) அஸாதாரண வியாபாரமாகவும், திதிப்பு, புளிப்பு முதலியரசங்களையறிதல் ரசனை (நாக்கு) என்ற இந்திரியத்தின் அஸாதாரண வியாபாரமாகவும், சுடுகை, குளுமை முதலிய ஸ்பர்சங்களையறிதல் த்வக் (தோல்) என்ற இந்திரியத்தின் அஸாதாரண வியாபாரமாகவும், சப்தத்தைக்கேட்டல் சுரோத்திரம் (காது) என்ற இந்திரியத்தின் அஸாதாரண வியாபாரமாகவும் இருக்கின்றது. மேற்சொல்லியவையாவும் 'ஞானேந்திரியம்' எனப்படும். அவற்றால் இன்னதென்று நிர்ணயிக்கப்படாத நிலையிலேயே வஸ்துக்கள் அறியப்படுகின்றன.

சப்தத்தையுச்சரித்தல் வாக் என்ற இந்திரியத்தின் அஸாதாரண வியாபாரமாகவும், வஸ்துக்களைக்கிரஹித்தல் பாணி (கை) என்ற இந்திரியத்தின் அஸாதாரண வியாபாரமாகவும், அங்குமிங்கும் நடந்து செல்லுதல் பாதம் (கால்) என்ற இந்திரியத்தின் அஸாதாரண வியாபாரமாகவும், மலத்தை வெளியில்தள்ளுதல் பாயு (குதம்) என்ற இந்திரியத்தின் அஸாதாரண வியாபாரமாக

अन्तःकरणत्रयस्य वृत्तिमाह–

मू०। स्वालक्षण्यं वृत्तिस्त्रयस्य सैषा भवत्यसामान्या ।
सामान्यकरणवृत्तिः प्राणाद्या वायवः पञ्च ॥ २९ ॥

---

வும், ஆனந்தத்தைக்கொடுக்கின்ற ஸ்திரீபுருஷர்களின் அஸாதாரண அங்கத்தின் சேர்க்கை உபஸ்தம் (ஆண்பெண்குறி) என்ற இந்திரியத்தின் வியாபாரமாகவும் ஆகின்றது. மேற்சொல்லியவைகள் "கர்மேந்திரியம்" எனப்படும். மேற்சொல்லியபடி அதனதன் கார்யங்களைச் செய்கின்ற இந்திரியம் என்ற வஸ்து அந்தந்தச் சரீராவயவத்திலிருப்பதால் அந்தந்த அவயவங்களின் பெயர்களாலேயே அவை வியவஹரிக்கவும் படுகின்றன. இதிலிருந்து "அந்தந்த அவயவமே அந்தந்த இந்திரியம்" எனக்கருதுதல்தகா. கண், காது, கைகால் முதலியவைகள் ஸூக்ஷ்மமான இந்திரியங்களின் ஆதாரம் என்றுமட்டும் கொள்ளவேண்டும் (எ - று)

---

இருபத்தொன்பதாவது சுலோகம்.

(அ - கை) அந்தக்கரணம் எனப்படும் புத்தி, அஹங்காரம், மனஸ் இவற்றின் அஸாதாரணமான, விருத்தியையும் (கார்யத்தையும்) ஸாதாரண வியாபாரத்தையும் உபதேசிக்கிறார்—

(ப - ரை) त्रयस्य=மஹத் எனப்படும் புத்தி, அஹங்காரம் மனஸ், இம்மூன்றிற்கும் स्वालक्षण्यम्=அதனதன் லக்ஷணமாகக் கூறப்பட்ட அத்யவஸாயம், அபிமானம், ஸங்கல்பம் இவை वृत्तिः= வியாபாரமாக ஆகின்றது. सैषा=மேற்சொல்லிய அத்யவஸாயம் முதலியது. असामान्या=அஸாதாரணவியாபாரமாக ஆகின்றது. प्राणाद्याः=பிராணனை முதலாவதாகவுடைய पञ्चवायवः=ஐந்துவிதமானவாயுக்கள் सामान्यकरणवृत्तिः=அந்தக்கரணம் எனப்படும், புத்தி, அஹங்காரம், மனஸ் இவற்றின் ஸாதாரணவியாபாரமாக ஆகின்றன.

"स्वालक्षण्यम्" इति । स्वालक्षण्यं वृत्तिस्त्रयस्य । स्वमसाधारणं लक्षणं येषां तानि स्वलक्षणानि महदहङ्कारमनांसि, तेषां भावः स्वालक्षण्यम्, तच्च स्वानिस्वानि लक्षणान्येव । तद्यथा—महतो ऽध्यवसायः, अहङ्कारस्याभिमानः, सङ्कल्पो मनसो वृत्तिर्व्यापारः ॥

वृत्तिद्वैविध्यं साधारणासाधारणत्वाभ्यामाह—"सैषाभवत्यसामान्या" असाधारणी । "सामान्यकरणवृत्तिः प्राणाद्या वायवः पञ्च" । सामान्या चासौ करणवृत्तिश्चेति । त्रयाणामपि करणानां पञ्च वायवो जीवनं वृत्तिः, तद्भावे भावात् तदभावे चाभावात् । तत्र प्राणो नासाग्रहृन्नाभिपादाङ्गुष्ठवृत्तिः, अपानः कृकाटिकापृष्ठपाद पायूपस्थपार्श्व वृत्तिः, समानो हृन्नाभिसर्वसन्धिवृत्तिः, उदानो हृत्कण्ठतालुमूर्धभ्रूमध्य वृत्तिः, व्यानस्त्वग्वृत्तिरिति पञ्च वायवः ॥ २९ ॥

---

(தா - ம்) நாம் இதைச்செய்யவேண்டும் என்றக் ஞானம் "அத்யவஸாயம்" எனப்படும். அது புத்தியின் லக்ஷணமாகச் சொல்லப்பட்டது. அதுவே புத்தியின் அஸாதாரண வியாபாரம். நான் என்ற ஞானம் "அபிமானம்" எனப்படும். அது அஹங்காரத்தின் லக்ஷணமாகமுன் சொல்லப்பட்டது. அதுவே அஹங்காரத்தின் அஸாதாரணவியாபாரம். இது இத்தகையது என்ற நிச்சயம் "ஸங்கல்பம்" எனப்படும். அது மனஸ்ஸின் லக்ஷணமாகமுன் கூறப்பட்டது. அதுவே மனத்தின் அஸாதாரணவியாபாரம். மேற்சொல்லியவையாவும் மூன்றுவிதமான அந்தக்கரணத்தின் அஸாதாரண விருத்திகள்.

பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற ஐந்துவிதமான பிராணங்கள் மூன்றுவிதமான அந்தக்கரணத்தின் ஸாதாரண வியாபாரமாகின்றன. அவற்றிற்கே ஜீவனம்—பிழைத்திருத்தல் என்றுபெயர். ஏனென்றால் பிராணன், அபானன் என்றதுமுதலிய வாயுவின் சஞ்சாரமிருந்தால் மற்ற இந்திரியங்களுக்கு ஒழுங்காய் வேலைசெய்கின்ற நிலை ஏற்

चतुर्विधकरणस्यास्यासाधारणीषु वृत्तिषु क्रमाक्रमौ सप्रकारावाह—

मू०। युगपच्चतुष्टयस्य तु वृत्तिः क्रमशश्च तस्य निर्दिष्टा।
दृष्टे तथा ऽप्यदृष்டे त्रयस्य तत्पूर्विका वृत्तिः ॥ ३० ॥

---

படுகிறது. இஃதே ஜீவனம் எனப்படும். பிராணஸஞ்சார மில்லாவிடில் இந்திரியங்கள் வேலைசெய்வதில்லை. ஆதலால் பிராண ஸஞ்சாரம் ஜீவனமாகின்றது. அவற்றுள் பிராணன் என்றவாயு மூக்கின்நுனி, ஹிருதயம், உந்தி, கால் கட்டை விரல் இவ்விடங்களிலிருக்கின்றது. அபானன் என்ற விருத்தி கண்டம், பிட்டம், மலத்வாரம், ஆண்பெண்குறிகள், இடது வலது பக்கங்கள், இவற்றிலிருக்கின்றது. ஸமானன் என்ற விருத்தி ஹிருதயம், உந்தி, எல்லாவிதமான சரீரத்திலுள்ள ஸந்திபந்தங்கள் இவைகளிலிருக்கின்றது. உதானன் என்றவிருத்தி ஹிருதயம், கண்டம், தாலு, சிரஸ், இரண்டு புருவங்களின் மத்தியபாகம், இவைகளிலிருக்கின்றது. வியானன் என்ற விருத்தி தோலிலிருக்கின்றது. இவ்விதம் அந்தக்கரண ஸாதாரண விருத்தி ரூபமான ஐந்து வாயுக்கள் சரீரத்திலிருக்கின்றன. (எ - று)

---

முப்பதாவது சுலோகம்

(அ - கை) வெளியிலுள்ள கரணங்கள் ஒன்று, உள்ளிலுள்ளகரணங்கள் மூன்று ஆக நான்குவிதமான கரணங்களின் அஸாதாரண வியாபாரங்கள் சிலசமயத்தில் கிரமமாகவும், சில சமயத்தில் கிரமமின்றி ஒரேகாலத்திலும் உண்டாகின்றன வென்று விரிவாய் உபதேசிக்கிறார்—

(ப - ரை) **चतुष्टयस्य तस्य**=வெளியிலுள்ள கரணங்கள் ஒன்று, உள்ளிலுள்ள கரணங்கள் மூன்று ஆக நான்குவிதமான கரணத்திற்கு **युगपत्**=ஒரே சமயத்திலும், **क्रमशश्च**=கிரமமாகவும் **वृत्तिः**=வியாபாரம் **दृष्टे**=பிரத்யக்ஷமான விஷயத்தில் **निर्दिष्टा**=சொல்லப்

"युगपत्" इति। दृष्टे यथा—यदा सन्तमसान्धकारे विद्युत्सम्पातमात्राद्व्याघ्रमभिमुखमतिसन्निहितं पश्यति, तदा खल्वस्यालोचनसङ्कल्पाभिमानाध्यवसायाः युगपदेव प्रादुर्भवन्ति, यतस्तत उत्प्लुत्य तत्स्थानादेकपदेऽपसरति ॥ "क्रमशश्च" यदा मन्दालोके प्रथमन्तावद्वस्तुमात्रं सम्मुग्धमालोचयति, अथ प्रणिहितमनाः कर्णान्ताकृष्टसशरासिञ्जिनीमण्डलीकृतकोदण्डः प्रचण्डतरः पाटच्चरो ऽयमिति निश्चिनोति, अथ च मांप्रत्येतीत्यभिमन्यते, अथाध्यवस्यति अपसरामीतः स्थानादिति ॥ परोक्षे त्वन्तःकरणत्रयस्य बाह्य-

---

பட்டிருக்கின்றது. तथापि = இவ்விதமிருந்தபோதிலும் अदृष्टे = பிரத்யக்ஷத்திற்குப் புலப்படாத விஷயத்தில் त्रयस्य = புத்தி, அஹங்காரம், மனஸ் இவற்றிற்கு तत्पूर्विका = பிரத்யக்ஷத்தை முன்னிட்டு वृत्तिः = கிரமமாகவும், ஒரே சமயத்திலும் அஸாதாரணவியாபாரம் (भवति = உண்டாகின்றது.)

(தா-ம்.) மேற்சொல்லிய நான்குவிதமான காரணங்களுக்கும் ஒரே சமயத்திலும், கிரமமாகவும் விருத்தி ஏற்படுகின்றது. ஒரே சமயத்தில் நான்குவிதமான காரணங்களுக்கும் விருத்தியுண்டாவதில் உதாஹரணம்—மழைக்காலத்திய இருளில் காட்டுப்பாதையாக ஒருவன் சென்றுகொண்டிருக்கும்பொழுது பளீரென ஓர் மின்னல் ஏற்படவே அதனால் தனக்கு நேரிலும் மிகவும் சமீபத்திலும் ஓர் புலி இருப்பதை பார்க்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது அம்மனிதன் அவ்விடம்விட்டுத் துள்ளிக்குதித்து அதே நிமிஷத்தில் வேறிடஞ்சென்று விடுவதால், ஆலோசனம், ஸங்கல்பம், அபிமானம், அத்யவசாயம் என்ற நான்கு விதமான விருத்திகள் ஒரே சமயத்திலுண்டாகின்றன என்று அங்கீகரிக்கவேண்டும். கிரமமாய் விருத்திகள் உண்டாவதற்கு உதாஹரணம்—ஒருவன் அற்பப்பிரகாசமுள்ள சமயத்தில் ஓர் பாதையில்சென்றுகொண்டிருக்கிறான் என்று எடுத்துக்கொள்வோம். அவன் அவ்வழியில் ஓர்வஸ்துவை இன்னதென்று பிரித்தறியப்படாத நிலையில் காண்கிறான். பிறகு ஸாவதானத்துடன் கவனிக்கும் பொழுது 'காதுவரையில் இழுக்கப்பட்டதாயும், அம்புடன் சேர்ந்ததாயுமிருக்கிற ஞாண்கயிற்றால் வளைக்கப்பட்ட வில்லையுடையவனும், மிகவும்

न्द्रियवर्जं वृत्तिरित्याह—“अदृष्टे त्रयस्य तत्पूर्विका वृत्तिः” इति । अन्तःकरणत्रयस्य युगपत्क्रमेण वृत्तिर्दृष्टपूर्विकेति । अनुमानागमस्मृतयो हि परोक्षेऽर्थे दर्शनपूर्वाः प्रवर्तन्ते, नान्यथा । यथा दृष्टे तथाऽदृष्टेऽपीति योजना ॥ ३० ॥

स्यादेतत्—चतुर्णां त्रयाणां वा वृत्तयो न तावन्मात्राधीनाः, तेष सदातनत्वेन वृत्तीनां सदोत्पादप्रसङ्गात्, आकस्मिकत्वे तु वृत्तिसङ्करप्रसङ्गो नियमहेतोरभावादित्यत आह—

---

உக்கிரனுமான ஓர் திருடன்' என்று நிச்சயிக்கிறான். பிறகு "தன்னைக்குறித்தே இவன் வருகிறான்" என்று அபிமானத்தையடைகிறான். அதற்குப் பிறகு "நாம் இவ்விடம் விட்டுச்சென்றுவிடவேண்டும்" என்று உறுதிசெய்து கொள்ளுகிறான்.

பிரத்யக்ஷத்திற்குப் புலப்படாத விஷயத்தில் பாஹ்யேந்திரியம் தவிர்த்து மற்ற இந்திரியங்களுக்கு விருத்தியுண்டாகின்றதென்கிறார் अदृष्टेत्रयस्य तत्पूर्विका वृत्तिः इति । பிரத்யக்ஷத்திற்குப் புலப்படாத விஷயங்கள் அனுமானம், ஆகமம் என்ற சப்தப் பிரமாணம், இவற்றால் அறியக்கூடியனவாக இருக்கும். அனுமானம், சப்தம் இவ்விரண்டுப் பிரமாணங்களும் பிரத்யக்ஷத்தை யபேக்ஷிக்கின்றன. எவ்விதமெனில் அனுமானத்திற்கு முக்கிய ஸாதனமான வியாப்திக்ஞானமானது ஹேது, சாத்தியம் இவற்றைப் பலவிடங்களில் சேர்ந்திருப்பனவாய்க் காணுவிடில் உண்டாவதில்லை யாகையால் வியாப்திக்ஞானம் வாயிலாக அனுமானம் பிரத்யக்ஷத்தையபேக்ஷிக்கின்றது. சப்தத்தினால் போத (அரிவு) முண்டாவதற்குப் பதம், அர்த்தம் இவ்விரண்டிற்குமுள்ள சம்பந்த க்ஞானம் முக்கியமாய் வேண்டியதாகையாலும், அச்சம்பந்த க்ஞானம் அனுமானத்தினால் உண்டாகுமிடத்தில் மேற்சொல்லியப் பிரத்யக்ஷம் சாதனமாகின்றபடியாலும் சப்தப்பிரமாணம் பிரத்யக்ஷத்தையபேக்ஷிக்கின்றது. ஆகவே பரோக்ஷமான விஷயத்தில் மூன்றுவிதமான அந்தக் கரணத்திற்கும் பிரத்யக்ஷத்தை முன்னிட்டே விருத்தி ஏற்படுகின்றது என்றேற்பட்டது. (எ-று.)

स्वां स्वां प्रतिपद्यन्ते परस्पराकूतहेतुकां वृत्तिम् ।
पुरुषार्थ एव हेतुर्न केनचित्कार्यते करणम् ॥ ३१ ॥

"स्वाम्" इति । करणानीति शेषः । यथा हि, बहवः पुरुषाः शाक्तीकयाष्टीकधानुष्ककार्पाणिकाः कृतसङ्केताः परावस्कन्दनाय प्रवृत्ताः, तत्रान्यतमस्याकूतमवगम्यान्यतमः प्रवर्तते, प्रवर्तमानस्तु शाक्तीकः शाक्तिमेवा-

---

முப்பத்தோன்ருவது சுலோகம்.

(அ-கை) நான்குவிதமான கரணங்களுடையவோ மூன்று விதமான கரணங்களுடையவோ அஸாதாரணவியாபாரங்கள் அவ்வவற்றை மாத்திரம் நிமித்த மாகக் கோள்ளுகின்றனவென்பது ஒப்பத்தக்கதல்ல. ஏனெனின் அந்த நான்கு விதமான கரணங்கள் எப்பொழுது மிருப்பதால் அதன் அஸாதாரண வியாபாரங்களான விருத்திகளும் எப்பொழுதுமுண்டாக வேண்டி நேரிடும். எவ்விதக் காரணத்தையும் எதிர்பாராமலே அந்தந்த விருத்திகள் உண்டாகின்றனவென்ருல் பாஹ்யேந்திரியங்களின் விருத்தி அந்தக்கரணத்திற்கும், அந்தக் காரணத்தின் விருத்தி பாஹ்யேந்திரியங்களுக்கும் ஏன் உண்டாகக்கூடாது? என்ற கேள்விக்குப் பதிலில்லாமை ஏற்பட்டு ஒன்றின் விருத்தி மற்ருென்றிற்கும் ஏற்படலாம் என்ற "சங்கரம்" எனப்படும் தோஷம் பிரசங்கிக்கும் என்றசங்கைக்கும் பதிலளிக்கிருர்

(ப-ரை) करणानि = பாஹ்யேந்திரியங்கள், மனஸ், புத்தி, அஹங்காரம், என்றவைகள் स्वांस्वाम् = தத்தமது वृत्तिम् = வியாபாரத்தை परस्पराकूतहेतुकाम् = மற்றது அதன் காரியத்தைச் செய்வதற்குத் தயாராக இருத்தலைக் காரணமாகக் கொண்டு प्रतिपद्यन्ते = அடைகின்றன ஓர்கரணம் மற்றக் கரணத்தின் விருத்தியை எதிர்பார்த்துத் தனது விருத்தியையடைவதற்கு पुरुषार्थ एव = விஷயானுபவம், மோக்ஷம் என்ற புருஷார்த்தம் தான் हेतुः = காரணமாகின்றது करणम् = மேற்சொல்லியக் காரணங்கள் केनचित् = மற்ற சேதனனை எவனுலும் नकार्यते = தூண்டப்படுவதில்லே.

दत्ते नतु यष्ट्यादिकम्, एवं याष्टीको ऽपि यष्टिमेव, न शक्त्यादिकम्। तथा ऽन्यतमस्य करणस्याकूतात्=स्वकार्यकरणाभिमुख्यादन्यतमं करणं प्रवर्तते। तत्प्रवृत्तेश्च हेतुत्वान्न वृत्तिसङ्करप्रसङ्ग इत्युक्तम् —"स्वां स्वां प्रतिपद्यन्ते" इति॥

स्यादेतत्—याष्टीकादयश्चेतनत्वात् परस्पराकूतमवगम्य प्रवर्तन्त इति युक्तम्। करणानि त्वचेतनानि, तस्मान्नैवं प्रवर्तितुमुत्सहन्ते। तेनैषामधिष्ठात्रा

---

(தா-ம்) ஓர் இந்திரியம் மற்ற இந்திரியத்தின் பிரவிருத்தியை எதிர்பார்த்துப் பிரவிருத்திக்கின்றதென்பதை உதாஹரணம் வாயிலாக நிரூபிக்கின்றோம். சத்துருவைக்கொல்வதற்காகச் சக்தி என்ற ஆயுதத்திற் பழக்கமுள்ளவன் ஒருவன், தடியை உபயோகிப்பதில் பழக்கமுள்ளவன் ஒருவன், வில்லை உபயோகிப்பதில் பழக்கமுள்ளவன் ஒருவன், கத்தியை உபயோகிப்பதில் பழக்கமுள்ளவன் ஒருவன் இவ்விதம் பலர் ஒன்றுசேர்ந்து "நாமெல்லோரும் இந்தச்சத்துருவைக் கொன்றுவிடவேண்டும்" என்று சங்கேதஞ்செய்துகொண்டு சத்துருவைத்தாக்குவதற்காகப் பிரவிருத்தித்தனர் என்று வைத்துக்கொள்வோம். அவர்களுள் ஒவ்வொருவனும் மற்றவர்களின் அபிப்ராயந் தெரிந்துகொண்டு அதற்கனுகுணமாகவே பிரவிருத்திகின்றான். இவ்விதம் பிரவிருத்தித்தபோதிலும், சத்துருவைக்கொல்வதற்காகச் சக்தி என்ற ஆயுதத்தை உபயோகிப்பதில் பயிர்ச்சிபெற்றவன் சக்தி என்ற ஆயுதத்தைத்தான் எடுத்துக்கொள்ளுகிறானே யொழிய தடிமுதலியவற்றை எடுப்பதில்லை. இவ்விதமே சிலம்பம்பழகுவதில் பழக்கமுள்ளவன் தடியை எடுக்கிறானேயொழிய சக்தி முதலியவற்றை எடுப்பதில்லை. இவ்விதமே ஓர் காரணம் தனது கார்யத்தைச்செய்வதற்குத் தயாராக ஆகுமாயின் அதையே நிமித்தமாகக்கொண்டு மற்றக்காரணங்களும் தத்தமது கார்யங்களைக் கிரமமாகவோ ஒரே சமயத்திலோ செய்வதற்குப் பிரவிருத்திக்கின்றன. இவ்விதம் அந்தந்தக் காரணபிரவிருத்திக்கு மற்றக்காரணங்களின் பிரவிருத்தி காரணமாகின்றதுபற்றி காரணமின்றி உண்டாகின்றதென்று சொல்வதற்கில்லை. ஆகையால் ஓர் இந்திரியத்தின் விருத்திமற்ற இந்திரியத்திற்கு உண்டாகலாம் என்கிற "சங்கரம்," என்றதோஷம் ஏற்படமாட்டாது.

करणानां स्वरूपसामर्थ्योपयोगाभिज्ञेन भवितव्यमित्यत आह – "पुरुषार्थ एव हेतुः, न केनचित्कार्यते करणम्" इति । भोगापवर्गलक्षणः पुरुषार्थ एवानागतावस्थः प्रवर्तयति करणानि, कृतमत्र तत्स्वरूपाभिज्ञेन कर्त्रा । एतच्च "वत्सविवृद्धिनिमित्तम्" (कारिका ५७) इत्यत्रोपपादयिष्यते ॥ ३१ ॥

"न केनचित् कार्यते करणम्" इत्युक्तम् । तत्र करणं विभजते –

**करणं त्रयोदशविधम्, तदाहरणधारणप्रकाशकरम् ।**
**कार्यं च तस्य दशधा, ऽऽहार्यं धार्यं प्रकाश्यं च ॥ ३२ ॥**

---

சங்கை — மேற்சொல்லிய சிலப்பம் பழகத்தெரிந்தவர்கள் முதலியவர்கள் சேதனர்களாயிருப்பதால் ஒருவர் மற்றவரின் அபிப்ராயத்தை அறிந்துப் பிரவிருத்திக்கின்றனர் என்பது பொருந்தும். இந்திரியங்களோவெனில் அசேதனமாயிருப்பதால் ஒன்று மற்றொன்றின் அபிப்ராயத்தை (தனது கார்யத்தைச் செய்வதற்குத் தயாராக இருத்தலை) எதிர்பார்த்துப் பிரவிருத்திக்கின்றதென்பது பொருந்தாது. ஆகையால் கரணங்களைத் தூண்டுகிறவனும், அவ்வவற்றின் சக்தியையறிந்தவனுமான சேதனன் ஒருவன் இருக்கவேண்டும். என்றால் பதிலளிக்கிறார்.—पुरुषार्थ एवहेतुर्नकेनाचित्कार्यते करणम् । 'அந்தந்த விஷயானுபவம் புருஷனுக்கு உண்டாவது' என்ற போகம், 'துக்கங்கள் யாவும் விலகுதல் என்ற மோக்ஷம்' இவைகளாகிற புருஷார்த்தங்களே தாம் ஏற்படாத நிலையிலிருந்துகொண்டு கரணங்களைத் தூண்டுகின்றனவாதலின் கரணங்களின் ஸ்வரூபத்தையறிந்த கர்த்தா ஒருவன் வேண்டியதில்லை. இவ்விஷயத்தைப்பற்றி वत्सविवृद्धिनिमित्तम् என்ற 57-வது காரிகையில் விரிவாய்ச் சொல்லப் போகிறோம் (எ-று)

முப்பத்திரண்டாவது சுலோகம்.

(அ-கை.) கரணம் எனப்படும் 11 இந்திரியங்கள், புத்தி, அஹங்காரம் இவைகள் தங்களைவிட வேறான சேதனனொருவனால் தூண்டப்படுவதில்லை என்று முன்னர்சொல்லப்பட்டது. அந்த "கரணம்" எவ்வளவுவிதமுள்ளதென்று பிரித்துக்காண்பிக்கிறார்.

"करणं त्रयोदशविधम्" इति । इन्द्रियाण्येकादश बुद्धिरहङ्कारश्चेति त्रयोदशप्रकारं करणम् । कारकविशेषः करणम् । न च व्यापारावेशं विना कारकत्वमिति व्यापारावेशमाह—"तदाहरणधारणप्रकाशकरम्" इति, यथायथम् । तत्र कर्मेन्द्रियाणि वागादीन्याहरन्ति, यथास्वमुपाददते, स्वव्यापारेण व्याप्नुवन्तीति यावत् । बुद्ध्यहङ्कारमनांसि तु स्ववृत्त्या प्राणादिलक्षणया धारयन्ति । बुद्धीन्द्रियाणि प्रकाशयन्ति ॥

---

(ப-ரை.) करणम्=கரணம் என்பது त्रयोदशविधम्=பதின்மூன்றுவிதமாக இருக்கின்றது. तत्=அந்த கரணம் आहरण-धारण-प्रकाशकरम्=எடுத்தல், தரித்தல், பிரகாசப்படுத்தல் இவைகளைச்செய்கின்றது तस्य=அந்த 13 விதமான கரணத்திற்கு आहार्यम्=எடுக்கத்தகுந்தது धार्यम्=தரிக்கத் தகுந்தது प्रकाश्यम्=பிரகாசப்படுத்தத்தகுந்தது (इति=என்ற) कार्यम्=கார்யமானது दशधा=பத்து விதமாக இருக்கின்றது.

(தா-ம்) இந்திரியம் 11, புத்தி 1, அஹங்காரம் 1 ஆக இப்பதிமூன்றும் கரணங்களாம். யாதானு மோர்கிரியையை உண்டு பண்ணி அதன் வாயிலாக ஓர் கார்யத்திற்குச் சாதனமாவது "காரகம்" எனப்படும். கரணம் என்பது காரகத்தின் உட்பிரிவு. ஆகவே வியாபாரமேற்படாவிடில் கரணத்திற்குக் காரகமாயிருக்குந் தன்மை சம்பவிக்காதானதுபற்றி கரணங்களின்வியாபாரங்களைச்சொல்லுகிறார். तदाहरणधारणप्रकाशकरम् । கிரஹித்தல், தரித்தல், பிரகாசப்படுத்தல் இவற்றுள் எந்தக்கிரியை எந்தக் கரணத்திற்குச் சம்பவிக்குமோ அந்தக்கிரியையையே அந்தக்கரணத்தின் வியாபாரமாக எடுத்துக்கொள்ளவேண்டும். மேற்குறித்த 13 கரணங்களில் கர்மேந்திரியங்கள் தத்தமது விஷயங்களை எடுக்கின்றன. அதாவது—28வது சுலோகத்திற் சொல்லியபடி பேசுதல், எடுத்தல், நடத்தல், மலத்தை வெளியில் தள்ளுதல், புணர்தல் என்ற வியாபாரங்களை நடத்துகின்றன. புத்தி, அஹங்காரம், மனஸ் இவைகளோவெனில்பிராணன் அபானன் என்ற தமது விருத்திகளால் கர்மேந்திரியம், ஞானேந்திரியம் சரீரம் இவற்றைத்தரிக்கின்றன. (சரீரம் இந்திரியம் முதலியவற்றிற்கு அவ்வவற்றின்தொழிலைச் செய்வதற்குரிய யோக்யதையைக் கொடுக்கின்றன.) புத்தீந்திரியமெனப்படும் கண் காது முதலியவைகள் வஸ்துக்களைப்

आहरणधारणादिक्रियाणां सकर्मकतया, किं कर्म, कतिविधं चेत्यत आह—"कार्यं च तस्य" इति । कार्यं तस्य त्रयोदशविधस्य करणस्य दशधा, आहार्यं धार्यं प्रकाश्यं च । आहार्यं व्याप्यम् । कर्मेन्द्रियाणां वचनादानविहरणोत्सर्गानन्दाः यथायथं व्याप्याः, ते च यथायथं दिव्यादिव्यतया दश—इत्याहार्यं दशधा । एवं धार्यमप्यन्तःकरणत्रयस्य प्राणादिलक्षणया वृत्त्या शरीरम्, तच्च पार्थिवादिपाञ्चभौतिकम् । शब्दादीनां पञ्चानां समूहः पृथिवी, ते च पञ्च दिव्यादिव्यतया दशेति धार्यमपि दशधा । एवं बुद्धीन्द्रियाणां शब्दस्पर्शरूपरसगन्धा यथायथं व्याप्याः, ते च यथायथं दिव्यादिव्यतया दशेति प्रकाश्यमपि दशधेति ॥ ३२ ॥

---

*பிரகாசப்படுத்துகின்றன (அறிவிக்கின்றன) தரித்தல், எடுத்தல், பிரகாசப்படுத்தல் முதலியக்கிரியைகள் செய்ப்படு பொருளின்றி சம்பவிக்காதானதுபற்றி அச்செயப்படு பொருள்யாது? எத்தனை விதமுள்ளது என்றால் சொல்லுகிறார்—*कार्यं च तस्य दशधेति । *13 விதமான காரணங்களின் காரியம்* आहार्यम् *(எடுக்கத்தகுந்தது) தரிக்கத்தகுந்தது, பிரகாசப்படுத்தத்தகுந்தது என்று மூன்றுவிதமாகின்றது. அம்மூன்றும் தனித்தனியே 10 விதமாகின்றது வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்ற ஐந்து இந்திரியங்களின் வியாபாரங்களால் வார்த்தை, எடுக்கவேண்டிய வஸ்துவின் சம்பந்தம், அடையவேண்டிய வேறுதேசத்தின் சம்பந்தம், மலத்திற்கு வெளிதேச சம்பந்தம், ஆனந்தம் இவைமுறையே கார்யங்களாகின்றன. அக்கார்யங்கள் திவ்யம், அதிவ்யம் என்ற பிரிவினையால் இரண்டுவிதமாயாவதால்* आहार्यम् *என்பது 10 விதமாகின்றது. மூன்றுவிதமான அந்தக்காணத்தின் விருத்திரூபமான பிராணன், அபானன் முதலியவற்றால் தரிக்கப்படுவது சரீரம். அது பிருதிவீ முதலிய ஐந்து பூதங்களின் விகாரமாகின்றது. பிருதிவீ என்பது சப்தம், ஸ்பர்சம் முதலிய குணங்களின் சமூஹமாக இருக்கின்றது. சப்தம் முதலியவைகள் திவ்யம் அதிவ்யம் என்று இரண்டு விதமாயிருப்பது பற்றி அவை 10 விதமாவதால் அவற்றின் சமூஹமான சரீரமும் 10 விதமாகின்றது. ஆனதுபற்றி தரிக்கத் தகுந்ததும் 10 விதமாகின்றது. புத்தீந்திரியங்களான கண் காது முதலிய இந்திரியங்களால் சப்தம்,*

त्रयोदशविधकरणे ऽवान्तरविभागं करोति—

**अन्तःकरणं त्रिविधं दशधा बाह्यं त्रयस्य विषयाख्यम्।**
**साम्प्रतकालं बाह्यं त्रिकालमाभ्यन्तरं करणम् ॥ ३३ ॥**

"अन्तःकरणम्" इति । अन्तःकरणं त्रिविधम् 'बुद्धिरहङ्कारो मन' इति, शरीराभ्यन्तरवर्तित्वादन्तःकरणम् ॥ "दशधा" बाह्यकरणम् "त्रयस्य" अन्तःकरणस्य "विषयाख्यम्" विषयमाख्याति विषयसङ्कल्पाभिमानध्यवसायेषु कर्तव्येषु द्वारीभवति । तत्र बुद्धीन्द्रियाण्यालोचनेन,

---

ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவைகள் பிரகாசப்படுத்தப்படுகின்றன. அவைகள் திவ்யம், அதிவ்யம், என்று இரண்டு விதமாயிருப்பதால் பிரகாசப்படுத்தத் தகுந்தது 10 விதமாகின்றது.

முப்பத்துமூன்ருவது சுலோகம்.

(அ-கை) பதிமூன்று விதமான கரணங்களுள் அவாந்தரவிபாகத்தை (உட்பிரிவை) உபதேசிக்கிருர்.

(ப-ரை) अन्तःकरणम्=அந்தக்கரணம் என்பது त्रिविधम् மூன்று விதமாயிருக்கின்றது. बाह्यम्=வெளியிலிருக்கும் கரணம் दशधा=10 விதமாயிருக்கின்றது (तत्=அந்த பாஹ்யகரணமானது त्रयस्य=மூன்றுவிதமான அந்தக்கரணங்களுக்கும் विषयाख्यम्=விஷயங்களைப்பிரகாசப்படுத்துகிறது बाह्यम्=வெளிலிருக்கும் கரணம் सांप्रतकालम्=நிகழ் காலத்திலுள்ளதையேக் கிரஹிக்கின்றது. आभ्यन्तरम्=சரீரத்திற்குள்ளிருக்கின்ற करणम्=கரணம் அதாவது அந்தக்கரணம் त्रिकालम्=சென்றகாலம், நிகழ் காலம், வருங்காலம் இவைகளில் சம்பந்தித்த வஸ்துக்களைக் கிரஹிக்கின்றது.

(தா-ம்.) அந்தக்கரணம் என்பது புத்தி, அஹங்காரம், மனஸ் என்று மூன்றுவிதமாகின்றது அவை சரீரத்திற்குள்ளிருப்பதால் அந்தக்கரணம் எனப்படும். பாஹ்யகரணம் (வெளியிலிருக்கின்ற கரணம்) 10 விதம். அவை மூன்றுவிதமான அந்தக்கரணத்திற்கும் வெளியிலுள்ள விஷயங்களைத் தெரிவிக்கின்றன. அதாவது விஷயங்

कर्मेन्द्रियाणि तु यथास्वं व्यापारेण ॥ बाह्यान्तरयोः करणयोर्विशेषान्तरमाह— "साम्प्रतकालम्" इति । वर्तमानकालं बाह्यमिन्द्रियम् । वर्तमानसमीपमनागतमतीतमपि वर्तमानम्; अतो वागपि वर्तमानकालविषया भवति । "त्रिकालमाभ्यन्तरं करणम्" इति । तद्यथा—नदीपूरभेदादभूद्वृष्टिः; अस्ति धूमादग्निरिह नगनिकुञ्जे, असत्युपघातके पिपीलिकाण्डसञ्चरणाद्भविष्यति वृष्टिरिति, तदनुरूपाश्च सङ्कल्पाभिमानाध्यवसाया भवन्ति ॥

---

களைப்பற்றியசங்கல்பம், அபிமானம், அத்யவஸாயம் இவையுண்டாவதற்குத்துவாரமாகின்றன. 10 விதமான பாஹ்யேந்திரியங்களுள் புத்தீந்திரியங்கள் "ஆலோசனம்" என்ற க்ஞானத்தையுண்டு பண்ணுவதாலும், கர்மேந்திரியங்கள் முன்சொல்லப்பட்ட அவ்வவற்றின் வியாபாரங்களாலும் துவாரமாகின்றன என்று பகுத்தறிய வேண்டும். பாஹ்யகரணம், அந்தக்கரணம் இவ்விரண்டிற்குமுள்ள பேதத்தை உபதேசிக்கிறார்—सांप्रतकालमिति । பாஹ்யேந்திரியம் நிகழ்காலத்தைச் சம்பந்தித்த வஸ்துவைமட்டுமே கிரஹிக்கின்றது. சங்கை—பாஹ்யேந்திரியங்களுள் ஒன்றான வாக்என்ற இந்திரியம் சென்றகாலம், வருங்காலம் இவற்றைச்சம்பந்தித்த வஸ்துக்களையும் வியவஹரிப்பதால் பாஹ்யேந்திரியமெல்லாம் நிகழ்காலத்தைச் சம்பந்தித்த வஸ்துவினிடமே வியாபாரமடைகின்றன என்றுசொன்னது எங்ஙனம்? உத்தரம்—நிகழ்காலத்திற்குச் சமீபத்திருப்பதால் சென்றகாலம், வருங்காலம் இரண்டும் "வர்த்தமான" என்ற சப்தத்தால் இங்கு குறிப்பிடப்படுகின்றன. பத்துவிதமான பாஹ்யேந்திரியங்களுள் "வாக்" என்ற இந்திரியந்தவிற மற்ற இந்திரியங்கள் நிகழ்காலத்தைச் சம்பந்தித்த வஸ்துவினிடமே வியாபாரமடைவதால் "சத்திரி" நியாயத்தையனுசரித்து இங்கு எல்லாபாஹ்யேந்திரியங்களும் நிகழ்காலத்தைச் சம்பந்தித்தவைகள் என்றுசொல்லப்படுகின்றன என்று கொள்ளவேண்டும். त्रिकालमाभ्यन्तरं करणम् அந்தக்கரணம், சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் இம்மூன்றிலும் சம்பந்தித்தவைகளையும் பற்றி விருத்தியையடைகின்றது. உதாஹரணம்—ஆற்றில் ஜலப்பெருக்கைக்கண்டு மழை பொழிந்திருக்க வேண்டும் என்றும், புகையைக்கண்டு இந்தமலையின் புதரில் நெருப்பிருக்கிறதென்றும், மற்றொன்றினால் உபத்திரவமுண்டாகாம

कालश्च वैशेषिकाभिमत एको न अनागतादिव्यवहारभेदं प्रवर्तयितु-मर्हति। तस्मादयं यैरुपाधिभेदैरनागतादिभेदं प्रतिपद्यते, सन्तु त एवोपायाः ये ऽनागतादिव्यवहारहेतवः, कृतमत्रान्तर्गडुना कालेनेति सांख्याचार्याः। तस्मान्न कालरूपतत्त्वान्तराभ्युपगम इति ॥ ३३ ॥

साम्प्रतकालानां बाह्येन्द्रियाणां विषयं विवेचयति—

**बुद्धीन्द्रियाणि तेषां पञ्च विशेषाविशेषविषयाणि।**
**वाग्भवति शब्दविषया शेषाणि तु पञ்चविषयाणि ३४ ॥**

---

*விருக்கும்பொழுதும் எறும்புகள் முட்டைகளை எடுத்துக்கொண்டு செல்வதைக்கண்டால் மழை பொழியப்போகின்றதென்றும் ஊஹிக்கிறோம். மேற்சொல்லியவை மூன்றுகாலத்தையும் சம்பந்தித்திருக்கின்றன. மேற்சொன்ன ஊஹத்திற்கனுகுணமாக சங்கல்பம், அபிமானம், அத்யவஸாயம், இவையுண்டாகின்றன. ஆனதுபற்றி "அந்தக்கரணம்" மூன்றுகாலத்தைச் சம்பந்தித்ததாயாகின்றது. வைசேஷிகர்களா லங்கீகரிக்கப்பட்ட ஒரேவிதமான "காலம்" என்ற தத்துவமானது நடந்தது, நடக்கின்றது, நடக்கப்போகின்றது என்றது முதலியவியவஹாரபேதத்தை நடத்திவைப்பதற்குச் சமர்த்தமாகாது. ஆனதுபற்றி எந்த உபாதிகளின் பேதத்தினால் சென்றது, நடக்கின்றது முதலியவற்றை அறிகின்றோமோ அவைகளே மேற்சொன்ன காலவியவஹாரத்திற்கும் காரணமாகட்டும்; மத்தியில் காலம் என்றதத்துவத்தை எதற்காக அங்கீகரிக்கவேண்டும்; ஆதலால் காலம் எனத்தனியாய் ஓர்தத்துவம் வேண்டியதில்லை என்று சாங்கியாசார்யர்களின் கருத்து. ஆதலால் காலம் எனத்தனியாய் ஓர் தத்துவத்தை அங்கீகரிப்பதில்லை.*

முப்பத்துநான்காவது சுலோகம்.

*(அ-கை.) நிகழுங்காலத்தைச் சம்பந்தித்த வஸ்துக்களிடமே விருத்தியையடைகின்ற பாஹ்யேந்திரியங்களுக்கு விஷயத்தைப் பிரித்துக்காண்பிக்கிறார்*

" बुद्धीन्द्रियाणि " इति । " बुद्धीन्द्रियाणि " " तेषां " दशानामिन्द्रियाणाम्मध्ये " पञ्च, " " विशेषाविशेषविषयाणि " विशेषाः स्थूलाः शब्दादयः शान्तघोरमूढरूपाः पृथिव्यादिरूपाः, अविशेषास्तन्मात्राणि सूक्ष्माः शब्दादयः, मात्रग्रहणेन स्थूलभूतमपाकरोति । विशेषाश्च अविशेषाश्च विशेषाविशेषाः, त एव विषया येषां बुद्धीन्द्रियाणां तानि तथोक्तानि । तत्रोर्ध्वस्रोतसां योगिनाञ्च श्रोत्रं शब्दतन्मात्रविषयं स्थूलशब्दविषयं च, अस्मदादीनां तु स्थूलशब्दविषयमेव । एवन्तेषां त्वक् स्थूलसूक्ष्मस्पर्शविषया, अस्मदादीनां तु स्थूलस्पर्शविषयैव । एवञ्चक्षुरादयो ऽपि तेषामस्मदादीनां च रूपादिषु सूक्ष्मस्थूलेषु द्रष्टव्याः ॥

---

(ப-ரை.) तेषाम्=இந்திரியங்களுள் पञ्चबुद्धीन्द्रियाणि ஐந்துக் ஞானேந்திரியங்கள் विशेषाविशेषविषयाणि=विशेष=ஸ்தூலமான சப்தம்முதலியவும் अविशेष=தன் மாத்திரைகளெனப்படும் சூக்ஷ்மசப்தம் முதலியவுமான இவைகளைविषयाणि=விஷயங்களாயுடையன. वाक्=வாக்என்ற இந்திரியம் शब्दविषया=சப்தத்தைவிஷயமாயுடையதாக भवति=ஆகின்றது. शेषाणि तु =மற்றுமுள்ள கர்மேந்திரியங்கள் पञ्चविषयाणि=சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற 5 குணங்களின் சமூகமான பிருதிவீ முதலியவற்றை விஷயமாயுடையன.

(தா-ம்) பத்துவிதமான இந்திரியங்களுள் ஞானேந்திரியங்கள் ஐந்தும் பிருதிவ்யாதிகளின் ஸ்வரூபமாயும், சாந்தம், கோரம், மூடம் என்றப்பிரிவினைகளுள்ளனவாயுமிருக்கிற ஸ்தூலமான சப்தம், ரூபம் முதலியவற்றையும், தன் மாத்திரைகளெனப்படும் சூக்ஷ்மமான சப்தம் முதலியவற்றையும் விஷயமாயுடையன. யோகிகளுடைய சுரோத்ரேந்திரியம் சூக்ஷ்ம சப்தம், ஸ்தூல சப்தம் இவ்விரண்டையும் விஷயமாயுடையது. அதாவது மேற் சொன்ன இரண்டுவிதமான சப்தத்தையும கிரஹிக்கின்றது. நம்போன்றவர்களின் சுரோத்திரேந்திரியமோவெனின் ஸ்தூலமான சப்தத்தை மட்டும் கிரஹிக்கின்றது. இவ்விதமே மேற்கூறிய யோகிகளின் த்வகிந்திரியம் ஸ்தூலஸ்பர்சம், சூக்ஷ்ம ஸ்பர்சம் இவ்விரண்டையும் அறிகின்றது நம்போன்றவர்களின் த்வகிந்திரியமோவெனின் ஸ்தூலமானஸ்பர்சத்தையே கிரஹிக்கின்றது. இவ்விதமே யோகிகளுடையவும் நம

एवं कर्मेन्द्रियेषु मध्ये "वाग्भवति शब्दविषया" स्थूलशब्दविषया, तद्धेतुत्वात्। नतु शब्दतन्मात्रस्य हेतुः, तस्याहङ्कारिकत्वेन वागिन्द्रियेण सहैककारणकत्वात्। "शेषाणि तु" चत्वारि पायूपस्थपाणिपादाख्यानि "पञ्चविषयाणि" पाण्याद्याहार्याणां घटादीनां पञ्चशब्दाद्यात्मकत्वादिति ॥ ३४ ॥

साम्प्रतं त्रयोदशसु करणेषु केषाञ्चित्प्रधानभावं सहेतुकमाह—

**सान्तःकरणा बुद्धिः सर्वं विषयमवगाहते यस्मात्।**
**तस्मात्त्रिविधं करणं द्वारि, द्वाराणि शेषाणि ॥ ३५ ॥**

"सान्तःकरणा" इति। "द्वारि" प्रधानम् "द्वाराणि" करणानि, बाह्येन्द्रियाणि द्वाराणि। तैरुपनीतं सर्वं विषयं समनोऽहङ्कारा बुद्धिः यस्मादवगाहते=अध्यवस्यति तस्माद्बाह्येन्द्रियाणि द्वाराणि, द्वारवती च सान्तः—करणा बुद्धिरिति ॥ ३५ ॥

न केवलं बाह्यानीन्द्रियाण्यपेक्ष्य प्रधानं बुद्धिः, अपि तु ये अप्यहङ्कारमनसी द्वारिणी, ते अप्यपेक्ष்य बुद्धिः प्रधानमित्याह—

---

போன்றவர்களுடையவும் கண் முதலிய இந்திரியங்களும் ஸ்தூலமாயும், ஸூக்ஷ்மமாயுமிருக்கின்ற ரூபம் முதலியவற்றில் பிரவிருத்திக்கின்றன என்று கண்டு கொள்ளவேண்டும்.

இவ்விதமே கர்மேந்திரியங்களுள் வாக் என்ற இந்திரியம் ஸ்தூலமான சப்தத்தை விஷயமாயுடையது. ஏனெனில், ஸ்தூலசப்தத்திற்குக் காரணமாய் இருப்பதுபற்றியேயென்க. சப்ததன்மாத்திரைக்கும் (ஸூக்ஷ்மசப்தத்திற்கும்) வாகிந்திரியம் காரணமாவதில்லை. ஸூக்ஷ்மமானசப்தம் அஹங்காரத்தினின்றும் உண்டாகின்றது. வாக் என்ற இந்திரியமும் அஹங்காரத்தினின்றே உண்டாகின்றது ஆனதுபற்றி ஸூக்ஷ்மசப்தம் வாகிந்திரியத்தால் உண்டுபண்ணப் படுகின்றதென்று சொல்லமுடியாது. பாயு, உபஸ்தம், பாணி, பாதம் என்ற மீதமுள்ள நான்கு கர்மேந்திரியங்கள் சப்தம், ரூபம், ஸ்பர்சம், கந்தம், ரஸம் என்ற 5 குணங்களின் சமூகமான குடம் முதலியவற்றை விஷயமாயுடையன.

एते प्रदीपकल्पाः परस्परविलक्षणा गुणविशेषाः ।
कृत्स्नं पुरुषस्यार्थं प्रकाश्य बुद्धौ प्रयच्छन्ति ॥ ३६ ॥

"एते" इति । यथा हि ग्रामाध्यक्षः कौटुम्बिकेभ्यः करमादाय विषयाध्यक्षाय प्रयच्छति, विषयाद्ध्यक्षश्च सर्वाध्यक्षाय, स च भूपतये, तथा बाह्येन्द्रियाण्यालोच्य मनसे समर्पयन्ति, मनश्च सङ्कल्प्याहङ्काराय, अहङ्कार-

---

முப்பத்தைந்தாவது சுலோகம்.

(அ-கை.) பதிமூன்று விதங்களான கரணங்களுட் சிலவற்றிற்கு முக்கிய மாயிருக்குந் தன்மையைக் காரணத்துடன் உபதேசிக்கிருர்.

(ப-ரை) सान्तःकरणा=மனஸ் அஹங்காரம் இவைகளுடன் கூடின बुद्धिः=புத்தியானது यस्मात्=யாதுகாரணம் பற்றி सर्वं विषयम्=சமஸ்தமான விஷயங்களையும் अवगाहते=அத்யவஸாயம் செய்கின்றதோ (இது நம்மால் செய்யத்தகுந்தது என்று உருதி செய்கின்றதோ) तस्मात्=ஆனதுபற்றி त्रिविधं करणम्=மனஸ், அஹங்காரம், புத்தியென்ற மூன்றுவிதமான கரணம் द्वारि=பிரதானமாகின்றது. शेषाणि=மீதமுள்ள இந்திரியங்கள் द्वाराणि=துவாரங்களாகின்றன (அப்ரதானங்களாகின்றன).

முப்பத்தாருவது சுலோகம்.

(அ-கை) புத்தியானது பாஹ்யேந்திரங்களைக் காட்டிலும் பிரதானமாகின்றது என்பதுமட்டுமில்லை; பின்னேயோ வெனில் முந்திய சுலோகத்தில் பிரதானங்களென்று சொல்லப்பட்ட அஹங்காரம், மனஸ் இவைகளையபேக்ஷித்தும் பிரதானமாகின்றது என்று உபதேசிக்கிருர்.

(ப-ரை) गुणविशेषाः=ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற 3 குணங்களின் விகாரங்களான एते=பத்துவிதமான இந்திரியம், மனஸ், அஹங்காரம், இவைகள் परस्परविलक्षणाः=ஒன்றிற்கொன்று முறண்பட்டவைகளாயினும் प्रदीपकल्पाः=தீபம் போலொனவைகளாய்க் கொண்டு कृत्स्नं पुरुस्य अर्थम्=சகலவிதமான புருஷார்த்தத்தையும் प्रकाश्य=புலப்படுத்தி बुद्धौ=புத்தியினிடம் प्रयच्छन्ति=கொடுக்கின்றன.

श्राभिमत्य बुद्धौ सर्वाध्यक्षभूतायां,—तदिदमुक्तम्—" पुरुषस्यार्थं प्रकाश्य बुद्धौ प्रयच्छन्ति " इति ॥ बाह्येन्द्रियमनोऽहङ्काराश्च " गुणविशेषाः " गुणानां सत्त्वरजस्तमसां विकाराः, ते तु परस्परविरोधशीला अपि पुरुषार्थेन भोगापवर्गरूपेणैकवाक्यतान्नीताः, यथा वर्तितैलवह्नयः सन्तमसापनयेन रूपप्रकाशाय मिलिताः प्रदीपः, एवमेते गुणविशेषाः इति योजना ॥ ३६ ॥

---

(தா-ம்) கிராமாதிகாரி தனது கிராமத்திலிருக்கும் குடிகளிடமிருந்துவரியை வசூலித்துப் பல கிராமங்களுக்கு அதிகாரியான தனது மேலதிகாரியினிடம் கொடுக்கிறான். பலக்கிராமங்களுக்கு அதிகாரியாயிருப்பவன் இராஜதானிக்கு அதிகாரியாயிருப்பவனிடம் அந்த வரியைச் சேர்ப்பிக்கிறான். அவன் அதை அரசனிடம் சேர்ப்பிக்கிறான். இது எவ்விதமோ அவ்விதமே வெளியிலுள்ள இந்திரியங்கள் இன்னதென்று நிர்ணயிக்கப்படாத நிலையில் ஒரு வஸ்துவை யறிந்து மனஸ்ஸினிடம் சேர்ப்பிக்கின்றன. மனஸ்ஸானது இந்த வஸ்து இத்தகையதுதான் என்று நிச்சயித்து அஹங்காரத்தினிடம் கொடுக்கின்றது. பிறகு அஹங்காரம் இது நம்முடையது, இதைச் செய்வதில் நாம் அதிகாரி என்று அபிமானத்தையடைந்து எல்லாவற்றிற்கும் பிரதானமானபுத்தியினிடம் சேர்ப்பிக்கின்றது. மேற்சொல்லியதே पुरुषस्यार्थं प्रकाश्य बुद्धौ प्रयच्छन्ति என்றதால் சொல்லப்பட்டிருக்கிறது. திரி, எண்ணெய், நெருப்பு இம்மூன்றும் வேவ்வேறான ஸ்வபாவமுள்ளவைகளாயினும் இருளைப்போக்கி ரூபத்தைப்பிரகாசப்படுத்துவதற்காக ஒன்று சேர்ந்து தீபம் என்றபெயரை எவ்விதமடைகின்றனவோ, அவ்விதமே ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற மூன்று குணங்களின் பரிணாமங்களான பாஹ்யேந்திரியம், மனஸ், அஹங்காரம் இவைகளும் புருஷனுக்கு விஷயோபபோகம் ஏற்படுவதற்காக ஒன்று சேர்ந்து விஷயங்களைப்பிரகாசப்படுத்தி புத்தியினிடம் சேர்ப்பிக்கின்றன. (எ-று.)

முப்பத்தேழாவது சுலோகம்.

(அ-கை.) அஹங்காரம், மனஸ் இவைகளும் விஷயங்களைப் புத்தியினிடம் ஏன் சேர்ப்பிக்கின்றன? புத்தியானது ஏன்

कस्मात्पुनर्बुद्धौ प्रयच्छन्ति, न तु बुद्धिरहङ्काराय द्वारिणे मनसे चेत्यत आह—

**सर्वं प्रत्युपभोगं यस्मात्पुरुषस्य साधयति बुद्धिः ।**
**सैव च विशिनष्टि पुनः प्रधानपुरुषान्तरं सूक्ष्मम् ॥ ३७ ॥**

"सर्वम्" इति । पुरुषार्थस्य प्रयोजकत्वात् तस्य यत्साक्षात्साधनं तत् प्रधानम् । बुद्धिश्चास्य साक्षात्साधनम्, तस्मात्सैव प्रधानम् । यथा सर्वाध्यक्षः साक्षाद्राजार्थसाधनतया प्रधानं, इतरे तु ग्रामाध्यक्षादयस्तम्प्रति गुणभूताः । बुद्धिर्हि पुरुषसन्निधानात् तच्छायापत्त्या तद्रूपैव सर्वविषयोपभोगं पुरुषस्य साधयति । सुखदुःखानुभवो हि भोगः, स च बुद्धौ, बुद्धिश्च पुरुषरूपैवेति, सा च पुरुषमुपभोजयति । यथाऽर्थालोचनसङ्कल्पाभिमानाश्च

---

அஹங்காரம், மனஸ் இவற்றினிடம் விஷயங்களைச் சேர்ப்பிப்பதில்லை? என்றால் பதிலளிக்கிறார்—

(ப-ரை.) यस्मात्=யாது காரணம்பற்றி बुद्धिः=புத்தியானது सर्वं प्रति=எல்லா விஷயத்தையும் பற்றிய उपभोगम्=அனுபவத்தை पुरुषस्य=புருஷனுக்கு साधयति=ஏற்படுத்திவைக்கின்றதோ (तस्मात्=ஆனதுபற்றியும்) सैव=அந்தப்புத்தியே सूक्ष्मम्=சுலுவில் கண்டுகொள்ளக்கூடாத प्रधानपुरुषान्तरम्=பிரகிருதி புருஷன் இவ்விரண்டிற்குமுள்ள பேதத்தை विशिनष्टि=போதிக்கின்றதோ (तस्मात्=ஆனது பற்றியும்) सा=அந்தப் புத்தியானது प्रधानम्=மற்றெல்லாக் காரணங்களுட் பிரதானமாகின்றது.

(தா-ம்.) சகலவிதமான காரணங்களின் பிரவிருத்திக்கும் புருஷனுக்கு ஏற்படவேண்டிய சுகதுக்கானுபவமே காரணமாதலாலும் அதற்குப் புத்தியே சாக்ஷாத்ஸாதனமாதலாலும் மற்றக் காரணங்களுள் புத்தி பிரதானமாகின்றது. ஸர்வாதிகாரியாயிருப்பவன் நேரில் அரசனுடைய கார்யத்தை முடித்துக் கொடுப்பதற்குச் சாதனமாயிருப்பதால் எவ்விதம் பிரதானனாகவும், மற்றக் கிராமாதிகாரிமுதலியவர்கள் அவ்விதமில்லாதிருப்பதால் அந்த ஸர்வாதிகாரிக்குக் கீழ்பட்டவர்களாகவும் ஆகின்றனரோ அவ்விதமே இங்கு

तत्तद्रूपपरिणामेन बुद्धावुपसङ्क्रान्ताः, तथेन्द्रियव्यापारा अपि बुद्धेरेव स्वव्यापारेणाध्यवसायेन सहैकव्यापारीभवन्ति, यथा स्वसैन्येन सह ग्रामाध्यक्षादि सैन्यं सर्वाध्यक्षस्य भवति। "सर्वं" शब्दादिकं "प्रति" य "उपभोगः" "पुरुषस्य" तं साधयति ॥

ननु पुरुषस्य सर्वविषयोपभोगसम्पादिका यदि बुद्धिः तर्ह्यनिर्मोक्ष इत्यत आह—पश्चात् "प्रधानपुरुषयोरन्तरं" विशेषं "विशिनष्टि"

---

மறியவும். புத்திதான் புருஷனின் நெருங்கின சம்பந்தத்தால் புருஷனின் பிரதிபிம்பத்தை அடைந்து அதனால் புருஷனின் தாதாத்ம்யத்தையடைந்தது போலாகி எல்லாவிதமான விஷயங்களின் அனுபவத்தையும் புருஷனுக்குச் சாதித்துத் தருகின்றது—எவ்விதமெனின்—சுகம், துக்கம் இவற்றைப்பற்றின அனுபவம் "போகம்" எனப்படும். அது புத்தியிலுண்டாகின்றது. புத்தியோ புருஷனின் பிரதிபிம்பத்தை யடைந்திருப்பதால் புருஷரூபமாகின்றது. ஆனது பற்றிப் புத்தியானது புருஷனின் விஷயானுபவத்திற்குச் சாதனமாகின்றது. * கிராமாதிகாரியின் சைன்யமும், ஸர்வாதிகாரியின் சைன்யமும் எவ்விதம் ஸர்வாதிகாரியின் கார்யசாதகமாயிருக்குமோ அவ்விதமே மனஸ், அஹங்காரம் இவைகளின் வியாபாரங்களும் இந்திரியங்களின் வியாபாரங்களும் புத்தியிலுண்டாகின்ற அத்யவஸாயத்திற்குச்சாதனமாகின்றன.

---

* இந்தச் சாங்கியசித்தாந்தத்தில் புருஷனுக்கு நேரில் எவ்வித விஷயானுபவமும் கிடையா. புத்தியினிடமே எல்லாவிஷயானுபவங்களுமுண்டாகின்றன. ஆயினும் நிர்மலமான புத்தியினிடம் புருஷன் பிரதிபலனத்தையடைவதால் அழுக்குள்ள கண்ணாடியிற் பிரதிபலித்த முகத்தினிடமும் கண்ணாடியின் அழுக்குக்காணப்படுவதுபோல புத்தியின் தர்மமான சுகதுக்கானுபவமும் புருஷனிடமிருப்பதாய் தோன்றுகிறது. "கண்ணாடியில் தான் அழுக்கிருக்கிறது. நாம் வேறு கண்ணாடி வேறு" என்றப்பகுத்தறிவு ஏற்படாவிடில் கண்ணாடியில் பிரதிபிம்பித்த முகத்தினிடமுள்ள அழுக்கைத் தன்னிடமுள்ளதாகவே நினைத்து வருந்துவதுபோலப் புத்திக்கும் புருஷனுக்குமுள்ள பேதக்ஞான முண்டாகாததால் எதிலும் சம்பந்தமற்ற புருஷனும் சுகதுக்கானுபவமுள்ளவன் போலவும் ஸம்ஸாரிபோலவுமாகிறான் என்ற சித்தாந்த ரஹஸ்யத்தைக் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

करोति—यथौदनपाकं पचतीति,—करणं च प्रतिपादनम्। ननु प्रधानपुरुषयोरन्तरस्य कृतकत्वादनित्यत्वम्, तत्कृतस्य मोक्षस्यानित्यत्वं स्यादित्यत आह—"विशिनष्टि"—'प्रधानं सविकारमन्यत्, अहमन्य' इति विद्यमानमेवान्तरं, अविवेकेनाविद्यमानमिव बुद्धिर्बोधयति, न तु करोति, येनानित्यत्वमित्यर्थः। अनेनापवर्गः पुरुषार्थो दर्शितः, "सूक्ष्मम्" दुर्लक्ष्यम्—तदन्तरमित्यर्थः ॥ ३७ ॥

तदेवं करणानि विभज्य विशेषाविशेषान् विभजते—

**तन्मात्राण्यविशेषाः, तेभ्यो भूतानि पञ्च पञ्चभ्यः।**
**एते स्मृता विशेषाः, शान्ता घोराश्च मूढाश्च ॥ ३८ ॥**

---

புருஷனுக்கு எல்லாவிதமான விஷயானுபவத்தையும் புத்தி உண்டு பண்ணுகிறதாயின் "மோக்ஷம்" என்ற நிலையே சம்பவிக்காது என்று சந்தேஹித்து பதிலளிக்கிறார்—सैवचाविशिनष्टि इति। அந்தப் புத்தியே பிரகிருதி புருஷபேதத்தை யுண்டுபண்ணி மோக்ஷத்தையு முண்டுபண்ணுகிறது. சங்கை—அவ்விதமாயின் பிரதான புருஷபேதம் கார்யமாகிவிடுவதால் அநித்யமாகிவிடும். ஆகவே அந்தப் பேதத்தா லுண்டாகின்ற மோக்ஷமும் அனித்யமாகிவிடுமன்றோ? உத்தரம்.—அந்தப் புத்தியே உண்மையிலிருக்கின்றதும், அவிவேகத்தால் இல்லாததுபோல் காணப்படுகிறதுமான பிரதான புருஷபேதத்தை "விகாரத்துடன் கூடிய பிரகிருதி வேறு, புருஷன் வேறு" என்று அறிகின்றது என்று பொருள்கொள்ள வேண்டுமேயல்லாது உண்டுபண்ணுகிறதென்று பொருள்கொள்ளக் கூடாது.

(அ-கை.) இவ்விதம் கரணங்களைப்பிரித் துபதேசித்து "விசேஷம்" "அவிசேஷம்" இவற்றைப் பிரித்துக்காண்பிக்கிறார்.

(ப-ரை.) तन्मात्राणि=சப்ததந்மாத்திரை முதலியவைகள் अविशेषाः=அவிசேஷமெனப்படும். तेभ्यः पञ्चभ्यः=அந்த ஐந்துதந்மாத்திரைகளினின்றும், पञ्चभूतानि=ஆகாசம், வாயு முதலிய ஐந்து பூதங்கள் (उत्पद्यन्ते=உண்டாகின்றன) च=யாது காரணம்பற்றி एते=இவ்வைந்து பூதங்களும் शान्ताः=சுகரூபங்களாகவும் घोराः=துக்கவடிவங்

"तन्मात्राणि" इति । शब्दादितन्मात्राणि सूक्ष्माणि । न चैषां शान्तत्वादिरस्ति उपभोगयोग्यता विशेष इति मात्रशब्दार्थः ॥ अविशेषानुक्त्वा विशेषान्वक्तुमुत्पत्तिमेषामाह—"तेभ्यो भूतानि" इति । तेभ्यस्तन्मात्रेभ्यो यथासंख्यमेकद्वित्रिचतुःपञ्चभ्यो भूतान्याकाशानलसलिलावनिरूपाणि "पञ्च" "पञ्चभ्यः" तन्मात्रेभ्यः ॥

अस्त्वेतेषामुत्पत्तिः, विशेषत्वे किमायातमित्यत आह —"एते स्मृता विशेषाः" इति । कुतः —"शान्ता घोराश्च मूढाश्च" । चकार एको हेतौ द्वितीयः समुच्चये । यस्मादाकाशादिषु स्थूलेषु सत्त्वप्रधानतया केचिच्छान्ताः सुखाः, प्रकाशा लघवः, केचिद्रजःप्रधानतया घोराः दुःखाः अनवस्थिताः, केचित्तमःप्रधानतया मूढा विषण्णा गुरवः । ते ऽमी परस्परव्यावृत्त्या ऽनुभू-

---

களாகவும் मूढाश्च = மோஹவடிவங்களாகவும் (दृश्यन्ते = காணப்படுகின்றனவோ तस्मात् = அதனால்) विशेषाः = விசேஷங்களென்று स्मृताः = மஹருஷிகளால் சொல்லப்பட்டிருக்கின்றன.

(தா-ம்) ஸ்தூலபூதங்களுக்குக் காரணமான சப்தந்மாத்திரை முதலியவைக்கு நமது அநுபவத்திற்கு விஷயமாகக்கூடியதில்லை என்ற விசேஷம் கிடையாவென்பது तन्मात्र என்ற பதத்திலிருக்கின்ற मात्र = என்ற பதத்தால் குறிக்கப்படுகின்றது. ஆனது பற்றியே அவை "சூக்ஷமம்" என்றும், "அவிசேஷம்" என்றும் வியவஹரிக்கப்படுகின்றன. அந்த ஐந்து தந்மாத்திரைகளினின்றும் ஆகாசம் முதலிய ஐந்து பூதங்களுண்டாகின்றன. அவற்றிற்கு இவ்வைந்து தந்மாத்திரைகளும் எவ்விதம் காரணமாகின்றனவென்பதை 22வது காரிகாவியாக்யானத்தில் 125 வது பக்கத்திற் சொல்லி இருக்கிறோம். ஆகாசம்முதலிய ஸ்தூலபூதங்களுள் சிலவை சத்வகுணாதிக்யம் வாய்ந்திருப்பதால் சுகம், பிரகாசம், லாகவம் இவை வாய்ந்தனவாகவும், சிலவை ரஜோகுணாதிக்யம் வாய்ந்திருப்பதால் துக்கம், சாஞ்சல்யம் (அசைவு) இவையுள்ளனவாகவும், சிலவை தமோகுணாதிக்யம் வாய்ந்திருப்பதால் மோஹம், விஷாதம், கௌரவம் (கனம்) இவையுள்ளனவாகவுமிருக்கின்றன. மேற்சொல்லியப் பிரகாரமே நம்போன்றவர்களாலும் வெவ்வேறாக அநுபவிக்கப்படுகின்றபடியால் "விசேஷம் ஸ்தூலம்" எனப்படுகின்றன. தன்மாத்திரைகளோ இவ்விதம் நம

यमाना 'विशेषाः' इति च 'स्थूलाः' इति चोच्यन्ते । तन्मात्राणि स्वस्मदादिभिः परस्परव्यावृत्तानि नानुभूयन्ते, इत्यविशेषाः सूक्ष्मा इति चोच्यन्ते ॥ ३८ ॥

विशेषाणामवान्तरविशेषमाह—

**सूक्ष्मा मातापितृजाः सहप्रभूतैस्त्रिधा विशेषाः स्युः ।**
**सूक्ष्मास्तेषां नियता, मातापितृजा निवर्तन्ते ॥ ३९ ॥**

"सूक्ष्मा" इति । "त्रिधाविशेषाः स्युः" इति, तान् विशेषप्रकारानाह—"सूक्ष्माः" सूक्ष्मदेहाः परिकल्पिताः, "मातापितृजाः" षाट्कौशिकाः । तत्र मातृतो लोमलोहितमांसानि, पितृतस्तु स्नाय्वस्थिमज्जान

---

போன்றவர்களால் அனுபவிக்கப்படாததால் "அவிசேஷம்" என்றும் "ஸூக்ஷ்மம்" என்றும் சொல்லப்படுகின்றன. (௩-௮)

முப்பத்தோன்பதாவது சுலோகம்.

(அ-கை) "விசேஷம்" எனப்படும் ஸ்தூலபூதங்களின் உட்பிரிவை உபதேசிக்கிறார்.

(ப-ரை) विशेषाः=விசேஷம் எனப்படும் ஸ்தூல பூதங்கள் सूक्ष्माः =ஸூக்ஷ்மசரீரங்களென்றும், मातापितृजाः=தாய் தகப்பன் இவர்களிடமிருந்துண்டான ஆறு கோசமுள்ள ஸ்தூலசரீரம் என்றும், प्रभूतैस्सह =மஹா பூதங்களான வஸ்திரம் குடம் முதலியவைகளுடன் त्रिधा=மூன்று விதமாக स्युः=ஆகும். तेषाम्=அம்மூன்றுகளுள் सूक्ष्माः=ஸூக்ஷ்மசரீரங்கள் नियताः=மோக்ஷம் ஏற்படும் வரை இருக்கின்றன. मातापितृजाः=தாய், தகப்பன் இவர்களிடமிருந்துண்டான ஸ்தூல சரீரங்கள் निवर्तन्ते=அடிக்கடி நாசமடைகின்றன.

(தா-ம்.) விசேஷம் எனப்படும் ஸ்தூல பூதங்கள் மூவகைப்படும் 1. ஸூக்ஷ்மசரீரம். 2 மாதாபிதா இவர்களிடமிருந்துண்டாகின்ற ஸ்தூலதேஹம். 3 மலை, கல் முதலிய மஹாபூதங்கள் ஸ்தூல சரீரம் ரோமம், ரக்தம், மாம்ஸம், நரம்பு, எலும்பு, மஜ்ஜா (எலும்புக்குள்ளிருக்கும் ஓர்வகை தாது) என்ற ஆறு கோசமுள்ளது. இவ்வாறு கோசங்களுள், தாயிடமிருந்து உரோமம், ரக்தம்,

इति षट्कोशाः । प्रकृष्टानि महान्ति भूतानि "प्रभूतानि—तैः सह । सूक्ष्मं शरीरमेको विशेषः, मतापितृजो द्वितीयः, महाभूतानि तृतीयः ; महाभूतवर्गे च घटादीनां निवेश इति ॥

सूक्ष्ममातापितृजयोर्देहयोर्विशेषमाह—"सूक्ष्मास्तेषाम्" विशेषाणां मध्ये ये ते "नियताः" । "मातापितृजा निवर्तन्ते" इति, रसान्ता वा भस्मान्ता वा विडन्ता वेति ॥ ३९ ॥

सूक्ष्मशरीरं विभजते —

पूर्वोत्पन्नमसक्तं नियतं महदादिसूक्ष्मपर्यन्तम् ।
संसरति निरुपभोगं भावैरधिवासितं लिङ्गम् ॥ ४० ॥

---

மாம்ஸம் என்ற மூன்று கோசங்களும், தகப்பனிடமிருந்து நரம்பு, எலும்பு, மஜ்ஜா என்ற மூன்று கோசங்களுமுண்டாகின்றன. இம்மூன்று விசேஷங்களுள் ஸூக்ஷ்ம சரீரம் முக்தி ஏற்படும்வரை நித்தியமாக இருக்கும். ஸ்தூலசரீரமும் மஹாபூதங்களும் அடிக்கடி நாசமடைகின்றன. ஸ்தூல்சரீரம் மண்ணில் புதைக்கப்பட்டால் மண்ணாகவோ, நாய் நரிகளால் புஜிக்கப்பட்டால் மலமாகவோ, நெருப்பால் பொசுக்கப்பட்டால் சாம்பலாகவோ முடிவில் மாறிவிடுகின்றன. (எ-று.)

நாற்பதாவது சுலோகம்.

(அ-கை.) ஸூக்ஷ்ம சரீரத்தை நிரூபணஞ் செய்கிறார்—

(ப-ரை.) पूर्वोत्पन्नम् = சிருஷ்டியின் ஆரம்பத்தில் பிரகிருதியினால் ஒவ்வொரு புருஷனுக்கும் உண்டுபண்ணப்பட்டதும், असक्तम् = எங்கும் தடங்குதலற்றதும், नियतम् = ஆதிஸர்க்கம் (சிருஷ்டியின் ஆரம்பம்) முதல் மஹாப்பிரளயம் வரை அழிவற்றிருக்கின்றதும் महदादि सूक्ष्मपर्यन्तम् = மஹத்தத்துவம் முதல் ஐந்து தந்மாத்திரை முடிவாகவுள்ள தத்துவங்களின் சமூகமாயும் भावैः = தர்மம், அதர்மம், ஞானம், அக்ஞானம், வைராக்யம், அவைராக்யம், ஐச்வர்யம்,

'पूर्वोत्पन्नम्' इति । पूर्वोत्पन्नम्=प्रधानेनादिसर्गे प्रतिपुरुषमेकैकमुत्पादितम् । असक्तम्=अव्याहतम् शिलामप्यनुविशति । नियतम्=आ चादिसर्गादा च महाप्रलयादवतिष्ठते । महदादिसूक्ष्मपर्यन्तम्=महदहङ्कारैकादशेन्द्रियपञ्चतन्मात्रपर्यन्तम् । एषां समुदायः सूक्ष्मं शरीरम्, शान्तघोरमूढैरिन्द्रियैरन्विततत्वाद्विशेषः ॥

नन्वस्त्वेतदेव शरीरं भोगायतनं पुरुषस्य, कृतं दृश्यमानेन षाट्कौशिकेन शरीरेणेत्यत आह – "संसरति" इति । उपात्तमुपात्तं षाट्कौशिकं शरीरं जहाति हायं हायं चोपादत्ते—कस्मात् इति "निरुपभोगम्" यतः, षाट्कौशिकं शरीरं भोगायतनं विना सूक्ष्मं शरीरं निरुपभोगं यस्मात्, तस्मात्सूक्ष्मं शरीरं संसरति ॥

---

அனைச்வர்யம் இவைகளுடன் கூடியதும், लिङ्गम् =பிரளயகாலத்தில் பிரகிருதியில் மறைகின்றதுவுமான சூக்ஷ்மசரீரம் (स्थूलशरीरंविना= ஸ்தூலசரீரமில்லாவிடில்) निरुपभोगम् =சுகதுக்கானுபவமற்றதாயாகிவிடுமாதலால் संसरति=பழைய சரீரத்தை விட்டுப் புதிதுபுதிதாய் சரீரத்தை எடுத்துக்கொள்ளுகிறது.

(தா-ம்.) ஸூக்ஷ்ம சரீரமானது சிருஷ்டியின் ஆரம்பகாலத்தில் பிரகிருதியினால் ஒவ்வொரு புருஷனுக்கும் ஒவ்வொரு சரீரம் வீதம் உண்டுபண்ணப்பட்டது. அந்தச் சூக்ஷ்மசரீரம் எங்கும் தடங்குதலின்றிப்பிறவேசிக்கும் திறமை வாய்ந்தது. அத்தகைய சக்தியால் கற்பாறைக்குள்ளும் * பிரவேசிக்கின்றது. மேலும் இந்தலிங்க சரீரம் சிருஷ்டியின் ஆரம்பமுதல் மஹாப்பிரளயம் வரை அழிவற்றிருக்கக் கூடியது. மஹத், அஹங்காரம், 11 இந்திரியங்கள், 5 தந்மாத்திரைகள் ஆகிய 18 தத்துவங்களின் ஸமூஹம் லிங்கசரீரமெனப் படும். சுகம், துக்கம், மோஹம் இவையுள்ள இந்திரியங்களுடன் கூடியிருப்பதால் "விசேஷம்" என்றும் வழங்கப்படும். சங்கை—

---

* சில கற்பாறைகளின் நடுவில் "தேரை" எனப்படும் ஒருவகை ஜந்து இருப்பதை நாம் நேரில் பார்க்கிறோம். இதனால் லிங்கசரீரத்திற்கு எங்கும் தடங்குதலின்றிப் பிரவேச முண்டென்பது ஊஹிக்கத்தக்கது.

ननु धर्माधर्मनिमित्तः संसारः, न च सूक्ष्मशरीरस्यास्ति तद्योगः, तत्कथं संसरतीत्यत आह —"भावैरधिवासितम्" इति । धर्माधर्मज्ञानाज्ञान-वैराग्यावैराग्यैश्वर्यानैश्वर्याणि भावाः, तदन्विता बुद्धिः, तदन्वितञ्च सूक्ष्मं शरीरमिति तदपि भावैरधिवासितम्, यथा सुरभिचम्पककुसुमसम्पर्काद्वस्त्रं तदामोदवासितं भवति । तस्मात्=भावैरेवाधिवासितत्वात्संसरति ॥

कस्मात् पुनः प्रधानमिव महाप्रलये ऽपि तच्छरीरन्न तिष्ठतीत्यत आह —"लिङ्गम्" इति । लयं गच्छतीति लिङ्गम्—हेतुमत्त्वेन चास्य लिङ्गत्वमिति भावः ॥ ४० ॥

---

இந்தச் சூக்ஷ்மசரீரமே புருஷனுடைய சுகதுக்கானுபவத்திற்குச் சாதனமாக இருக்கட்டும்; யாவராலும் நேரில் பார்க்கப்படுகின்ற ஸ்தூலசரீரத்தால் யாதுபயன்? என்றால் உத்தரம்—பதிலளிக்கிறார் संसरतीति. ஸ்தூலசரீரமில்லாவிடில் சூக்ஷ்மசரீரம் மட்டும் சுகதுக்காதிகளை யடையமாட்டாதாகையால் ஸூக்ஷ்ம சரீரமானது முன் எடுத்த ஸ்தூல சரீரத்தை விட்டுவிட்டுப் புதிதுபுதிதாய் வேறு ஸ்தூலசரீரங்களை எடுத்துக்கொள்ளுகிறது. சங்கை—ஸம்ஸாரம் (ஸ்தூலசரீரத்தை எடுத்துக்கொள்ளுதல், அதை விட்டுவிடுதல்) என்பது தர்மம், அதர்மம் இவற்றைக் காரணமாயுடையது; சூக்ஷ்ம சரீரத்திற்கோ தர்மாதர்ம சம்பந்தமில்லை; ஆகவே ஸூக்ஷ்ம சரீரம் ஸம்ஸாரத்தையடைகின்றது என்று சொன்னது எங்ஙனம்? உத்தரம்—தர்மம், அதர்மம், ஞானம், அக்ஞானம், வைராக்யம், அவைராக்யம், ஐசுவரியம், அனைசுவரியம் இவை भाव எனப்படும். புத்தியானது மேற்சொல்லிய தர்மமுள்ளதாயிருக்கின்றது. சூக்ஷ்மசரீரமோ அந்தப் புத்தியையும் அடக்கிக்கொண்டிருக்கிறது. ஆனது பற்றி நல்ல வாஸனையுள்ள புஷ்பத்தின் சேர்க்கையால் வஸ்திரமும் வாஸனையுள்ளதாவதுபோல ஸூக்ஷ்மசரீரமும் தர்மாதர்மமுள்ளதாயாகின்றது. ஆகையால் தர்மாதர்மம் முதலியவைகளுடன் ஸூக்ஷ்மசரீரம் கூடி இருப்பதால் ஸம்ஸாரத்தை யடைகின்றது. சங்கை—பிரளயகாலத்திலும் மூலப்பிரகிருதியைப்போல் ஸூக்ஷ்ம சரீரமும் ஏன் அழிவற்றிருக்கக்கூடாது? என்றால், உத்தரம்—लिङ्गम् காரணத்தினிடமிருந்துண்டாகுதல் என்ற தர்மமிருப்பதால் மஹாப்பிரளயத்தில் பிரகிருதியில் லயமடைந்து விடுகிறது. (௪௰)

स्यादेतत्—बुद्धिरेव साहङ्कारेन्द्रिया कस्मान्न संसरति? कृतं सूक्ष्मशरीरेणाप्रामाणिकेनेत्यत आह—

**चित्रं यथाऽऽश्रयमृते स्थाण्वादिभ्यो विना यथाच्छाया।**
**तद्वद्विना विशेषैर्न तिष्ठति निराश्रयं लिङ्गम् ॥ ४१ ॥**

"चित्रम्" इति। लिङ्गनात् ज्ञापनात् बुद्ध्यादयो 'लिङ्गम्', तत् अनाश्रयन्न तिष्ठति। जन्ममरणान्तराले बुद्ध्यादयः प्रत्युत्पन्नशरीराश्रयाः—प्रत्युत्पन्नपञ्चतन्मात्रवत्त्वे सति बुद्ध्यादित्वात्—दृश्यमानशरीरवृत्तिबुद्ध्यादिवत्। "विना विशेषैः" इति, सूक्ष्मैः शरीरैरित्यर्थः। आगमश्चात्र भवति—

---

நாற்பத்தோன்றாவது சுலோகம்.

(அ-கை) சங்கை—அஹங்காரம், இந்திரியம் இவற்றுடன் கூடிய புத்தியேமட்டுமே ஏன் ஸம்ஸாரத்தையடையக்கூடாது? பிரத்யக்ஷத்திற்குப் புலப்படாத ஸூக்ஷ்மசரீரம் வேண்டுவதில்லை என்றால், உத்தரம்—பதிலளிக்கிறார்.

(ப-ரை) आश्रयमृते = சுவர் முதலிய ஆதாரமில்லாமல் चित्रम् = சித்திரம் यथा = எவ்விதம் (नतिष्ठति = இருப்பதில்லையோ) छाया = நிழல் स्थाण्वादिभ्योविना = கட்டை முதலியன இல்லாவிடில் यथा = எவ்விதம் (नतिष्ठति = இருப்பதில்லையோ) तद्वत् = அவ்விதமே लिङ्गम् = புருஷனை அனுமிப்பதற்குச் சாதனமான புத்திமுதலியவைகள் विशेषैर्विना = ஸூக்ஷ்மசரீரமில்லாமல் निराश्रयम् = ஆதாரமற்று नतिष्ठति = இருக்கமாட்டாது.

(தா-ம்.) நம்மால் பார்க்கப்படுகின்ற ஸ்தூல சரீரத்திலிருக்கின்ற புத்தி முதலியவைகள் எவ்விதம் உண்டான ஓர் சரீரத்தை யாச்ரயித்திருக்கின்றதோ அவ்விதமே மரணம் ஏற்பட்டு வேறு ஜன்மமேற்படுவதற்கு முன்னுள்ள நிலையிலும் அவைகள் உத்பத்தியையடைந்த ஓர் சரீரத்தை யாச்ரயித்திருக்க வேண்டும் என்று ஊஹிக்கிறோம். அதுவே ஸூக்ஷ்ம சரீரம் எனப்

"ततः सत्यवतः कायात् पाशबद्धं वशङ्गतम् ।

अङ्गुष्ठमात्रं पुरुषं निश्चकर्ष बलाद्यमः" । (महाभारत वनपर्व-अध्याय २९६,) इत्यङ्गुष्ठमात्रत्वेन सूक्ष्मशरीरत्वमुपलक्षयति । आत्मनो निष्कर्षासम्भवात् । सूक्ष्ममेव शरीरम् 'पुरुषः', तदपि पुरि स्थूलशरीरे शेते इति ॥ ४१ ॥

एवं सूक्ष्मशरीरास्तित्वमुपपाद्य यथा संसरति, येन हेतुना च—तदुभयमाह—

पुरुषार्थहेतुकमिदं निमित्तनैमित्तकप्रसङ्गेन ।
प्रकृतेर्विभुत्वयोगान्नटवद्व्यवतिष्ठते लिङ्गम् ॥ ४२ ॥

---

படும். சூக்ஷ்ம சரீரத்தைப்பற்றிச் சாஸ்திரமும் கூறுகிறது. அதாவது: மஹாபாரதத்தில் சாவித்திரி ஸத்யவான் இவர்களின் உபாக்யானத்தில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது.

"பிறகு யமதர்மராஜன் ஸத்தியவானுடைய சரீரத்தினின்றும் பாசத்தால் கட்டுப்பட்டவனும், தனக்கு வசமானவனும், கட்டைவிரல் பிரமாணமுள்ளவனுமான புருஷனை இழுத்தான்",

இங்கு கட்டைவிரல் அளவுள்ளது என்றதால் லிங்கசரீரம் குறிக்கப்படுகின்றது. நேரில் புருஷனை இழுப்பதென்பது சம்பவிக்காதென்பதே அதன் காரணம். ஸூக்ஷ்ம சரீரமே ஸ்தூலசரீரத்தில் வஸித்தல் என்ற நிமித்தத்தைக்கொண்டு புருஷ என்றும் சொல்லப்படுகின்றது. (எ-று.)

நாற்பத்திரண்டாவது சுலோகம்.

(அ-கை) இவ்விதம் சூக்ஷ்மசரீர முண்டென்பதை ஸ்தாபித்து அதுஎவ்விதம் ஜன்ம மரணங்களையடைகின்றது, அதற்குக் காரணம் என்ன? என்பதைச்சொல்லுகிறார்.

(ப-ரை) पुरुषार्थहेतुकम्=புருஷனுக்கு ஏற்படவேண்டிய சுகத்துக்கானுபவத்தால்தூண்டப்பட்ட इदं लिङ्गम्=இந்தலிங்கசரீரம் निमित्तनैमित्तिकप्रसङ्गेन=தர்மாதர்மம், அவற்றால் ஏற்பட்ட சரீரம் இவற்றின்

पुरुषार्थहेतुकम् इति । पुरुषार्थेन हेतुना प्रयुक्तम् । निमित्तम्=धर्माधर्मादि, नैमित्तिकम्=तेषुतेषु निकायेषु यथायथं पाट्कौशिकशरीरग्रहः, स हि धर्मादिनिमित्तप्रभवः । निमित्तञ्च नैमित्तिकञ्च—तत्र यः प्रसङ्गः=प्रसक्तिः तया नटवद्व्यवतिष्ठते लिङ्गम्=सूक्ष्मशरीरम् । यथा हि नटस्तां तां भूमिकां विधाय परशुरामो वा, अजातशत्रुर्वा, वत्सराजो वा भवति; एवन्तत्तत्स्थूलशरीरपरिग्रहणाद्देवो वा, मनुष्यो वा, पशुर्वा, वनस्पतिर्वा भवति सूक्ष्मं शरीरमित्यर्थः ॥

कुतस्त्यः पुनरस्येदृशो महिमेत्यत आह—प्रकृतेर्विभुत्वयोगात् इति । तथा च पुराणम्—"वैश्वरूप्यात् प्रधानस्य परिणामो ऽयमद्भुतः" इति ॥ ४२ ॥

"निमित्तनैमित्तिकप्रसङ्गेन" इत्युक्तम्—तत्र निमित्तनैमित्तिके विभजते—

मू०। सांसिद्धिकाश्च भावाः प्राकृतिका वैकृताश्च धर्माद्याः ।
दृष्टाः करणाश्रयिणः कार्याश्रयिणश्च कललाद्याः ॥ ४३ ॥

---

சம்பந்தத்தால் **नटवत्**=நாடகத்தில் வேஷம் தரித்துக் கொள்ளும் மனிதன் போல **व्यवतिष्ठते**=இருக்கின்றது. **प्रकृतेः**=பிரகிருதியினுடைய **विभुत्वयोगात्**=எங்கும் வியாபித்திருத்தல் என்ற சக்தி விசேஷத்தால் (**एतादृशमहिमासंजायते**=இத்தகைய மஹிமை யுண்டாகின்றது.)

(தா - ம்) நாடகத்தில் வேஷம் தரித்துக்கொள்ளுகிறவன் அந்தந்தச் சந்தர்ப்பத்திற்குத்தக்கபடி வேஷங்களைத் தரித்துக் கொண்டு பரசுராமனாகவோ, யுதிஷ்டிரனாகவோ, வத்ஸராஜனாகவோ எவ்விதம் ஆகின்றனோ, அவ்விதமே லிங்கசரீரமும் தர்மாதர்மங்களுக்குத்தக்கபடி அந்தந்த விதமான ஸ்தூல சரீரத்தை எடுத்துக் கொள்ளும் வாயிலாக தேவனாகவோ மனுஷ்யனாகவோ, பசுவாகவோ, மரமாகவோ ஆகின்றது. இவ்விதம் அந்தந்தவிதமான ஸ்தூலசரீரத்தை எடுத்துக்கொள்வதின் பயன்

"सांसिद्धिकाश्च" इति । "वैकृताः" नैमित्तिकाः, पुरुषस्य जातस्योत्तरकालदेवताराधनादिनोत्पन्नाः । "प्राकृतिकाः" स्वाभाविका भावाः सांसिद्धिकाः । तथा हि—सर्गादावादिविद्वानत्रभगवान् कपिलो महामुनिर्धर्मज्ञानवैराग्यैश्वर्यसम्पन्नः प्रादुर्बभूवेति स्मरन्ति । वैकृताश्च भावा असांसिद्धिकाः, ये उपायानुष्ठानेनोत्पन्नाः, यथा प्राचेतसप्रभृतीनां महर्षीणाम् । एवमधर्माज्ञानावैराग्यानैश्वर्याण्यपि ॥

---

யாது? எனின், புருஷார்த்தமே (புருஷனுக்கு ஏற்படவேண்டிய சுகதுக்கானுபவம், மோக்ஷம் இவைகளே) என்க. இந்தச் சூக்ஷ்மசரீரத்திற்குச் சிறிதும், பெரிதுமானஸ்தூல சரீரங்களில் பிரவேசிப்பதற்குரிய யோக்கியதை எதனால் ஏற்படுகின்றது என்றால், எங்கும் வியாபித்திருத்தல் என்ற சக்தி வாய்ந்த பிரகிருதியின் சம்பந்தத்தாலென்க. (எ-று)

(43) (அ - கை) சென்ற சுலோகத்தில் **निमित्तनैमित्तिकप्रसङ्गेन** (தர்மாதர்மம், அவற்றின் கார்யம் இவற்றின் சேர்க்கையால்) என்று சொல்லப்பட்டது. அந்த நிமித்த நைமித்திகங்களைப் பிரித்துக்காண்பிக்கிறார்—

(ப - ரை) **प्राकृतिकाः** = ஸ்வபாவசித்தமான **भावाः**=தர்மம், ஞானம் முதலியவைகள் **सांसिद्धिकाः**="ஸாம்ஸித்திகம்" எனப்படும். (**तेच**=அவைகளும்) **वैकृताः**=பிறந்த பிறகு தேவதாராதனம் முதலியவற்றாலுண்டான **धर्माद्याश्च**=தர்மம் முதலியவைகளும் **करणाश्रयिणः**=புத்தியை யாச்ரயித்தவைகளாக **दृष्टाः**=அறியப்பட்டிருக்கின்றன. **कललाद्याः**=சுக்கிலம் சோணிதம் இரண்டும் கலந்திருக்கும் நிலை முதலியவைகள் **कार्याश्रयिणश्च**=நைமித்திகமான சரீரத்தை யாச்ரயித்தவைகளாகவும் **दृष्टाः**=அறியப்பட்டிருக்கின்றன.

(தா - ம்) பிறக்கும் பொழுதே உண்டாகின்றதர்மஞான வைராக்யாதிகள் "ஸாம்ஸித்திக பாவங்கள்" எனப்படும். பிறந்த பிறகு தேவதாரார்தனத்தால் மேற் சொல்லியதர்மம் முதலியன

कार्यं शरीरं तदाश्रयिणः, तस्यावस्थाः, कललबुद्बुदमांसपेशीकरण्डाद्यङ्गप्रत्यङ्गव्यूहाः गर्भस्थस्य, ततो निर्गतस्य बालस्य बाल्यकौमारयौवनवार्धकानीति ॥ ४३ ॥

अवगतानि निमित्तनैमित्तिकानि । कतमस्य तु निमित्तस्य कतमन्नैमित्तिकमित्यत आह—

---

வுண்டாகுமாயின் அவை "வைகிருதம்" எனப்படும். இவ்விரண்டும் புத்தியை யாச்ரயித்திருக்கின்றன வென்று கண்டு கொள்ள வேண்டும். பிறவியிலேயே எவருக்கு தர்மம், ஞானம் வைராக்யம் முதலியன வுண்டாயிற்றென்றால்—ஆதிவித்துவாகுகிய கபிலமஹாமுனியானவர் சிருஷ்டியின் ஆரம்ப காலத்தில் தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவர்யம் இவற்றுடன் கூடியவராய் உண்டானுர் என்று புராணங்களில் கூறப்பட்டிருக்கிறது. வால்மீகி முதலிய மஹருஷிகளுக்கு தர்மஞானுதிகள் பிறவியேற் பட்ட பிறகு தேவதாராதனம் முதலிய உபாயானுஷ்டானத்தினுல் உண்டாயின. இவ்விதமே அதர்மம், அஞ்ஞானம், அவைராக்யம் அனைசுவர்யம் இவைகளினும், ஸாம்ஸித்திகம் என்றும், வைகிருதம் என்றும் இரண்டுவிதப் பிரிவினைகளுண்டு. कलल=புருஷவீர்யமான சுக்கிலம், ஸ்திரீயின் வீர்யமான சோணிதம் இரண்டும் ஒன்ருய் கலந்திருக்கும் நிலை. बुद्बुद=சுக்கிலம் கீழாகவும், சோணிதம் மேலாகவுமிருக்கும் நிலை. मांस=புருஷசரீர முண்டாவதற்குரிய நிலை पेशी=ஸ்திரீசரீர முண்டாவதற்குரிய நிலை. करण्ड=அலிசரீரமுண்டாவதற்குரிய நிலை. अङ्ग கைகால் முதலிய அங்கங்களுண்டாகும் நிலை. प्रत्यङ्ग=கைவிரல், கால்விரல் இவைமுதலியனவுண்டாகும் நிலை. மேற்சொல்லியவைகள் கர்ப்பத்திலிருக்கின்ற சரீரத்திற்கும்; பால்யம், கௌமாரம், யௌவனம் வார்த்தக்யம் முதலிய நிலைகள் கர்ப்பத்தினின்றும் வெளிவந்த சரீரத்திற்கும் ஏற்படுகின்றன. ஆகவே மேற் கூறிய தர்மங்கள் சரீரத்தையாச்ரயித்திருக்கின்றன.

(அ-கை) ஸ்தூல சரீரோத்பத்திக்குக் காரணமான தர்மாதர்மங்களும் அவற்ருல் உண்டாகின்ற சரீராதிகளும் இது

मू०। धर्मेण गमनमूर्ध्वं, गमनमधस्ताद्भवत्यधर्मेण ।
ज्ञानेन चापवर्गो, विपर्ययादिष्यते बन्धः ॥ ४४ ॥

"धर्मेण गमनमूर्ध्वम्" द्युप्रभृतिषु लोकेषु । "गमनमधस्ताद्भवत्यधर्मेण" सुतलादिषु लोकेषु । "ज्ञानेन चापवर्गः" । तावदेव प्रकृतिर्भोगमारभते न यावद्विवेकख्यातिं करोति ; अथ विवेकख्यातौ सत्यां कृतकृत्यतया विवेकख्यातिमन्तं पुरुषं प्रति निवर्तते । यथाहुः—

---

வரை சொல்லியதாலறியப்பட்டன. எந்த நிமித்தத்தால் எத்தகைய சரீரமுண்டாகின்றது என்பதை இனி உபதேசிக்கிறார்—

44. (ப - ரை) **धर्मेण**=அதிகமான தர்மத்தினால் **ऊर्ध्वम्**=சுவர்க்கம் முதலிய மேல்லோகங்களில் **गमनम्**=கதியும், **अधर्मेण**=அதிகமான பாபத்தினால் **अधस्तात्**=ஸுதலம்முதலிய கீழ்லோகங்களில் **गमनम्**=கதியும் (பிறவியும்) **भवति**=உண்டாகின்றது. **ज्ञानेनच**=பிரகிருதி புருஷன் இவர்களைப் பற்றிய விவேகக்ஞானத்தால் **अपवर्गः**=மோக்ஷமும், **विपर्ययात्**=அக்ஞானத்தால் **बन्धः**=ஸம்ஸாரமும் **इष्यते**=அங்கீகரிக்கப்படுகின்றது.

(தா - ம்) அதிகமாய் தர்மத்தையனுஷ்டித்தவன் சுவர்க்கம் முதலிய மேல்லோகங்களிலும், அதிகமாய் பாபத்தைச் செய்தவன் சுதலம் முதலிய கீழ்லோகங்களிலும் பிறவியையடைகிறான். பிரகிருதி, புருஷன் இவர்களைப் பற்றியதத்துவக் ஞானத்தால் மோக்ஷமுண்டாகின்றது. பிரகிருதியானது விவேகக்ஞானமுண்டாகும் வரையில்தான் போகத்தை யுண்டுபண்ணுகின்றது. விவேகக்ஞானம் ஏற்பட்டபிறகோவெனில்பிரகிருதியானது கிருதகிருத்யமாகையால் (தான் செய்ய வேண்டிய வேலையைச் செய்து முடித்துவிட்டபடியால்)விவேகக்ஞானமுள்ள புருஷனிடமிருந்து விலகிவிடுகின்றது. "விவேகக்ஞானம் ஏற்படும் வரையில்தான் பிரகிருதி யானது தனதுகார்யத்தைச் செய்கின்றது." என்று பெரியோர்களும் கூறி இருக்கின்றனர். பிருகிருதி புருஷன்

"विवेकख्यातिपर्यन्तं ज्ञेयं प्रकृतिचेष्टितम्" इति ॥

विपर्ययात् अतत्त्वज्ञानात् "इष्यते बन्धः" । स च त्रिविधः—प्राकृतिको वैकृतिको दाक्षिणकश्चेति । तत्र प्रकृतावात्मज्ञानाद्ये प्रकृतिमुपासते तेषां प्राकृतिको बन्धः, यः पुराणे प्रकृतिलयान् प्रत्युच्यते । "पूर्णं शतसहस्रं हि तिष्ठन्त्यव्यक्तचिन्तकाः" इति ॥

वैकारिको बन्धस्तेषां ये विकारानेव भूतेन्द्रियाहङ्कारबुद्धीः पुरुषधियोपासते, तान् प्रतीदमुच्यते—

"दश मन्वन्तराणीह तिष्ठन्तीन्द्रियचिन्तकाः ।
भौतिकास्तु शतं पूर्णं, सहस्रन्त्वाभिमानिकाः ॥
बौद्धा दश सहस्राणि तिष्ठन्ति विगतज्वराः ।" इति ॥

---

*இவர்களின் தத்துவத்தை யறியாததால் பந்தம் (ஸம்ஸாரம்) உண்டாகின்றது.*

*அந்தப்பந்தமானது பிராகிருதிகம் என்றும், வைகிருதிகம் என்றும், தாக்ஷிணகம் என்றும் மூன்றுவகைப்படும். பிரகிருதியையே எவர்கள் ஆத்மாவாகக்கருதி உபாஸிக்கின்றனரோ அவர்கள் பிராகிருதமான பந்தத்தை யடைகின்றனர். இதுவே "பூர்ணமான ஒரு லக்ஷ வருஷ காலம்வரை அழிவற்றிருக்கின்றனர்" என்றதால் புராணங்களில் கூறப்பட்டிருக்கிறது. எவர்கள் பிரகிருதியின் கார்யமான ஐந்துபூதங்கள், இந்திரியங்கள், அஹங்காரம், புத்தி இவைகளையே புருஷன் என்ற பாவனையுடன் உபாஸிக்கின்றனரோ அவர்களைப்பற்றி புராணங்களில் பின் வருமாறு கூறப்பட்டிருக்கிறது—*

*" இந்திரியங்களையே ஆத்மாவாக வுபாஸிக்கின்றவர்கள் 10 மன்வந்தரகாலம் அழிவற்றிருக்கின்றனர். பஞ்ச பூதங்களையே ஆத்மாவாக வுபாஸிக்கின்றவர்கள் 100 மன் வந்தரகா*

ते खल्वमी विदेहा येषां वैकृतिको बन्धः। इष्टापूर्तेन दाक्षिणकः। पुरुषतत्त्वानभिज्ञो हीष्टापूर्तकारी कामोपहतमना बध्यते इति ॥ ४४ ॥

मू०। वैराग्यात् प्रकृतिलयः, संसारो भवति राजसाद्रागात्।
ऐश्वर्यादविघातो, विपर्ययात्तद्विपर्यासः ॥ ४५ ॥

वैराग्यात् प्रकृतिलयः इति। पुरुषतत्त्वानभिज्ञस्य वैराग्यमात्रात् प्रकृतिलयः, प्रकृतिग्रहणेन प्रकृतिमहदहङ्कारभूतेन्द्रियाणि गृह्यन्ते, तेष्वात्मबुद्ध्योपास्यमानेषु लयः। कालान्तरेण च पुनराविर्भवति ॥ "संसारो भवति

---

லம் அழிவற்றிருக்கின்றனர். அஹங்காரத்தை ஆத்மாவாகக் கருதி வுபாஸிக்கின்றவர்கள் 1000 மன்வந்தரகாலம் அழிவற்றிருக்கின்றனர். புத்தியையே ஆத்மாவாகக் கருதி வுபாஸிக்கின்றவர்கள் 10000 மன்வந்தரகாலம் நாசமற்றிருக்கின்றனர்''

வைகிருதிக பந்தத்தை யடைந்தவர்கள் ஸ்தூல சரீரமற்றவர்களாயிருப்பர். யாகம், கோயில் கட்டுதல், குளம் வெட்டுதல் முதலியகார்மங்களைச் செய்பவன் தாக்ஷிணக பந்தத்தையடைகிறான். அதாவது: புருஷனின் தத்துவத்தையறியாமல் ஐஹிகாமுஷ்மிக சுகங்களில் மிக்க ஆவல்கொண்டு கர்மங்களையனுஷ்டிப்பவன் அந்தக் கர்மங்களின் பலன்களை யனுபவிப்பதற்காக பந்தத்தை (ஜன்ம மரணங்களை) யடைவான் என்று கருத்து(எ-று.)

45. (ப-ரை) वैराग्यात्=வைராக்கியத்தினால் प्रकृतिलयः=பிரகிருதியில் அடக்கமும், राजसात् = ரஜோ குணத்தின் காரியமான रागात्=காமனையினால் (ஆசையினால்) संसारः=ஜன்மம், மரணம் இவைகளும், ऐश्वर्यात्=ஐசுவரியம் என்ற புத்தி தர்மத்தின் சித்தியால் अविघातः=சங்கல்பத்திற்குத் தடையில்லாமையும், विपर्ययात्=அனைசுவரியத்தால் तद्विपर्यासः=சங்கல்பத்திற்குத் தடையும் भवति=உண்டாகின்றது.

(தா-ம்) புருஷனின் [illegible] சுவரூபத்தை யறியாமல் வைராக்ய மாத்திர [illegible] ந்தவனுக்கு பிரகிருதியில்

राजसाद्रागात्" इति । 'राजसात्' इत्यनेन रजसो दुःखहेतुता सूचिता ॥ "ऐश्वर्यादविघात" इति इच्छायाः । ईश्वरो हि यदेवेच्छति तदेव करोति । विपर्ययात्=अनैश्वर्यात्, तद्विपर्यासः=सर्वत्रेच्छाविघात इत्यर्थः ॥ ४५॥

बुद्धिधर्मान् धर्मादीनष्टौ भावान् समासव्यासाभ्यां मुमुक्षूणां हेयोपादेयान् दर्शयितुं प्रथमन्तावत् समासमाह—

मू०। एष प्रत्ययसर्गो विपर्ययाशक्तितुष्टिसिद्ध्याख्यः ।
गुणवैषम्यविमर्दात्, तस्य च भेदास्तु पञ्चाशत् ॥ ४६ ॥

---

அடக்கமுண்டாகின்றது. இங்குசொல்லிய **प्रकृति** என்ற பதத்தால் மூலகாரணமான பிரகிருதி, மஹத், அஹங்காரம், ஐந்து பூதங்கள், இந்திரியங்கள் இவைகளைக் கிரஹித்துக்கொள்ள வேண்டும். இவைகளையே ஆத்மாவாகக்கருதி உபாஸிப்பவன் அவ்வவற்றில் அடக்கத்தை யடைகிறான். குறிப்பிட்டகாலம் முடிந்தவுடன் மறுபடியும் ஜன்மத்தையடைகிறான். "ராஜஸமான காமனையினின்றும் ஸம்ஸாரமுண்டாகின்றது" என்று சொல்லியவிடத்தில் "ராஜஸ" என்ற பதத்தால் ரஜோகுணம் துக்கத்திற்குச் சாதனமா யிருப்பதால் அதன் கார்யமான ஜனன மரணமும் துக்கஹேதுவாக இருக்கின்றது என்பது தெரிவிக்கப்பட்டது. "ஐசுவரியம்" என்ற புத்தி தர்மம் சித்திபெற்றிருந்தால் எதைதைச் சங்கல்பிக்கின்றானோ அதது அவ்விதமே தடங்குதலின்றி சித்திபெறும். "ஐசுவரியம்" என்ற தர்மசித்தி இல்லாவிடில் சங்கல்பப்படி எதுவும் நடைபெறாது. (எ-று.)

46. (அ கை) மோக்ஷத்தையடைய விருப்பமுள்ளவர்களால் விட்டுவிடத்தக்கவைகளும், ஸ்வீகரிக்கத் தகுந்தவைகளுமான தர்மம் முதலிய 8 வித *பாவங்களை சேர்த்தும் பிரித்தும் காண்பிக்கவெண்ணினவராய் முதலில் சேர்த்துக்காண்பிக்கிறார்—

---

* 1 ஞானம், 2 அஞ்ஞானம், 3 வைராக்கியம், 4 அவைராக்கியம் 5 ஐசுவரியம், 6 அனைசுவரியம், 7 தர்மம். 8 அதர்மம் இவ்வெட்டும் **भाव** எனப்படும்.

"एषः" इति । प्रतीयते ऽनेनेति प्रत्ययः बुद्धिः, तस्य सर्गः । तत्र विपर्ययः अज्ञानमविद्या, सो ऽपि बुद्धिधर्म एव । "तुष्टिसिद्धी" अपि वक्ष्यमाणलक्षणे बुद्धिधर्मावेव । तत्र विपर्ययाशक्तितुष्टिषु यथायोगं सप्तानाञ्च धर्मादीनां ज्ञानवर्जमन्तर्भावः, सिद्धौ ज्ञानस्येति ॥ व्यासमाह—"तस्य च भेदास्तु पञ्चाशत्" इति । कस्मात् ? "गुणवैषम्यविमर्दात्" इति । गुणानां वैषम्यमेकैकस्याधिकबलता द्वयोर्द्वयोर्वा, एकैकस्य न्यूनबलता द्वयोर्द्वयोर्वा, ते च न्यूनाधिक्ये मन्दमध्याधिकयमात्रतया यथाकार्यमुन्नीयेते ।

---

(ப - ரை) एषः=இந்த प्रत्ययसर्गः புத்தியின் தர்மமான தர்மா தர்மம் முதலிய 8 வித பாவமும் विपर्ययाऽशक्तितुष्टिसिद्ध्याख्यः=விபர்யயம் (அவித்யை) அசக்தி துஷ்டி, ஸித்தி எனப்பெயருள்ள நான்குவித பிரிவினைகளுள் அடங்கியிருக்கின்றது. तस्यच=அந்தப்புத்தியின் காரியமான விபர்யயம் முதலியவற்றிற்கு गुणवैषम्यविमर्दात् गुण=சத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களின் वैषम्य= குறைவு, ஆதிக்யம் இவைகளால் ஏற்பட்ட उपमर्दात्=மற்ற குணங்களினடக்கத்தால் ஏற்பட்ட भेदास्तु=பிரிவினைகள் पञ्चाशत्=ஐம்பதுவிதமாக இருக்கின்றன.

(தா — ம்) விபர்யயம், அசக்தி, துஷ்டி, ஸித்தி இன்னான்கும் புத்தியின் தர்மங்கள். அவற்றுள் விபர்யயம் என்றால் அவித்யை அக்ஞானம். கரணங்களின் கெடுதியாலும் நேரிலும் ஏற்பட்ட சக்திக்குறைவு "அசக்தி" எனப்படும். துஷ்டி, சித்தி இவற்றின் சுவரூபம் பின்னர் சொல்லப்படும். விபர்யயம் அசக்தி, துஷ்டி இவற்றுள் தர்மம், அதர்மம், வைராக்கியம், அவைராக்கியம், ஐசுவரியம், அனைசுவரியம், அக்ஞானம் இவ்வேழு பாவங்களும் சம்பவிக்கிறபடி (பின்னர் கூறுகிறபடி) அடங்கிவிடுகின்றன. அதாவது—விபர்யயம் என்ற புத்திதர்மத்தில் அதர்மம், அக்ஞானம் இவ்விரண்டு பாவங்களும்; அசக்தி என்றபுத்தியின் தர்மத்தில் அவைராக்கியம், (வைராக்யத்தின் எதிர்முறை) அனைசுவர்யம் என்ற இவ்விரண்டு பாவங்

तदिदं गुणानां वैषम्यम्, तेनोपमर्दः=एकैकस्य न्यूनस्य द्वयोर्वा ऽभिभवः। तस्मात्तस्य भेदाः पञ्चाशदिति ॥ ४६ ॥

तानेव पञ्चाशद्भेदान् गणयति—

पञ्च विपर्ययभेदा भवन्त्यशक्तिश्च करणवैकल्यात्।
अष्टाविंशतिभेदा तुष्टिर्नवधा ऽष्टधा सिद्धिः ॥ ४७ ॥

"पञ्च" इति। अविद्याऽस्मितारागद्वेषाभिनिवेशा यथासंख्यं तमोमोहमहामोहतामिस्रान्धतामिस्रसञ्ज्ञकाः पञ्च विपर्ययविशेषाः, विपर्ययप्रभवा-

---

களும் துஷ்டி என்ற புத்திதர்மத்தில் வைராக்யம், தர்மம், ஐசுவரியம் இம்மூன்று பாவங்களும் அடங்கிவிடுகின்றன.

புத்தியினிடமுள்ள ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களுள் ஒவ்வொருகுணமோ இரண்டு இரண்டு குணமோ ஆதிக்யத்தை யடைவதாலோ குறைவை யடைவதாலோ ஏற்பட்ட மற்றக் குணங்களின் அடக்கத்தால் புத்தியின் தர்மமான விபர்யயம், அசக்தி, துஷ்டி, சித்தி இவற்றிற்கு 50 விதமான பிரிவினைகளுண்டாகின்றன. (எ-று.)

47.(அ - கை) அந்த ஐம்பது விதமான பேதங்கள் இன்னின்னவை என்று கணக்கிடுகிறார் —

(ப - ரை) **विपर्ययभेदाः**=விபர்யயம் என்ற புத்தி தர்மத்தின் பிரிவினைகள் **पञ्च**=ஐந்துவிதமாக **भवन्ति**=ஆகின்றன. **करणवैकल्यात्**=கரணங்களின் சீர் கேட்டால் ஏற்பட்ட **अशक्तिश्च**=அசக்தி என்ற புத்தி தர்மம் **अष्टाविंशतिभेदा**=28 பிரிவினையுள்ளதாக இருக்கின்றது. **तुष्टिः**=துஷ்டி என்ற புத்திதர்மம் **नवधा**=9 விதமாக இருக்கின்றது. **सिद्धिः**=ஸித்தி என்ற புத்தி தர்மம் **अष्टधा**=8 விதமாக இருக்கின்றது.

(தா - ம்) விபர்யயம் என்பது **अविद्या, अस्मिता, राग, द्वेष, अभिनिवेश** என்று ஐந்துவிதமான பிரிவினைகளையுடையது.* இவை

---

* இவற்றின் சுவரூபம் 48-வது சுலோகத்தில் சொல்லப்படும்.

नामप्यस्मितादीनां विपर्ययस्वभावत्वात् । यद्वा—यदविद्यया विपर्ययेणावधार्यते वस्तु, अस्मितादयस्तत्स्वभावाः सन्तस्तदभिनिविशन्ते । अत एव पञ्चपर्वाऽविद्येत्याह भगवान् वार्षगण्यः ॥ ४७ ॥

संप्रति पञ्चानां विपर्ययभेदानामवान्तरभेदमाह—

**भेदस्तमसोऽष्टविधो मोहस्य च, दशविधो महामोहः ।**
**तामिस्रोऽष्टादशधा, तथा भवत्यन्धतामिस्रः ॥ ४८ ॥**

---

*களே தமஸ், மோஹம், மஹாமோஹம், தாமிஸ்ரம், அந்த தாமிஸ்ரம் என்றும் முறையே சொல்லப்படும். அஸ்மிதை முதலியவைகள் விபர்யயம் என்ற புத்தியின் தர்மத்தாலுண்டாகின்றனவாயினும் விபர்யயத்தின் ஸ்வபாவமுள்ளனவர்க இருப்பதால் விபர்யயத்தின் பிரிவினையாகின்றன என்று அறியவேண்டும். அல்லது அவித்யையினால் எந்த வஸ்து எவ்விதம் மாறுபட்டதாக நிர்ணயிக்கப்படுகின்றதோ அஸ்மிதை முதலியவைகளும் அதே அவித்யையின் சுவபாவமுள்ளனவாகக்கொண்டு அவ்வஸ்துவை அவ்விதமே கிரஹிக்கின்றனவாதலால் விபர்யயத்தின் பிரிவினையாகின்றனவென்று அறியவேண்டும். இவ்விதமே வார்ஷகண்யர் என்ற சாங்கியாசிரியரும் "அவித்யை ஐந்து விதமான பிரிவுள்ளது" என்று கூறி இருக்கிறார் (எ—று.)*

48.(அ - கை) இனி ஐந்துவிதமான விபர்யயத்தின் பேதங்களுக்கும் உட்பிரிவினைகளை யுபதேசிக்கிறார்—

(ப - ரை) **तमसः**=அவித்யையினுடையவும் **मोहस्यच**=அஸ்மிதையினுடையவும் **भेदः**=பிரிவினையானது **अष्टविधः**=எட்டுவிதமாக இருக்கின்றது. **महामोहः**=ராகமானது **दशविधः**=10 விதமாக இருக்கின்றது. **तामिस्रः**=த்வேஷம் **अष्टादशधा**=18 விதமாக இருக்கின்றது. **अन्धतामिस्रः**=அபினிவேசம் **तथा**=18 விதமாகவே இருக்கின்றது.

(தா - ம்) அவ்யக்தம் (பிரகிருதி) மஹத், அஹங்காரம் ஐந்து தந்மாத்திரைகள் இவை உண்மையில் ஆத்மவஸ்துவாக

"भेदः" इति । भेदस्तमसो ऽविद्याया अष्टविधः । अष्टसु अव्यक्तमहदहङ्कारपञ्चतन्मात्रेषु अनात्मसु आत्मबुद्धिरविद्या तमः, अष्टविधविषयत्वात्तस्याष्टविधत्वम् ॥ "मोहस्य च" इति, अत्राप्यष्टविधो भेदश्चकारेणानुषज्यते । देवा ह्यष्टविधमैश्वर्यमासाद्य अमृतत्वाभिमानिनो ऽणिमादिकमात्मीयं शाश्वतिकमभिमन्यन्ते, सेयमस्मिता मोहो ऽष्टविधैश्वर्यविषयत्वादष्टविधः ॥ दशविधो महामोहः" इति । शब्दादिषु पञ्चसु दिव्यादिव्यतया दशविधविषयेषु रञ्जनीयेषु रागः=आसक्तिः महामोहः, स च दशविधविषयत्वाद्दशविधः ॥

"तामिस्रो" द्वेषः, "अष्टादशधा"। शब्दादयो दश विषया रञ्जनीयाः स्वरूपतः, ऐश्वर्यन्त्वणिमादिकन्न स्वरूपतो रञ्जनीयम्—किं तु रञ्जनी-

---

இல்லாவிடினும் அவற்றை ஆத்மாவாகக்கருதுவது "அவித்யை" என்றும், "தமஸ்" என்றும் சொல்லப்படும். அவித்யையானது 8 வஸ்துவை விஷயமா யுடையதாக இருப்பதால் அவித்யை 8 விதமாக ஆகின்றதென்று சொல்லப்பட்டது. மோஹம் எனப்படும் அஸ்மிதையும் 8 விதமாக ஆகின்றது. எவ்விதமெனின்:—தேவர்கள் 8 விதமான ஐசுவர்யத்தையடைந்து தமக்கு நாசமில்லை என்று அபிமானங்கொண்டு அணிமா முதலிய ஐசுவர்யத்தைத் தங்களுக்கே சொந்தமென்றும், ஸ்திரமாயிருக்கக்கூடியவையென்றும் நினைக்கின்றனர். இந்த அஸ்மிதை எனப்படும் மோஹம் 8 விதமான ஐசுவர்யத்தை விஷயமாயுடையதாக இருப்பதால் 8 விதமாகின்றது. திவ்யம், அதிவ்யம் என்று சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவைகள் இருவகைப்படும். ஆகவே 10 விதமாக ஆன சப்தம் முதலியவற்றில் ராகம் எனப்படும் பற்றுதல் "மஹா மோஹம்" எனப்படும். அந்தப் பற்றுதல் 10 விதமான சப்தம் முதலியவற்றைப்பற்றி இருப்பதால் 10 விதமாக ஆகின்றது. த்வேஷம் 18 விதம். எவ்விதமெனின்—சப்தம் முதலிய 10 விஷயங்கள் நேரில் அனுபவிக்கத் தகுந்தவைகள். அணிமாமுதலிய ஐசுவர்யமோவெனில் நேரில் அனுபவிக்கத் தகுந்தவையல்ல

यशब्दाद्युपायाः । ते च शब्दादय उपस्थिताः परस्परेणोपहन्यमानास्तदु-पायाश्चाणिमादयः स्वरूपेणैव कोपनीया भवन्तीति शब्दादिभिर्दशभिः सहा-णिमाद्यष्टकमष्टादशधेति, तद्विषयो द्वेषस्तामिस्रः, अष्टादशविषयत्वादष्टादश-धेति ॥

"तथा भवत्यन्धतामिस्रः" । अभिनिवेशोऽन्धतामिस्रः । तथेत्य-नेनाष्टादशधेत्यनुषज्यते । देवाः खल्वणिमादिकमष्टविधमैश्वर्यमासाद्य दश शब्दादीन् विषयान् भुञ्जानाः—'शब्दादयो भोग्यास्तदुपायाश्चाणिमादयो ऽस्माकमसुरादिभिर्मोपघानिषत' इति—बिभ्यति । तदिदं भयमभिनिवेशो

---

பின்னேயோவெனில் அனுபவிக்கத் தகுந்த சப்தம் முதலிய விஷயங்களுக்குச் சாதனமாகின்றன. அந்தச் சப்தம் முதலியவைகளும், அவற்றிற்குச் சாதனமான அணிமா முதலிய ஐசுவர்யங்களும் ஒருங்கு சேர்ந்து வரும்பொழுது ஒன்றினால் மற்றொன்று பாதிக்கப்படுவதால் அவைகளில் துவேஷமுண்டாகின்றது. அதாவது நல்ல ரூபத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது திவ்யமான வீணைசப்த மேற்படுமானால் அதில் சுரோத்திரேந்திரியம் வாயிலாக மனது பிரவேசிக்க ஆரம்பிக்கின்றது. அதனால் ரூபானுபவத்திற்கு தடை ஏற்படுவதால் ரூபானுபவத்தில் மிக்க விருப்பமுள்ளவனுக்கு சப்தம் என்ற விஷயத்தில் துவேஷமுண்டாகின்றது. இவ்விதமே மற்ற விஷயங்களிலுமறியவேண்டும். ஆகவே சப்தம் முதலிய விஷயங்கள் 10, அணிமா முதலிய ஐசுவரியம் 8; ஆக இப்பதினெட்டு விஷயங்களைப்பற்றியும் துவேஷ மேற்படுவதால் துவேஷம் 18 விதமாக ஆகின்றது.

அபிநிவேசம் என்றால்பயம். அதுவே 'அந்த தாமிஸ்ரம்' எனப்படும். அபினிவேசமும் 18விதமாக இருக்கின்றது. எவ்விதமெனின், தேவர்கள் 8விதமான அணிமா முதலிய ஐசுவரியங்களை யடைந்து சப்தம்முதலிய 10 விதமான விஷயங்களை அனுபவித்து வருங்காலையில் அனுபவிக்கின்ற சப்தம் முதலியவைகளும், அதன் உபாயங்களான அணிமாமுதலிய ஐசுவர்யங்களும் அசுரர்

ऽन्धतामिस्रः, अष्टादशविषयत्वादष्टादशधेति ॥ सो ऽयं पञ्चविधो विकल्पो विपर्ययो ऽवान्तरभेदाद्द्वाषष्टिरिति ॥ ४८ ॥

तदेवं पञ्चविपर्ययभेदानुक्त्वा ऽष्टविंशतिभेदामशक्तिमाह—

एकादशेन्द्रियवधाः सह बुद्धिवधैरशक्तिरुद्दिष्टा ।
सप्तदश वधा बुद्धेर्विपर्ययात्तुष्टिसिद्धीनाम् ॥ ४९ ॥

"एकादश"—इति । "एकादशेन्द्रियवधाः"—

बाधिर्यं कुष्ठिता ऽन्धत्वं जडता ऽजिघ्रता तथा ।
मूकता कौण्यपङ्गुत्वे क्लैब्योदावर्तमन्दताः ॥

---

களால் நாசமாக்கப்படாம லிருக்கவேண்டும் என்று பயப்படுகின்றனர். தேவர்களுக்கு 18 விதமான விஷயங்களைப்பற்றிப் பய மேற்படுவதால் அந்ததாமிஸ்ரம் 18 விதமாக ஆகின்றது. ஆகவே ஐந்துவிதமான விகல்பமே அவாந்தர பேதங்களை யனுஸரித்துக் கணக்குச் செய்யுங்கால் 62 விதமாக இருப்பதாய் ஏற்பட்டது. (எ-று)

49. (அ - கை) இவ்விதம் ஐந்து விதமான விபர்யயத்தின் பிரிவினைகளை யுபதேசித்து 18 விதமான அசக்தியின் உட்பிரிவினைகளை யுபதேசிக்கிறார்—

(ப - ரை) **बुद्धिवधैः**=புத்திக்கே நேரில் சம்பவிக்கின்ற அசக்திகளுடன் **सह**=சேர்ந்ததான **इन्द्रियवधाः**=இந்திரியங்களுக்கு நேருகின்ற அசக்திகள் **एकादश**=பதினொன்றும் (**अष्टाविंशतिभेदा**=(28 விதமான) **अशक्तिः**=அசக்தியாக **उद्दिष्टा**=முன் சொல்லப்பட்டது. **तुष्टिसिद्धीनाम्-तुष्टि**=9 விதமானதுஷ்டியினுடையவும், **सिद्धीनाम्**=8 விதமான ஸித்தியினுடையவும் **विपर्ययात्**=இல்லாமையால் **बुद्धेः**=புத்திக்கு **सप्तदश**=பதினேழு **वधाः**=அசக்திகள் (**भवन्ति**=ஏற்படுகின்றன.)

(தா-ம்) "இந்திரியங்கள் 11" என்று முன்னர் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விந்திரியங்களுள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்

यथासंख्यं श्रोत्रादीनामिन्द्रियाणां वधाः। एतावत्येव तु तद्धेतुका बुद्धेर शक्तिः स्वव्यापारे भवति। तथा चैकादशहेतुकत्वात् एकादशधा बुद्धेर शक्तिरुच्यते। हेतुहेतुमतोरभेदविवक्षया च सामानाधिकरण्यम्॥ तदेवमिन्द्रियवधद्वारेण बुद्धेरशक्तिमुक्त्वा स्वरूपतो ऽशक्तीराह—"सह बुद्धिवधै" इति। कति बुद्धेः स्वरूपतो वधा इत्यत आह "सप्तदश वधा बुद्धेः"। कुतः "विपर्ययात्तुष्टिसिद्धीनाम्।" तुष्टयो नवधेति तद्विपर्ययाःतन्निरूपणान्नवध भवन्ति, एवं सिद्धयो ऽष्टाविति तद्विपर्ययाः तन्निरूपणादष्टौ भवन्तीति॥४९।

---

வொரு அசக்தி விதம் மொத்தமாய் இந்திரியங்களுக்கு நேரு கின்ற அசக்தி 11 விதமாக ஆகின்றது. 'காது' என்ற இந்திரியத்திற்கு செவிடும், 'த்வக்' என்ற இந்திரியத்திற்கு குஷ்ட ரோகமும், 'கண்' என்ற இந்திரியத்திற்கு பொட்டையும் 'ரஸனை' என்ற இந்திரியத்திற்கு தடிப்பும், (ஜாட்யமும்) கிராணம்' என்ற இந்திரியத்திற்கு வாஸனையை யறியும் சக்திக்குறைவும், 'வாக்' என்ற இந்திரியத்திற்கு சப்தத்தையுண்டு பண்ணக் கூடாமையும், 'கை, கால்' இவ்விந்திரியங்களுக்கு நொண்டியாயிருத்தலும், அந்த நிவிருத்தி செய்யவதற்குரிய யோக்யதையற்றிருத்தல் 'உபஸ்தம்' என்ற இந்திரியத்திற்கும், உதாவர்த்தம் என்ற ரோகம் குதம் என்ற இந்திரியத்திற்கும், தவறுதல் மனத்திற்கும் அசக்தியாகும். இவ்விதம் இந்திரியங்களுக்கு அசக்தி ஏற்படுவதால்புத்திக்கும் அந்தந்த இந்திரியங்கள்வாயிலாகநடக்க வேண்டிய வியாபாரத்தில் அசக்தி ஏற்படுகின்றது. ஆகவே இந்திரியங்கள் 11விதமாக இருப்பதால் அவைவாயிலாக புத்திக்கு ஏற்படுகின்ற அசக்தியும் 11விதமாக ஏற்பட்டது. ஹேதுமத் எனப்படும் புத்தியையும், ஹேது எனப்படும் இந்திரிகளையும் ஒன்றாக கருதி **एकादशेन्द्रियवधाः** என்று சொல்லப்பட்டது. இவ்விதம் இந்திரியங்களுக்குண்டாகின்ற அசக்திவாயிலாக புத்திக்குண்டாகிற அசக்தியை உபதேசித்து நேரிலேயே புத்திக்கு உண்டாகின்ற அசக்தியை இனி உபதேசிக்கிறார்—**सहबुद्धिवधैः**। துஷ்டியின் ) விதம் இன்னின்னதென்றும், சித்தியின் 8 விதமின்னின்னதென்றும் பின் வரும் சுலோகத்தால் நிரூபிக்கப்ப...

तुष्टिर्नवधेत्युक्तम्, ताः परिगणयति—

आध्यात्मिकाश्चतस्रः प्रकृत्युपादानकालभाग्याख्याः ।
बाह्या विषयोपरमात् पञ्च च,—नव तुष्टयो ऽभिमताः ॥ ५० ॥

"आध्यात्मिकाः" इति । आध्यामिकाः—'प्रकृतिव्यतिरिक्त आत्मा ऽस्ति' इति प्रतिपद्य, ततो ऽस्य श्रवणमननादिना विवेकसाक्षात्काराय त्वसदुपदेशतुष्टो यो न प्रयतते तस्याध्यात्मिकाश्चतस्रस्तुष्टयो भवन्ति, प्रकृति-

---

ன்றது. அத்தகைய துஷ்டி சித்திகளின் இல்லாமையே புத்தியினிடமுள்ள 17 விதமான அசக்திகளாக ஆகின்றன.

50. (அகை) துஷ்டி 9 விதமென்று முன்னர் சொல்லப்பட்டது. அவற்றைக் கணக்கிடுகிறார்—

(ப - ரை) **प्रकृत्युपादानकालभाग्याख्याः** = பிரகிருதி உபாதானம், காலம், பாக்யம் எனப் பெயரினவும், **आध्यात्मिकाः**=பிரகிருதியினும் வேறுபட்ட ஆத்மாவைப் பற்றியதுமான **चतस्रः**= நான்கு (**तुष्टयः**ஸந்தோஷங்களும்) **विषयो परमात्**=சப்தம், ஸ்பர்சம் முதலிய விஷயங்களில் வைராக்யத்தால் **बाह्याः**=ஆத்ம வஸ்துவாக இல்லாத பிரகிருதி மஹத் அஹங்காரம் இவைகளைப் பற்றிய **पञ्च**=ஐந்துவிதமான (**तुष्टयश्च**=ஸந்தோஷங்களும் **आहृत्य**= சேர்ந்து) **नवतुष्टयः**=9 விதமான துஷ்டிகளாக **अभिमताः**=கருதப்பட்டன.

(தா-ம்) பிரகிருதியினும் வேறுபட்டவனாய் ஆத்மா ஒருவனிருக்கிறான் என்று அறிந்தும், அவ்வாத்மாவைப் பற்றிய விவேக சாக்ஷாத்கார மேற்படுவதற்குச் சாதனமான சிரவணம், மனனம், நிதித்யாஸனம் என்ற உபாயங்களில், அசாதுக்களின் உபதேசத்தால் திருப்தியை யடைந்து எவன் முயற்சிப்பதில்லையோ அவனுக்கு நான்குவிதமான துஷ்டிகளுண்டாகின்றன. அந்தத்துஷ்டிகள் பிரகிருதியினும் வேறு பட்டவனாய் ஆத்மா ஒருவனிருக்கிறான் என்ற அறிவை முன்னிட்டிருப்

व्यतिरिक्तमात्मानमधिकृत्य यस्मात् ताःतुष्टयस्तस्मादाध्यात्मिकाः। कास्ता इत्यत—आह "प्रकृत्युपादानकालभाग्याख्याः", प्रकृत्यादिराख्या यासां तास्तथोक्ताः ॥

तत्र प्रकृत्याख्या तुष्टिर्यथा कस्यचिदुपदेशे—'विवेकसाक्षात्कारो हि प्रकृतिपरिणामभेदः, तञ्च प्रकृतिरेव करोतीति कृतन्तद्ध्यानाभ्यासेन, तस्मादेवमेवास्तु वत्स',—इति सेयमुपदेष्टव्यस्य तुष्टिः प्रकृतौ, सा तुष्टिः प्रकृत्याख्या "अंभ" उच्यते ॥

यातु,—"प्राकृत्यपि विवेकख्यातिर्न सा प्रकृतिमात्राद्भवति, मा भूत्सर्वस्य सर्वदा, तन्मात्रस्य सर्वान् प्रत्यविशेषात्, प्रव्रज्यायास्तु सा भवति

---

பதால் "ஆத்யாத்மிகம்" எனப்படும். அந்த நான்கு விதமான ஸந்தோஷங்கள் இன்னின்னவை என்று குறிப்பிடுகிறார்—**प्रकृत्युपादानकालभाग्याख्याः इति।**

நான்கு விதமான துஷ்டிகளுள் பிரகிருதி துஷ்டியை முதலில் நிரூபிப்பாம்—"விவேகஸாக்ஷாத்காரம் என்பது பிரகிருதியின் பரிணமமாக இருக்கின்றது. அதைப் பிரகிருதியே தானகச் செய்துவிடுமாதலால் பிரகிருதி புருஷபேதத்தைப் பற்றித் தியானப்பியாசஞ் செய்தலவச்யம். ஆகையால் நீ எப்பொழுதுமிருக்கிறபடியே இருந்துவா" என்று ஒருவன் உபதேசித்தான் என்று வைத்துக்கொள்வோம். இதைக் கேட்டவுடன் கேட்கின்ற மனிதனுக்கு பிரகிருதியினிடம் சந்தோஷமுண்டாகிறது. இந்தச் சந்தோஷம் "பிரகிருதி" என்றும், **अंभः** என்றும் சொல்லப்படும்.

இரண்டாவதான உபாதான துஷ்டியை நிரூபிப்பாம்—"விவேகஸாக்ஷாத்காரம் என்பது பிரகிருதியின் விகாரமாக இருந்தபோதிலும் அது பிரகிருதியால்மட்டு முண்டாவதில்லை. அவ்வித முண்டாகுமாயின் பிரகிருதியானது எல்லோருக்கும் ஒரே விதமாக இருப்பதால் எல்லோருக்கும் விவேக சாக்ஷாத்கார முண்டாகவேண்டி நேரிடும். அவ்வித முண்டாவதாகவோ நாமனுப்வத்தில் காணவில்லை. ஆதலால் ஸன்யாஸாச்ரமத்தை

तस्मात् प्रव्रज्यामुपाददीथाः, कृतन्ते ध्यानाभ्यासेनायुष्मन्'—इति उपदेशे या तुष्टिः सा उपादानाख्या 'सलिलम्' उच्यते ॥

या तु,—'प्रव्रज्या ऽपि न सद्यो निर्वाणदेति सैव कालपरिपाकमपेक्ष्य सिद्धिन्ते विधास्यति, अलमुत्तप्ततया तव'—इति उपदेशे या तुष्टिः सा कालाख्या 'ओघ' उच्यते ॥

या तु,—'न प्रकृतेर्न कालान्नाप्युपादानाद्विवेकख्यातिः, अपि तु भाग्यादेव । अत एव मदालसापत्यान्यतिबालाति मातुरुपदेशादेव विवेक-

---

ஸ்வீகரிப்பதா லுண்டாகின்றதென்று அங்கீகரிக்க வேண்டும். ஆகவே நீயும் ஸன்யாஸாச்ரமத்தை எடுத்துக்கொள், தியானப்யாஸம் வியர்த்தம்" என்று ஒருவன் உபதேசித்தான் என்று எடுத்துக் கொள்வோம். இவ்வுபதேசத்தைக் கேட்டவுடன் ஒரு விதமான ஸந்தோஷமுண்டாகின்றது. இந்தச் சந்தோஷம் உபாதானதுஷ்டி என்றும் सलिलम् என்றும் சொல்லப்படும்.

மூன்றாவதான துஷ்டியை நிரூபிப்பாம்—"ஸன்யாஸமும் உடனே மோக்ஷத்தைக் கொடுத்துவிடாமல் மோக்ஷபுருஷார்த்தமுண்டாவதற்குரிய காலத்தை எதிர்பார்க்கின்றது. ஆகையால் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிரு. வீணில் சிரமப்படாதே" என்று ஒருவன் உபதேசித்தான் என்று வைத்துக்கொள்வோம். இதைக்கேட்டவுடன் உண்டாகின்ற ஸந்தோஷம் "காலதுஷ்டி" என்றும், ओघ: என்றும் சொல்லப்படும்.

நான்காவதான துஷ்டியை நிரூபணஞ் செய்வாம்—"பிரகிருதியினாலோ, காலத்தினாலோ, ஸன்யாஸாச்ரமத்தை எடுத்துக்கொள்ளுதலாலோ, விவேகசாக்ஷாத்காரமுண்டாவதில்லை. பின்னையோவெனின் பாக்யத்தால் தான் உண்டாகின்றது. ஆனது பற்றியே மதம் மானம் முதலியவற்றால் நிறைந்த சிறு குழந்தைகளும் தாயினுடைய உபதேசத்தால் மட்டுமே விவேக சாக்ஷாத்காரத்தை படைந்து முக்தியையடைந்தன என்று புராணங்களிற்

ख्यातिमन्ति मुक्तानि बभूवुः, तस्माद्भाग्यमेव हेतुर्नान्यत्–इति उपदेशे या तुष्टिः सा भाग्याख्या 'वृष्टिः' उच्यते ॥

बाह्या दर्शयति—"बाह्याः" तुष्टयः "विषयोपरमात्, पञ्च"। या खल्वनात्मनः प्रकृतिमहदहङ्कारादीनात्मत्वेनाभिमन्यमानस्य वैराग्ये सति तुष्टयस्ता बाह्याः, आत्मज्ञानाभावे सत्यनात्मानमधिकृत्य प्रवृत्तेरिति। ताश्च वैराग्ये सति तुष्टय इति वैराग्यहेतुपञ्चत्वाद्वैराग्याण्यपि पञ्च, तत्पञ्चत्वात् तुष्टयः पञ्चेति। उपरम्यतेऽनेनेत्युपरमो वैराग्यम्, विषयादुपरमो विषयोपरमः। विषयाः भोग्याः शब्दादयः पञ्च, उपरमा अपि पञ्च ॥ तथा

---

சொல்லியதும் பொருந்துகின்றது. ஆகையால் மோக்ஷமுண்டாவதற்குப் பாக்கியந்தான் காரணமேயல்லாது மற்றது எதுவும் காரணமல்ல" என்ற உபதேசத்தைக் கேட்டவுடன் உண்டாகின்ற சந்தோஷத்திற்கு "பாக்கியதுஷ்டி" என்றும் **वृष्टिः** என்றும் பெயர்.

இனி பாஹ்யமான துஷ்டிகளை நிரூபணஞ் செய்வாம்—ஆத்மாவாக இல்லாத பிரகிருதி, மஹத், அஹங்காரம் முதலியவற்றையே ஆத்மவஸ்துவாகக்கருதுகிறவனுக்கு வெளியிலுள்ள வஸ்துக்களிடம் வைராக்கியமுண்டாகி அதனாலுண்டாகின்ற சந்தோஷம் **बाह्यतुष्टिः** எனப்படும். உண்மையான ஆத்மக்ஞானமுண்டாகாமல் ஆத்மாவாக இல்லாத வஸ்துக்களை ஆத்மாவாகக் கருதிக்கொண்டிருக்கும் சந்தர்ப்பத்திலுண்டாவதால் இந்தத் துஷ்டியானது பாஹ்யதுஷ்டி என்றழைக்கப்படுகின்றது. அந்தத் துஷ்டி (சந்தோஷம்) வைராக்யத்தாலுண்டாவதாலும், வைராக்கியத்தின் காரணம் ஐந்துவிதமாக இருப்பதுபற்றி வைராக்யமும் ஐந்து விதமாக ஆவதாலும், துஷ்டி என்பதும் ஐந்துவிதமாக ஆகின்றது. இதை பின் வருமாறு நிரூபணஞ்செய்வாம்—ஒரு வஸ்துவைச் சம்பாதித்தல், ரக்ஷித்தல், குறைவுபடுதல், அனுபவித்தல், ஹிம்ஸை என ஐந்துவிதமான தோஷங்களைக் கவனித்தல் என்ற

हि—अर्जन-रक्षण-क्षय-भोग-हिंसा-दोषदर्शनहेतुजन्मानः पञ्चोपरमा भवन्ति। तथा हि—सेवादयो धनार्जनोपायाः, ते च सेवकादीन् दुःखाकुर्वन्ति,

"दृप्यद्दुरीश्वरद्वाःस्थदण्डचण्डार्धचन्द्रजाम् ।
वेदनां भावयन् प्राज्ञः कः सेवास्वनुषज्जते" ॥

एवमन्ये ऽप्यर्जनोपायाः दुःखा इति विषयोपरमे या तुष्टिः सैषा 'पारम्' उच्यते ॥ तथाऽर्जितन्धनं राजैकागारिकाग्निजलौघादिभ्यो विनङ्क्ष्यतीति तद्रक्षणे महद्दुःखमिति भावयतो विषयोपरमे या तुष्टिः सा द्वितीया 'सुपारम्'

---

காரணத்தால் உண்டாகின்ற வைராக்யமும் ஐந்துவிதமாக ஆகின்றது.

(1)பிறருக்கு ஊழியஞ் செய்தல் முதலியன பொருளைச் சம்பாதிப்பதற்குச்சாதனங்கள். அவ்வுபாயங்கள் அவ்வவற்றைச்செய்பவர்களை மிகவும் துக்கப்படுத்துகின்றன. "கொழுப்பையடைந்த அயோக்யனை பிரபுவினுடைய வாயிற்படியிலிருக்கின்ற வேலையாட்கள் கழுத்தில் கையைக்கொடுத்து தள்ளுதலால் ஏற்பட்ட துக்கத்தை அனுசந்திந்த எந்தமேதாவியான மனுஷ்யன் ஸேவை செய்வதற்கு முன் வருவான்" என்று பெரியோர்களும் இகழ்ந்திருக்கின்றனர். பொருளைச் சம்பாதிப்பதற்கு வேண்டிய மற்றுமுள்ள எல்லா உபாயங்களும் துக்கத்தைத் தருகின்றனவாக இருக்கின்றபடியால் விஷயங்களினின்றும் வைராக்யமுண்டாகி அதனாலுண்டாகும் சந்தோஷம் பாஹ்யதுஷ்டிகளுள் முதலாவது துஷ்டியாகும். இதுவே "பாரம்" என்றும் வியவஹரிக்கப்படும் (2) சிரமப்பட்டு சம்பாதிக்கப்பட்ட பொருளும் அரசன், திருடன், நெருப்பு, ஜலப்பிரவாஹம் இவை முதலியவற்றால் நாசத்தையடையக்கூடுமாதலால் அவற்றினின்றும் ரக்ஷிப்பதில் அதிகக் கஷ்டமுண்டாகுமென்று நினைப்பவனுக்கு அதனால் விஷயத்தில் வைராக்யமுண்டாவதால் ஏற்படுகின்ற சந்தோஷம் பாஹ்ய துஷ்டிகளுள் இரண்டாவது துஷ்டியாகும். இதுவே "ஸுபாரம்" எனப்படும். (3) அதிகமான சிரமத்தால்

उच्यते ॥ तथा महता ऽऽयासेनार्जितन्धनं भुज्यमानं क्षीयते इति तत्प्रक्षय
म्भावयतो विषयोपरमे या तुष्टिः सा तृतीया 'पारापारम्' उच्यते ॥ ए
शब्दादिभोगाभ्यासात् प्रवर्धन्ते कामाः, ते च विषयाप्राप्तौ कामि
दुःखाकुर्वन्तीति भोगदोषं भावयतो विषयोपरमे या तुष्टिः सा चतुर्थी 'अनु
त्तमाम्भ' उच्यते । एवन्नानुपहत्य भूतानि विषयोपभोगः सम्भवतीति हिंसा
दोषदर्शनाद्विषयोपरमे या तुष्टिः सा पञ्चमी 'उत्तमाम्भ' उच्यते
एवमाध्यात्मिकीभिश्चतसृभिः बाह्याभिश्च पञ्चभिः 'नव तुष्टयो ऽभि
मताः' ॥ ५० ॥

गौणमुख्यभेदैः सिद्धीराह—

---

சம்பாதிக்கப்பட்ட பொருளும் அனுபவித்தால் குறைந்துவி கின்றது என்று நினைப்பவனுக்கு அதனால் விஷயங்களில் வைரா க்கியமுண்டாகி அதனால் ஏற்படுகின்ற சந்தோஷம் மூன்றாவது பாஹ்ய துஷ்டியாகும். இதுவே "பாராபாரம்" எனப்படும் (4) சப்தம் முதலிய விஷயங்களை அடிக்கடி அனுபவிப்பதால் அவற்றில் ஆசை விருத்தியடைகின்றது. அவ்வாசையே விரு ம்பிய பொருள் கிடைக்காவிடில் விரும்பியவனை துக்கத்திற்கு ளாக்குகின்றது. என்பதுபற்றி அனுபவிப்பதிலும் தோஷத்தை யறிந்தவனுக்கு வைராக்கியமுண்டாகி அதனால் ஏற்படுகின்ற சந்தோஷம் நான்காவது பாஹ்ய துஷ்டியாகும். இதுவே "அனுத்தமாம்பஸ்" எனப்படும். (5) பிராணிகளை ஹிம்ஸிக் காமல் விஷயானுபவம் ஏற்படமாட்டாதென்று பிராணிஹிம்சை என்ற தோஷத்தைக் கவனித்தவனுக்கு அதனால் வைராக்கிய முண்டாவதாலேற்படுகின்ற சந்தோஷம் ஐந்தாவது பாஹ்ய துஷ்டியாகும். இதுவே "உத்தமாம்பஸ்" எனப்படும். இவ் விதம் ஆத்யாத்மிக துஷ்டி நாலும், பாஹ்யதுஷ்டி ஐந்தும் சேர்ந்து துஷ்டி 9 விதமாகின்றது. (எ-று)

51. (அ - கை) கௌணம், முக்கியம் என்று இரண்டுவிதப் பிரிவினையுள்ள 8 விதமான ஸித்திகளை உபதேசிக்கிறார்—

**ऊहः शब्दोऽध्ययनं दुःखविघातास्त्रयः सुहृत्प्राप्तिः ।**
**दानं च सिद्धयोऽष्टौ, सिद्धेः पूर्वोऽङ्कुशस्त्रिविधः ॥ ५१ ॥**

"ऊह" इति । विहन्यमानस्य दुःखस्य त्रित्वात्तद्विघातास्त्रय इतीमा मुख्यास्तिस्रः सिद्धयः, तदुपायतयात्वितरा गौण्यः पञ्च सिद्धयः, ता अपि हेतुहेतुमत्तया व्यवस्थिताः । तत्राद्या ऽध्ययनलक्षणा सिद्धिर्हेतुरेव । मुख्यास्तु सिद्धयो हेतुमत्य एव । मध्यमास्तु हेतुहेतुमत्यः ॥ विधिवद्गुरुमुखादध्यात्मविद्यानामक्षरस्वरूपग्रहणमध्ययनम् प्रथमासिद्धिः "तारम्" उच्यते ॥ तत्का-

---

(ப - ரை) **अध्ययनम्**=ஆசார்யரின் முகத்தினின்றும் ஆத்ம தத்துவத்தை உபதேசிக்கின்ற சாஸ்திரங்களின் ஆனுபூர்வியை மட்டும் கிரஹித்தல் **शब्दः**=அந்தச் சாஸ்திரங்களின் அர்த்தத்தையறிதல் **ऊहः**=அறியபட்ட சாஸ்திரார்த்தத்தை யுக்திகளால் நிர்ணயித்தல் **दुःखविघाताः**=ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்று மூன்றுவிதமான துக்கங்களை நாசமாக்குகின்ற **त्रयः**= பிரமோதம், முதிதம், மோதமானம் என்ற மூன்றுவிதமான சித்திகள் **सुहृत्प्राप्तिः**=குரு சிஷ்யன், தன்னுடன் படிப்பவன் இவர்களுடன் கலந்து விஷய விசாரஞ்செய்தல் **दानम्**=விவேகக் ஞானத்தைச் சுத்திசெய்து கொள்ளுதல் (**इति**=என்று) **सिद्धयः**=சித்திகள்) **अष्टौ**=எட்டுவிதமாக ஆகின்றன.

(தா - ம்) தத்துவ ஸாக்ஷாத்காரத்தினால் விலக்கப்படுகின்ற துக்கம் மூன்றுவிதமாக இருப்பதால் அவற்றை விலக்குகின்ற சாதனமும் மூன்றுவிதமாக ஆகின்றதுபற்றி முக்கிய சித்தி மூன்று என்று சொல்லப்படுகிறது. மற்ற ஐந்துவிதமான சித்திகளும் முக்கிய சித்தியுண்டாவதற்குச் சாதனமாகின்றபடியால் "கௌணசித்திகள்" எனப்படும். இவ்வெட்டு சித்திகளுள் சிலவை எப்பொழுதும் வேறு சித்தியின் கார்யமாகவும், சிலவை எப்பொழுதும் வேறு சித்திக்குக்காரணமாகவுமாகின்றன. அத்யயனம் எனப்படும் முதல் சித்தியானது எப்பொழுதும் வேறு சித்திக்குக்காரணமாகவே இருக்கக்கூடியது. ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் எனப்படும் மூன்றுவித துக்க நிவிருத்திக்குச் சாதனமாகின்ற பிரமோதம், முதிதம், மோத

र्थम्—शब्दः; 'शब्दः' इति पदम् शब्दजनितमर्थज्ञानमुपलक्षयति, कार्ये कारणोपचारात्। पाठार्थाभ्यान्तदिदन्द्विधा श्रवणम्॥ ऊहः तर्कः, आगमाविरोधिन्यायेनागमार्थपरीक्षणम्। परीक्षणञ्च संशयपूर्वपक्षनिराकरणेनोत्तरपक्षव्यवस्थापनम्। तदिदम्मननमाचक्षत आगमिनः। सा तृतीया सिद्धिस्तारतरमुच्यते॥ "सुहृत्प्राप्तिः" न्यायेन स्वयम्परीक्षितमप्यर्थं न श्रद्धत्ते, न यावद्गुरुशिष्यसब्रह्मचारिभिः सह संवाद्यते। अतः सुहृदां गुरुशिष्य सब्रह्मचारिणां संवादकानां प्राप्तिः सुहृत्प्राप्तिः सा सिद्धिश्चतुर्थी 'रम्यक' उच्यते॥

---

மானம் எனப்படும் சித்திகள் எப்பொழுதும் மற்றச் சித்தியின் கார்யமாகவே இருக்கக்கூடியன. நடுவிலிருக்கின்ற மீதமுள்ள சித்திகள் மற்றச் சித்தியின் கார்யமாகவும், காரணமாகவுமாகின்றன.

(1) முறைப்படி ஆத்மதத்துவத்தை யுபதேசிக்கின்ற சாஸ்திரங்களின் அக்ஷரஸ்வரூபத்தை மாத்திரம் கிரஹித்தல் **अध्ययनम्** எனப்படும். அதுவே 8 வித சித்திகளுள் முதல் சித்தியாகும். அதற்கு "தாரம்" என்றும் மற்றுமோர் பெயருண்டு. (2) அத்யயனத்தின் கார்யமான "சப்தம்" என்பது இரண்டாவது சித்தி. "சப்த" என்றபதம் சப்தத்தாலுண்டுபண்ணைப்பட்ட அர்த்தஞானத்தை "கார்யத்தைக் காரணசப்தத்தால் வியவஹரிப்பது" என்றமுறையை யனுஸரித்துக் குறிக்கின்றது. ஆகவே ஆத்மதத்துவ சாஸ்திரங்களின் அர்த்தமறிதல் இரண்டாவது சித்தி என்று ஏற்பட்டது. இதுவே **सुतारम्** என்றும் சொல்லப்படும். (3) "ஊஹம்" என்பது மூன்றாவது சித்தி அதாவது: சாஸ்திரத்திற்கு விருத்தமில்லாத யுக்திகளால் சாஸ்திரார்த்தங்களைப் பரீக்ஷித்தல். அதாவது: சந்தேகம், பூர்வபக்ஷம் இவைகளை விலக்கிக்கொண்டு சித்தாந்தத்தை நிர்ணயித்தல். இதையே சாஸ்திரக்காரர்கள் **मननम्** என்கின்றனர். இது மூன்றாவது சித்தியாகும். இது ஸாங்கியாசாரியர்களால் **तारतरम्** எனப்படும். (5) **सुहृत्प्राप्तिः** என்பது ஐந்தாவது சித்தி. அதாவது: சாஸ்திரத்திற்கு விருத்தமில்லாத யுக்திகளைக்கொண்டு ஓர் சமர்

"दानं" च शुद्धिर्विवेकज्ञानस्य, 'दैप् शोधने' इत्यस्माद्धातोर्दानपदव्युत्पत्तेः। यथाह भगवान् पतञ्जलिः—
"विवेकख्यातिरविप्लवा दुःखत्रयस्य हानोपायः" इति (योगसूत्र २।२६)। 'अविप्लवः' शुद्धिः, सा च सवासनसंशयविपर्यासानां परिहारेण विवेकसाक्षात्कारस्य स्वच्छप्रवाहे अवस्थापनम्। सा च न विना ऽऽदरनैरन्तर्यदीर्घकालसेविताभ्यासपरिपाकाद्भवतीति दानेन (विवेकख्यात्याः कार्येण) सो ऽपि

---

சாரம் நிர்ணயிக்கப்பட்டபோதிலும் குரு சிஷ்யன், தம்முடன் அத்யயனஞ் செய்பவன் இவர்களுடன் கலந்து விசாரிக்காவிடில் நம்பிக்கையேற்படமாட்டாதாகையால் குரு, சிஷ்யன், தம்முடன் அத்யயனஞ் செய்பவன் இவர்களாகிற ஸுஹ்ருத்துக்களை யடைந்து விசாரஞ் செய்தல் நான்காவது சித்தியாகும். இதையே சாங்கியாசாரியர்கள் **रम्यक** என்கின்றனர் (5) **दानम्** என்பது ஐந்தாவது ஸித்தி. சுத்திசெய்தல் என்ற பொருளையுடைய **दैप्** என்ற தாது (பகுதி)வினின்றும் **दान** என்ற பதம் ஏற்படுவதால் **दानम्** என்ற பதத்திற்கு சுத்தி என்று பொருள். இவ்விதமே பதஞ்ஜலியும் **विवेकख्यातिरविप्लवा दुःखत्रयस्य हानोपायः*** என்ற சூத்திரத்தால் சொல்லி இருக்கிறார். இந்த யோக சூத்திரத்திலுள்ள **अविप्लव** என்ற பதத்திற்கு சுத்தி என்று பொருள். அதாவது சந்தேஹம், மித்தியாக் ஞானம் இவைகளை அவற்றின் வாஸனையுடன் விலக்கி விவேக ஸாக்ஷாத் காரத்தை ஸ்வச்சப் பிரவாஹ முள்ளதாய்ச் செய்து கொள்ளுதல். அத்தகைய சுத்தியானது விவேக சாக்ஷாத்காரத்தைப் பெறுவதில் மிக்க ஆதரவு (ஊக்கம்) இடைவிடா முயற்சி, நீடித்தகாலம் அதன் உபாயங்களான சிரவணம், மனனம் முதலியவற்றைச்செய்தல், அப்யாஸத்தின் முதிர்ச்சி இவற்றாலுண்டாவதால் **दान** என்ற பதம் மேற் சொல்லிய ஆதரவு முதலியவற்றையும் கிரஹிக்கின்றது. இது ஐந்தாவது சித்தி. இதை சாங்கியாசிரியர்கள் **सदामुदितम्** என்கின்றனர்.

---

* இதன்பொருள்—சுத்தமான விவேக சாக்ஷாத்காரமானது ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், அதிதைவிகம் எனப்படும் மூன்றுவித துக்கங்களைப் போக்கிக் கொள்வதற்குச் சாதனமாகின்றது.

संगृहीतः। सेयं पञ्चमी सिद्धिस्सदामुदितमुच्यते ॥ तिस्रश्च मुख्याः सिद्धयः प्रमोदमुदितमोदमाना, इत्यष्टौ सिद्धयः ॥

अन्ये व्याचक्षते—विनोपदेशादिना प्राग्भवीयाभ्यासवशात्तत्त्वस्य स्वयमूहनं यत् सा सिद्धिरूहः। यस्य सांख्यशास्त्रपाठमन्यदीयमाकर्ण्य तत्त्वज्ञानमुत्पद्यते सासिद्धिः शब्दः, शब्दपाठादनन्तरंभावात्। यस्य शिष्याचार्यसम्बन्धेन सांख्यशास्त्रं ग्रन्थतोऽर्थतश्चाधीत्य ज्ञानमुत्पद्यते सा ऽध्ययन-

---

முக்கியமான சித்திகள் மூன்று. அவையாவன 1 பிரமோதம். 2 முதிதம். 3 மோதமானம். ஆகசித்திகள் 8 விதமாக ஆகின்றன.*

மற்றவர்கள் இந்தச் சுலோகத்திற்கு வேறுவிதமாக வியாக்யானஞ் செய்கின்றனர். இந்த ஜன்மத்தில் குருபதேசம் முதலிய சாதனமின்றியே முன்ஜன்மத்தின் அப்யாஸவசத்தால் தத்துவார்த்தத்தைத் தானுகவே ஊஹித்தல் என்பது "ஊஹம்" எனப்படும் சித்தியாகும். எவனுக்கு மற்றவன் சாங்கிய சாஸ்திராப்யாஸஞ் செய்து வருங்கால் அதைக் கேட்பதால் மட்டுமே தத்துவக்ஞான முண்டாகின்றதோ அது "சப்தம்" எனப்படும் சித்தியாகும். சப்தத்தைக்கேட்ட வுடனுண்டாவதால் அந்தச் சித்திக்கு "சப்தம்" எனப் பெயர் ஏற்பட்டது. எவனுக்கு ஆசார்யனிடமிருந்து சாங்கிய சாஸ்திரத்தின் ஆனுபூர்வியையும் அர்த்தத்தையும் அத்யயனஞ் செய்வதால் தத்வக்ஞான முண்டாகின்றதோ அது அத்யயனத்தாலுண்டாவதால் "அத்யயனம்" எனப்படும் சித்தியாகும். எவனுக்கு தத்துவக்ஞானத்தை யடைந்த சுஹிருத்தின் சேர்க்கையால் தத்துவக்ஞான முண்டாகின்றதோ அது "சுஹிருத்பிராப்தி" எனப்படும் சித்தியாகும். பொருள் முதலியவற்றைக்

---

*"ஆத்யாத்மிகம்" என்ற துக்கத்தை விலக்குகின்ற விவேகக்ஞானம் பிரமோதம் என்றும், ஆதி பௌதிக துக்கத்தை விலக்குகின்றவிவேகக்ஞானம் முதிதம் என்றும், ஆதிதைவிக துக்கத்தை விலக்குகின்ற விவேகக்ஞானம் மோத மானம் என்றும் சொல்லப்படும் என்று சாங்கிய சங்கிரஹம் என்ற கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

हेतुका सिद्धिरध्ययनम्। सुहृत्प्राप्तिरिति। यस्याधिगततत्त्वं सुहृदं प्राप्य ज्ञानमुत्पद्यते सा ज्ञानलक्षणा सिद्धिस्तस्य सुहृत्प्राप्तिः। दानञ्च सिद्धिहेतुः, धनादिदानेनाराधितो ज्ञानी ज्ञानं प्रयच्छति। अस्य च युक्तायुक्तत्वे सूरिभिरेवावगन्तव्ये इति, कृतं परदोषोद्भावनेन नःसिद्धान्तमात्रव्याख्यानप्रवृत्तानामिति ॥

सिद्धितुष्टिविपर्ययेण अशक्तिर्बुद्धिवधस्सप्तदशधा द्रष्टव्यः। अत्र प्रत्ययसर्गे सिद्धिरुपादेयेति प्रसिद्धमेव। तन्निवारणहेतवस्तु विपर्ययाशक्तितुष्टयो हेया इत्याह—"सिद्धेः पूर्वोऽङ्कुशस्त्रिविधः" इति। "पूर्व" इति। विपर्ययाशक्तितुष्टीः परामृशति। ताः सिद्धिकरिणीनामङ्कुशो, निवारकत्वात्। अतः सिद्धिपरिपन्थित्वात् विपर्ययाशक्तितुष्टयो हेया इत्यर्थः ॥ ५१ ॥

---

*கொடுத்து ஞானியைத் திருப்தி செய்தால் ஞானோபதேசம் செய்வானுகையால் அதனுல் ஏற்படும் ஞானம் 'தானம்' எனப் படும் சித்தியாகும். என்பதாம்.*

*இந்த வியாக்யானத்தின் குண தோஷங்களை மேதாவிகள் அறிவார்களாதலால் பிறரிடமுள்ள தோஷத்தை வெளியிட நாம் பிரவிருத்திக்கவில்லை. நாம் சித்தாந்த மாத்திரத்தையே வெளி யிட ஆரம்பித்திருக்கிறோம்.*

*மேற் சொல்லிய 8 விதமான சித்தி, 9 விதமான துஷ்டி இவற்றின் இல்லாமையே 17 விதமான புத்தியின் அசக்தியா கும். புத்தியின் சிருஷ்டியான விபர்யயம், அசக்தி, துஷ்டி இவைகள் விலக்கத்தக்கவைகள் என்று சொல்லுகிறார்—***सिद्धेः पूर्वोऽङ्कुशस्त्रिविधः*** । ***पूर्व*** *என்றபதம் விபர்யயம், அசக்தி, துஷ்டி இவைகளைக் குறிக்கின்றது. அவைகள் சித்தியாகிற யானைக்கு கண்டாக் கோடாலிபோ லாகின்றன. ஏனென்ருல் இவைகள் சித்தி உண்டாகாமலிருக்கும்படித் தடை செய்கின்றன. விபர் யயம், அசக்தி, துஷ்டி இவைகள் சித்திக்கு விருத்தமாயிருப்ப தால் அவைகளை விட்டுவிட முயற்சிக்கவேண்டும் (எ-று)*

स्यादेतत्—पुरुषार्थप्रयुक्ता सृष्टिः स च पुरुषार्थः प्रत्ययसर्गाद्वा तन्मात्रसर्गाद्वा सिध्यतीति, कृतमुभयसर्गेणेत्यत आह—

**नविनाभावैर्लिङ्गं नविना लिङ्गेन भवनिर्वृत्तिः ।**
**लिङ्गाख्यो भावाख्यः तस्माद्द्विविधः प्रवर्तते सर्गः ॥ ५२ ॥**

"न विना" इति । "लिङ्गम्" इति तन्मात्रसर्गमुपलक्षयति, "भावैः" इति च प्रत्ययसर्गम् । एतदुक्तंभवति—तन्मात्रसर्गस्य पुरुषार्थसाधनत्वं स्वरूपञ्च न प्रत्ययसर्गाद्विना भवति, एवं प्रत्ययसर्गस्य स्वरूपं पुरुषा-

---

(அ - கை) சிருஷ்டியானது புருஷார்த்த முண்டாவதற்காக ஏற்படுகின்றது என்று முன்னர் சொல்லப்பட்டது. அந்தப் புருஷார்த்தமானது புத்தியின் கார்யமான விபர்யயம் முதலியவற்றால் மட்டுமோ, தந்மாத்திரைகளின் சிருஷ்டியான பஞ்சபூதங்களால் மட்டுமோ ஏற்படலாமாதலால் இரண்டுவிதமான சிருஷ்டி வேண்டியதில்லை என்று சந்தேஹித்துப் பதிலளிக்கிறார்—

(ப - ரை) **भावैर्विना** = புத்தியின் சிருஷ்டியான விபர்யயம் முதலியவை இல்லாமல் **लिङ्गम्**= தந்மாத்திரையின் சிருஷ்டியானது **न(संभवति**=சம்பவிக்காது) **लिङ्गेन**= தந்மாத்திரையின் சிருஷ்டியான பூதங்களில்லாமல் **भावनिर्वृत्तिः**= புத்தியின் சிருஷ்டியானது **न (संभवति**=சம்பவிக்காது.) **तस्मात्**=ஆகையால் **लिङ्गाख्यः** = லிங்கம் என்று பெயருள்ளதும், **भावाख्यः**=பாவம் என்று பெயருள்ளதுமான **द्विविधः**=இரண்டுவிதமான **सर्गः**=சிருஷ்டி **प्रवर्तते**=ஏற்படுகின்றது.

(தா - ம்) **लिङ्गम्**=என்றபதம் தந்மாத்திரைகளால் ஏற்படுகின்ற பஞ்சபூதங்களின் சிருஷ்டியைக் குறிக்கின்றது. **भाव** என்ற பதம் புத்தியின் சிருஷ்டியான விபர்யயம் முதலியவற்றைக் குறிக்கின்றது. இந்தச்சுலோகத்தின் கருத்து பின்வருமாறு—தந்மாத்திர சிருஷ்டியான ஐந்து பூதங்களுக்குப் புருஷார்த்த ஸாதனமாயிருக்குகையும், சுவரூபமும் புத்தியின் கார்ய

र्थसाधनत्वञ्च न तन्मात्रसर्गादृते, इत्युभयथा सर्गप्रवृत्तिः । भोगः पुरुषार्थो न भोग्यान् शब्दादीन् भोगायतनं शरीरद्वयञ्च अन्तरेण सम्भवतीत्युपपन्नस्तन्मात्रसर्गः । एवं स एव भोगो भोगसाधनानीन्द्रियाण्यन्तः करणानि चान्तरेण न सम्भवति । न च तानि धर्मादीन् भावान् विना संभवन्ति । न चापवर्ग हेतुर्विवेकख्यातिरुभयसर्गं विना, इत्युपपन्न उभयविधः सर्गः ॥

---

மான விபர்யயம் முதலியன இல்லாமல் சம்பவிக்காது. இவ் விதமே புத்தியின் சிருஷ்டியான விபர்யயம் முதலியனவற்றின் சுவரூபமும், அவற்றிற்குப் புருஷார்த்த ஸாதனமாயிருக்குகை யும் தந்மாத்திர ஸிருஷ்டியான ஐந்து பூதங்களின்று சம்பவிக் காது. ஆனதுபற்றி இரண்டுவிதமான சிருஷ்டியும் ஆவச்யக மானதாக ஏற்பட்டது. அதாவது: புருஷார்த்தம் எனப்படும் போகமானது அனுபவிக்கத் தகுந்த சப்தம் முதலிய விஷயங் கள், போகத்திற்குச்சாதனமான சூக்ஷ்ம ஸ்தூல சரீரங்கள் இவை யில்லாமல் சம்பவிக்காதாகையால் தந்மாத்திரையினுல் உண்டாகின்ற சிருஷ்டி யுக்திக்குப் பொருந்தியதாக ஏற்பட்டது. இவ்விதமே புருஷார்த்த மெனப்படும் போகமோ போகத்திற் குச் சாதனமான இந்திரியங்கள், அந்தக்கரணங்கள் இவை யின்றி சம்பவிக்காது. போகசாதனமான இந்திரியம் முத லியவைகளோ தர்மம், அதர்மம் முதலிய பாவங்களில்லாமல் ஏற்படமாட்டாது. மோக்ஷஸாதனமான விவேக க்ஞானமும் புத்தியினுல் ஏற்படுகின்ற சிருஷ்டி, தந்மாத்திரையினுல் ஏற் படுகின்ற சிருஷ்டி, இவ்விரண்டுமில்லாமல் ஏற்படமாட்டாது. ஆதலால் இரண்டுவிதமான சிருஷ்டியும் யுக்திக்குப் பொருந்திய தாக ஏற்பட்டது.

சங்கை—புத்தியின் சிருஷ்டி ஏற்பட்டால்தான் தந்மாத்திர சிருஷ்டி சம்பவிக்கின்றது; தந்மாத்திர சிருஷ்டி ஏற்பட்டால் தான் புத்தியின் சிருஷ்டி சம்பவிக்கின்றது என்று அங்கீகரித் தால் "அன்யோன்யாச்ரயம்" என்ற தோஷம் வராதோ வெனின் ?

अनादित्वाच्च बीजाङ्कुरवन्नान्योन्याश्रयदोषमावहति। कल्पादावपि प्राचीनकल्पोत्पन्नभावलिङ्गसंस्कारवशाद्भावलिङ्गयोरुत्पत्तिर्नानुपपन्नेति सर्वमवदातम् ॥ ५२ ॥

विभक्तः प्रत्ययसर्गः। भूतादिसर्गं विभजते—

**अष्टविकल्पो दैवस्तैर्यग्योनश्च पञ्चधा भवति।**
**मानुषकश्चैकविधः समासतो भौतिकः सर्गः ॥ ५३ ॥**

"अष्टविकल्प" इति। ब्राह्मः, प्राजापत्यः, ऐन्द्रः, पैत्रो, गान्धर्वो, याक्षो, राक्षसः, पैशाचः इत्यष्टविधो दैवः सर्गः ॥ "तैर्यग्योनश्च पञ्चधा भवति"

---

*உத்தரம்—இவ்விரண்டு சிருஷ்டிகளும் அனாதியாக (ஆதியற்றதாக) இருப்பதால் பீஜாங்குர நியாயத்தை யனுஸரித்து "அன்யோன்யாச்ரயம்" என்பது தோஷமாக ஆகமாட்டாது. கல்பம் துடங்கும்பொழுதும் முன் கல்பத்திலுண்டான பாவம், லிங்கம் இவற்றின் சம்ஸ்காரத்தைக்காரணமாகக்கொண்டுபாவம், லிங்கம் இவைகள் உண்டாவதால் அப்பொழுதும் அன்யோன்யாச்ரயம் சம்பவிக்காததானதுபற்றி மேற் சொல்லியவையாவும் தோஷமற்றதாக ஏற்பட்டது.*

53. (அ - கை) *பிரத்யயசர்க்கம் எனப்படும் தர்மாதிகள் பிரித்து நிரூபிக்கப்பட்டன. இனி தன் மாத்திரைகளின் சிருஷ்டியைப் பிரித்து உபதேசிக்கிறார்—*

(ப - ரை) **दैवः**=*தேவர்களின் சம்பந்தியான சிருஷ்டி* **अष्टविकल्पः**=8 *விதப் பிரிவையுடையது.* **तैर्यग्योनश्च**=*திர்யக்யோனிகளெனப்படும் பசுபக்ஷி முதலியவற்றின் சிருஷ்டி* **पञ्चधा**=5*விதமாக* **भवति**=*ஆகின்றது.* **मानुषकश्च**=*மனுஷ்ய சம்பந்தியான சிருஷ்டி* **एकविधः**=*ஒருவிதமாக இருக்கின்றது.* **भौतिकः**=*பஞ்சபூதங்களின் விகாரமான* **सर्गः**=*சிருஷ்டியானது* **समासतः**=*சுருக்கமாய்* (**एवम्**=*மேற் சொல்லியபடி இருக்கின்றது.*)

(*தா - ம்*) *பஞ்சபூதங்களால் ஏற்படுகின்ற சிருஷ்டியைச்*

पशुमृगपक्षिसरीसृपस्थावराः ॥ "मानुषकश्चैकविधः" इति, ब्राह्मणत्वाद्यवान्तरजातिभेदाविवक्षया, संस्थानस्य चतुर्ष्वपि वर्णेष्वविशेषात्। इति समासतः संक्षेपतः भौतिकः सर्गः। घटादयस्त्वशरीरत्वे ऽपि स्थावरा एवेति ॥

भौतिकस्यास्य सर्गस्य चैतन्यौत्कर्षनिकर्षतारतम्याभ्यामूर्ध्वाऽवोमध्यभावेन त्रैविध्यमाह—

**ऊर्ध्वं सत्त्वविशालस्तमोविशालश्च मूलतः सर्गः।**
**मध्ये रजोविशालो, ब्रह्मादिस्तंबपर्यन्तः ॥ ५४ ॥**

---

சுருக்கமாய் மூன்றுவிதமாகப் பிரிக்கலாம். 1 தேவவகுப்பைச் சேர்ந்தது. 2. திர்யக்வகுப்பைச் சேர்ந்தது. 3. மனுஷ்ய வகுப்பைச்சேர்ந்தது. இவற்றுள் தேவவகுப்பைச் சார்ந்த சிருஷ்டி பிராம்மம், பிராஜாபத்யம், ஐந்த்ரம், பைத்ரம், காந்தர்வம், யாக்ஷம், ராக்ஷஸம், பைசாசம் என்று 8வகைப்படும். திர்யக்யோனி வகுப்பைச்சார்ந்த சிருஷ்டி பசு, மிருகம், பக்ஷி, ஸரீஸிருபம் (மார்பினுல் ஊர்ந்துசெல்லும் பிராணிகள்) ஸ்தாவரம் (மரம்முதலியன) என்று ஐந்துவகைப்படும். மனுஷ்ய வகுப்பைச்சார்ந்த சிருஷ்டி ஒருவிதமாகவேயுள்ளது. சங்கை—மனித வகுப்பிலும் பிராம்மணன், க்ஷத்திரியன், வைச்யன், சூத்திரன் என நான்குவிதப் பிரிவினைகளிருப்பதால் மானுஷசிருஷ்டி ஒருவிதமாகவேயுள்ளது என்று சொன்னது எங்ஙனம்? உத்தரம்—இங்கு அவயவங்களின் அமைப்பிலிருக்கின்ற அபேதத்தை முன்னிட்டுப் பிரிவினை செய்யப்படுகின்றதே யல்லாது பிராம்மண்யம் முதலிய ஜாதிபேதத்தைக் குறிப்பிடவில்லை என்று கொள்ளவும். குடம் முதலிய அசேதனங்களும் ஸ்தாவரவகுப்பைச் சேர்ந்தவைகளே. (எ-று)

54. (அ - கை) பௌதிகமெனப்படும் மேற்சொல்லிய சிருஷ்டிக்கு சைதன்யத்தின் ஆதிக்யம், குறைவு என்ற வித்தியாஸத்தால் மேற்பட்டது, கீழ்பட்டது, நடுநிலையிலுள்ளது என்று மூன்று விதமான பிரிவை உபதேசிக்கிறார்—

(ப - ரை) **ऊर्ध्वम्**=மேல்பாகத்திலிருக்கின்ற **सर्गः**=சிருஷ்டி

"ऊर्ध्वं सत्त्वविशालः" इति । द्युप्रभृतिसत्यान्तो लोकः सत्त्वबहुलः । "तमोविशालश्च मूलतः सर्गः" पश्वादिस्थावरान्तः, सोऽयं मोहमयत्वात्तमोबहुलः । भूलोकस्तु सप्तद्वीपसमुद्रसन्निवेशः "मध्ये रजोविशालः" धर्माधर्मानुष्ठानपरत्वाद्दुःखबहुलत्वाच्च । तामिमां लोकसंस्थितिं संक्षिपति "ब्रह्मादिस्तम्बपर्यन्तः", स्तम्बग्रहणेन वृक्षादयः संगृहीताः ॥ ५४ ॥

तदेवं सर्गं दर्शयित्वा तस्यापवर्गसाधनवैराग्योपयोगिनीं दुःखहेतुतामाह—

**तत्र जरामरणकृतं दुःखम्प्राप्नोति चेतनः पुरुषः ।**
**लिङ्गस्याविनिवृत्तेस्तस्माद्दुःखं स्वभावेन ॥ ५५ ॥**

---

**सत्वविशालः**=சத்வகுணம் அதிகமாயுள்ளது. **मूलतः**=பசு முதல் ஸ்தாவரம் வரையுள்ள **सर्गः**=ஸிருஷ்டி **तमोविशालः**=தமோகுணமதிகமாயுள்ளது. **मध्ये**=நடுவிலுள்ள பூலோகத்தில் **रजोविशालः**=ரஜோகுணமதிகமாயுள்ளது. (**भौतिकः सर्गः**=பஞ்சபூதங்களின் விகாரமான ஸிருஷ்டி) **ब्रह्मादिस्तंबपर्यन्तः**=பிரும்மா முதல் சிறிய பூச்சி முடிவாக இருக்கின்றது.

(தா - ம்) சுவர்க்கலோகம் முதல் ஸத்யலோகம் வரையுள்ள லோகங்கள் ஸத்வகுணாதிக்யம் வாய்ந்தன. பசு, பக்ஷி, மிருகம், ஸரீஸிருபம், ஸ்தாவரம் முதலியவைகள் மோஹம் நிறைந்திருப்பதால் தமோகுணாதிக்யம் வாய்ந்தன. 7 த்வீபம், 7 ஸமுத்திரம் இவைகளையுடைய பூலோகமோவெனில், தர்மாதர்மங்களையனுஷ்டிப்பதில் ஈடுபட்டிருப்பதாலும், துக்கம் நிறைந்திருப்பதாலும் ரஜோகுணாதிக்யம் வாய்ந்தது. இத்தகைய பௌதிகலோகத்தின் அமைப்பைச் சுருக்கிச் சொல்லுகிறார்—**ब्रह्मादिस्तंबपर्यन्तः इति । स्तंब** என்ற பதத்தால் மரம் முதலியவற்றையும் கிரஹித்துக்கொள்ளவேண்டும்.

55. (அ - கை) இவ்விதம் ஸிருஷ்டியை நிருபணஞ் செய்து காண்பித்து அதற்கு மோக்ஷத்திற்குச் சாதனமான யாதொரு வைராக்யமுண்டோ அதற்குச் சாதனமான துக்க ஹேதுவாயிருத்தலை உபதேசிக்கிறார்—

तत्र" इति। 'तत्र' शरीरादौ। यद्यपि विविधा विचित्रानन्दभोगभागिनः ाणभृद्देहाः, तथा ऽपि सर्वेषां जरामरणकृतं दुःखमविशिष्टम्। सर्वस्य खलु ःमेरपि मरणत्रासो—'मा न भूवम्' 'भूयासम्' इत्येवमात्मको ऽस्ति। ःखं च भयहेतुरिति दुःखंमरणम्॥

स्यादेतत्—दुःखादयः प्राकृता बुद्धिगुणाः, तत्कथमेते चेतनसम्बन्धिनो भवन्तीत्यत आह—"पुरुष" इति। पुरि लिङ्गे शेते इति पुरुषः, लिङ्गश्च तत्सम्बन्धीति चेतनो ऽपि तत्सम्बन्धी भवतीत्यर्थः॥

---

(ப - ரை) **तत्र**=அந்தத்தேவன், மனுஷ்யன் முதலிய சரீரங்களில் **पुरुषः**=லிங்கசரீரத்துடன்கூடிய **चेतनः**=புருஷன் **लिङ्गस्य**=லிங்க சரீரத்திலும் **अविनिवृत्तेः**=பேதக்ஞான முண்டாகாதபடியால் அல்லது **आविनिवृत्तेः**=லிங்கசரீரம் தொலையும்வரையில் **जरामरणकृतम्**=ஜராமரணங்களால் ஏற்பட்ட **दुःखम्**=துக்கத்தை **प्राप्नोते**=அடைகிறான். **तस्मात्**=ஆகையால் **सर्गः**=சிருஷ்டி **स्वभावेन**=இயற்கையில் **दुःखम्**=துக்கசாதனமாக இருக்கின்றது.

(தா - ம்) பிராணிகள் பலவிதமாயும், விசித்திரமாயிருக்கின்ற ஆனந்தானுபவமுள்ளவர்களாயு மிருக்கின்றனராயினும் எல்லாப்பிராணிகளுக்கும் ஜரை (கிழத்தன்மை) இறப்பு இவற்றால் ஏற்படுகின்ற துக்கம் ஒரேவிதமாக இருக்கின்றது. புழுவுக்குக் கூட 'நாம் இறந்துவிடக்கூடாது' என்று மரணத்தில் பயமிருக்கின்றது. அவ்விதம் பயமுண்டாவதற்கு துக்கமே காரணமாவதால் மரணம் துக்கமாக ஆகின்றது. சங்கை—துக்கம் முதலியவைகள் பிரகிருதியின் விகாரமாயும்; புத்தியின் குணமாயுமிருக்கின்றன. அவை எவ்விதம் சேதனனைச் சம்பந்தித்தவைகளாகின்றன? என்றால், உத்தரம்—பதிலளிக்கிறார்—**पुरुष इति। पुः** எனப்படும் லிங்கசரீரத்தில் **उष** வஸிப்பவனாக புருஷனாகின்றான். லிங்க சரீரமோ துக்கத்தின் ஸம்பந்தமுள்ளதாக இருக்கின்றது. அந்த லிங்கசரீரத்தின் ஸம்பந்தம் பெற்றிருப்பதால் சேதனனும் துக்கஸம்பந்தம் பெற்றவனாக ஆகின்றான். லிங்கசரீர ஸம்பந்தமிருந்த போதிலும் அதிலிருக்கின்ற துக்காதிகள் புருஷனிடம்

कुतः पुनर्लिङ्गसम्बन्धि दुःखं पुरुषस्य चेतनस्येत्यत आह—"लिङ्गस्याविनिवृत्तेः"—पुरुषाद्भेदाग्रहाल्लिङ्गधर्मानात्मन्यध्यवस्यति पुरुषः। अथवा दुःखप्राप्ताववधिराङा कथ्यते, लिङ्गम् यावन्न निवर्तते तावदिति ॥ ५५ ॥

उक्तस्य सर्गस्य कारणविप्रतिपत्तीर्निराकरोति—

**इत्येष प्रकृतिकृतो महदादिविशेषभूतपर्यन्तः।**
**प्रतिपुरुषविमोक्षार्थं स्वार्थ इव परार्थ आरम्भः ॥ ५६ ॥**

"इत्येष" इति। आरभ्यते इति "आरम्भः" सर्गः महदादिभूम्यन्तः प्रकृत्यैव कृतो नेश्वरेण, न ब्रह्मोपादानो, नाप्यकारणः। आकरणत्वे ह्यत्यन्ता-

---

எவ்விதம் ஸம்பவிக்கின்றதென்றால் சொல்லுகிறார்—**लिङ्गस्याविनिवृत्तेरिति**। புருஷன் வேறு, லிங்க சரீரம் வேறு என்ற பேதக் ஞானமேற்படாததால் லிங்கசரீரத்தைச் சேர்ந்த து:கதுக்காதிகளைத் தன்னிடமுள்ளதாய்ப் புருஷன் கருதுகிறான். **लिङ्गस्याऽऽविनिवृत्तेः** என்றதற்கு வேறுவிதமாக வியாக்யானஞ் செய்கின்றோம். **लिङ्गस्य, आविनिवृत्तेः** என்று பிரித்துக்கொண்டு லிங்க சரீரம் எவ்வளவு காலம் வரை விலகாமலிருக்கின்றதோ அது வரையில் இந்த துக்கானுபவம் புருஷனுக்கு உண்டாகிக்கொண்டிருக்கும். (எ—று)

(56) (அ - கை) மேற் சொல்லிய ஸிருஷ்டியுண்டாவதற்குக் காரணம் யாது என்ற விஷயத்திலிருக்கின்ற வாதிகளின் கக்ஷிகளை நிராகரணஞ் செய்கிறார்—

(ப — ரை) **महदादिविशेषभूतपर्यन्तः**—**महदादिविशेष** = மஹத் அஹங்காரம் முதலிய விசேஷங்கள் தொடங்கி **भूतपर्यन्तः**= ஐந்து பூதம் முடிவாகவுள்ள **इत्येषः**=மேற்சொல்லிய **आरंभः**=ஸிருஷ்டி **प्रतिपुरुषविमोक्षार्थम्**=ஒவ்வொரு புருஷனும் முக்தியைப் பெறுவதற்காக **स्वार्थ इव**=தனக்காகப்போல **परार्थे**=பிறருக்காக **प्रकृतिकृतः**=பிரகிருதியால் ஏற்படுத்தப்பட்டது.

(கா - ம்) ஜகத்ஸிருஷ்டியானது பிரகிருதியால் செய்யப்பட்டதேயல்லாது ஈசுவரனால் செய்யப்பட்டதல்ல. ஜகத் ஸிருஷ்டி

भावो ऽत्यन्तभावो वा स्यात्। न ब्रह्मोपादानः, चितिशक्तेरपरिणामात्। नेश्वराधिष्ठितप्रकृतिकृतः निर्व्यापारस्याधिष्ठातृत्वासम्भवात्। न हि निर्व्यापारस्तक्षा वास्याद्यधितिष्ठति ॥

ननु प्रकृतिकृतश्चेत्, तस्या नित्यायाः प्रवृत्तिशीलाया अनुपरमात् सदैव सर्गः स्यादिति न कश्चिन्मुच्येतेत्यत आह—"प्रतिपुरुषविमोक्षार्थं स्वार्थ इव परार्थ आरम्भः" इति। यथौदनकाम ओदनाय पाके प्रवृत्तः, ओदनसिद्धौ निवर्तते,—एवं प्रत्येकं पुरुषान् मोचयितुं प्रवृत्ता प्रकृतिः यं पुरुषं मोचयति तं प्रति पुनर्न प्रवर्तते, तदिदमाह स्वार्थ इवेति। स्वार्थे यथा तथा परार्थ आரम्भ इत्यर्थः ॥ ५६ ॥

---

க்குப் பிரும்மம் உபாதானகாரணமாயாவதில்லை. காரணமின்றியே ஜகத்சிருஷ்டி ஏற்படுகின்றது என்றும் சொல்லமுடியாது. ஜகத்சிருஷ்டிக்குகாரணம் எதுவும் தேவையில்லையாகில் ஜகத்சிருஷ்டி என்பது எப்பொழுதும் இல்லாததாகவோ, அல்லது எப்பொழுது மிருக்கின்றதாகவோ ஆகவேண்டிவரும். பிரும்மமும் ஜகத்திற்கு உபாதான காரணமாயாவதில்லை. ஏனென்றால் சைதன்யரூபமான பிரும்மத்திற்கு பரிணாமம் (மாறுதல்) ஸம்பவிக்காது. ஈசுவரனால் தூண்டப்பட்டப் பிரகிருதியால் ஜகத்சிருஷ்டி ஏற்படுகின்றது என்பதும் பொருந்தாது. ஏனென்றால் ஈசுவரனே கிரியையற்றவன் என்று அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது; அவ்விதம் கிரியையற்றவன் அதிஷ்டாதாவாக (தூண்டுகிறவனாக) ஆகிறான் என்பது பொருந்ாதென்பது பற்றியே என்க. கிரியையற்ற தச்சனைப்பார்த்து இவன் வாச்சியைத் தூண்டுகிறான் என்று வியவஹரிக்கின்றோமா? இல்லை. அவ்விதமே இங்கு மறியவேண்டும். சங்கை—ஜகத்சிருஷ்டியானது பிரகிருதியால் செய்யப்படுகின்றது என்று அங்கீகரித்தால் நித்தியமாயும், பிரவிருத்தியையே சுவபாவமாயுடையதாயுமிருக்கிற பிரகிருதியானது ஒருபொழுதும் ஒழிவை யடையாதாகையால் சிருஷ்டி எப்பொழுதும் ஏற்பட்டுக் கொண்டிருக்குமாதல்பற்றி

स्यादेतत्—स्वार्थं परार्थं वा चेतनः प्रवर्तते । न च प्रकृतिरचेतनैवं भवितुमर्हति, तस्मादस्ति प्रकृतेरधिष्ठाता चेतनः । न च क्षेत्रज्ञाश्चेतना अपि प्रकृतिमधिष्ठातुमर्हन्ति, तेषां प्रकृतिस्वरूपानभिज्ञत्वात् । तस्मादस्ति सर्वार्थदर्शी प्रकृतेरधिष्ठाता, स चेश्वरः—इत्यत आह—

**वत्सविवृद्धिनिमित्तं क्षीरस्य यथा प्रवृत्तिरज्ञस्य ।**
**पुरुषविमोक्षनिमित्तं तथा प्रवृत्तिः प्रधानस्य ॥ ५७ ॥**

---

ஒருவனும் மோக்ஷத்தை யடையமாட்டான் எனின்? உத்தரம்—பதிலளிக்கிறார்—**प्रतिपुरुषविमोक्षार्थं स्वार्थ इवपरार्थ आरंभः इति** । அன்னத்தில் விருப்பமுள்ளவன் அன்னங்கிடைப்பதற்காகச்சமையல் செய்வதில் பிரவிருத்திக்கிறான். அன்னங்கிட்டியவுடன் அந்தச் சமையல் என்ற வியாபாரத்தினின்றும் ஒழிவை அடைந்துவிடுகிறான் இது எவ்விதமோ அவ்விதமே ஒவ்வொரு புருஷனையும் முக்தனாகச்செய்வதற்காகப் பிரவிருத்தித்தப் பிரகிருதியும் எந்தப் புருஷனை முக்தனாக்குகின்றதோ அவன் விஷயத்தில் மறுபடியும் பிரவிருத்திப்பதில்லை. இதுவே **स्वार्थ इव** என்றதால் சொல்லப்படுகின்றது. தனது கார்யம் சித்திபெறுவதற்காக லோகத்தில் புருஷன் பிரவிருத்திப்பதுபோல் பிறருடைய கார்யம் சித்திபெறுவதற்காக இந்தப் பிரகிருதி பிரவிருத்திக்கின்றது.

(அ-கை) சங்கை—சேதனனாயிருப்பவன் (அறிவுள்ளவன்) தனக்காகவோ, பிறருக்காகவோ பிரவிருத்திக்கிறான் என்பது பொருந்தும். அசேதனமான பிரகிருதியானது பிறருக்காக இவ்விதப் பிரவிருத்திக்கின்றது என்பது சம்பவிக்காது. ஆகையால் பிரகிருதிக்கு அதிஷ்டாதாவான (தூண்டுகிறவன்) சேதனனொருவனிருக்கின்றான் என்று அங்கீகரிக்கவேண்டும். அந்தச் சேதனன் ஜீவன்தான் என்று சொல்லமுடியாது. ஏனென்றால் ஜீவர்கள் பிரகிருதியின் ஸ்வரூபத்தை யறியாதவர்களா யிருக்கின்றனர் என்பது பற்றியே என்க. ஆனதுபற்றி ஸகல ஸமாசாரங்களையும் நேரில் பார்க்கின்றவனும், பிரகிருதியைத் தூண்டுகிறவனுமான ஓர் விஜாதீய சேதனனிருக்கின்றான். அவனே ஈசுவரன் எனப்படுவன் எனின்? உத்தரம்—பதிலளிக்கிறார்.—

"वत्सविवृद्धिनिमित्तम्" इति। दृष्टं अचेतनमपि प्रयोजनं प्रति प्रवर्तमानम्, यथा वत्सविवृद्ध्यर्थं क्षीरमचेतनं प्रवर्तते। एवं प्रकृतिरचेतना ऽपि पुरुषविमोक्षणाय प्रवर्तिष्यते॥

न च—'क्षीरप्रवृत्तेरपीश्वराधिष्ठाननिबन्धनत्वेन साध्यत्वान्न साध्यव्यभिचार'—इति, सांप्रतम्। प्रेक्षावतः प्रवृत्तेः स्वार्थकारुण्याभ्यां व्याप्तत्वात्।

---

(ப - ரை) **अज्ञस्य**=அசேதனமான **क्षीरस्य**=பாலுக்கு **वत्सविवृद्धिनिमित्तम्**=*கன்று வளர்வதற்காக **प्रवृत्तिः**=வியாபாரம் **यथा**=எவ்விதம் **जायते**=உண்டாகின்றதோ **तथा**=அவ்விதமே **पुरुषविमोक्षनिमित्तम्**=ஒவ்வொரு புருஷனும் மோக்ஷத்தை யடைவதற்காக **प्रधानस्य**=பிரகிருதிக்கு **प्रवृत्तिः**=வியாபாரம் **जायते**=ஏற்படுகின்றது.

(தா - ம்) அசேதனமான வஸ்துவும் பிரயோஜனத்தை யுத்தேசித்துப் பிரவிருத்தியையடைவதாகக் கண்டிருக்கிறோம். உதாஹரணம்—கன்று வளர்வதற்காக அசேதனமான க்ஷீரம் வியாபாரத்தை யடைகின்றது. அவ்விதமே அசேதனமான பிரகிருதியும் புருஷனுக்கு மோக்ஷம் என்ற நிலை ஏற்படுவதற்காகப் பிரவிருத்தியை யடைகின்றது. சங்கை—பசுவின் பாலினிடமுண்டாகின்ற உத்பத்தி என்ற வியாபாரமும், ஈசுவரனால் தூண்டப்பட்டேயுண்டாவதா யங்கீகரிப்பதால் †சாத்யவியபிசாரமில்லை என்று சொல்லக்கூடாதோ வெனின்? உத்தரம்—அது சரியல்ல. ஏனெ

---

* பசு கன்றுபோடுவதற்குமுன் பாலற்றிருந்தபோதிலும், கன்று போட்டவுடன் அதனிடம் பாலுண்டாகின்றதென்பதை நாம் அனுபவத்திற்கண்டிருக்கிறோம். அவ்விதம் பால் தானாகவே உண்டாவதற்குக்காரணம் கன்று பாலில்லாவிடில் வளராதென்பதே. ஆகவே அசேதனமான பால் என்ற வஸ்துவினிடம் கன்று வளர்தல் என்ற பிரயோஜனத்திற்காக விருத்தியடைதல் என்ற வியாபாரமுண்டாவது யாவர்க்கும் பிரசித்தமாக இருக்கின்றது. அது இங்கு திருஷ்டாந்தமாகக் கூறப்படுகிறது.

† **प्रवृतित्वम्** என்பது ஹேது **(ईश्वररूप)चेतनाधिष्ठितत्वम्** சாத்யம் **चेतनाधिष्ठितत्वम्** என்ற சாத்யமில்லாத விடத்தில் **प्रवृत्तित्वम्** என்ற ஹேதுவிருக்குமாகில் வியபிசாரம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். க்ஷீரத்

ते च जगत्सर्गाद्व्यावर्तमाने प्रेक्षावत्प्रवृत्तिपूर्वकत्वमपि व्यावर्तयतः। न ह्यवाप्तसकलेप्सितस्य भगवतो जगत् सृजतः किमप्यभिलषितं भवति। नापि कारुण्यादस्य सर्गे प्रवृत्तिः, प्राक् सर्गाज्जीवानामिन्द्रियशरीरविषयानुत्पत्तौ दुःखाभावेन कस्य प्रहाणेच्छा कारुण्यम्? सर्गोत्तरकालं दुःखिनो ऽवलोक्य कारुण्याभ्युपगमे, दुरुत्तरमितरेतराश्रयत्वन्दूषणम्,—कारुण्येन सृष्टिः, सृष्ट्या च कारुण्यमिति। अपि च करुणया प्रेरित ईश्वरः सुखिन एव जन्तून् सृजेन्न

---

னில் நன்கறிந்தவனின் பிரவிருத்தியானது தனது பிரயோஜனத்துடனே காருண்யத்துடனே வியாப்தியுள்ளதாயிருக்கும் என்பது பற்றியே என்க. அதாவது—சேதனனின் பிரவிருத்தியானது தனது பிரயோஜனத்தை முன்னிட்டதாகவோ, காருண்யத்தால் ஏற்பட்டதாகவோ இருக்கின்றது என்பதேயாம். இவ்விரண்டும் ஜகத்சிருஷ்டியில் ஸம்பவிக்காதாகையால் சேதனனுடைய பிரவிருத்தியை முன்னிட்டிருத்தலையும் விலக்கி விடுகின்றன. அடையவேண்டிய பொருள்கள் யாவையுமடைந்தவராயும், நிறைந்த வீர்யம், நிறைந்த கீர்த்தி, நிறைந்த சம்பத்து, நிறைந்த ஞானம், நிறைந்த விக்ஞானம் இவையுள்ளவராயு மிருக்கிற ஈசுவரனுக்கு ஜகத்தைப் படைத்து அதனாலடையவேண்டிய பயன் ஏதாகிலும் சம்பவிக்குமா! சம்பவிக்காது. ஆனதுபற்றியே ஈசுவரன் ஜகத்தைப் படைப்பதற்குத் தனது கார்யசித்தி என்பது நிமித்தமாகாது. தயையினால் ஈசுவரன் ஜகத்சிருஷ்டியில் பிரவிருத்திக்கிறான் என்பதும் பொருந்தாது. ஏனெனில் துக்கமடைந்தப் பிராணியைக்கண்டு அப்பிராணியின் துக்கத்தை விலக்குவதில் விருப்பமே "காருண்யம்" எனப்படும். சிருஷ்டி ஏற்படுவதற்குமுன் ஜீவர்கட்குத் துக்கத்திற்குச் சாதனமான இந்திரியம், சரீரம், விஷயம் முதலியன வுண்டாகாதபடியால் துக்கமே சம்பவிக்காதானதுபற்றி எந்தத் துக்கத்தைப் போக்கவேண்டுமென்ற இச்சாரூபமான காருண்யம் ஈசுவரனுக்குச் சம்பவிக்கும்.

---

தின் பிரவிருத்தியும் ஈசுவரனால் தூண்டப்பட்டே ஏற்படுவதால் அங்கும் சேதனாதிஷ்டிதத்வம் என்ற சாத்யமிருக்கிறது. ஆதலால்வியபிசாரமில்லை.

विचित्रान्। 'कर्मवैचित्र्याद्वैचित्र्यम्' इति चेत्, कृतमस्य प्रेक्षावतः कर्माधिष्ठानेन, तदनधिष्ठानमात्रादेवाचेतनस्यापि कर्मणः प्रवृत्त्युपपत्तेः तत्कार्यशरीरेन्द्रियविषयानुत्पत्तौ दुःखानुत्पत्तेरपि सुकरत्वात् ॥

प्रकृतेस्त्वचेतनायाः प्रवृत्तेर्न स्वार्थानुग्रहो न वा कारुण्यं प्रयोजकमिति नोक्तदोषप्रसङ्गावतारः। पारार्थ्यमात्रन्तु प्रयोजकमुपपद्यते। तस्मात् सुष्ठूक्तम्—"वत्सविवृद्धिनिमित्तम्" इति ॥ ५७ ॥

---

சிருஷ்டி ஏற்பட்டபிறகு துக்கமுள்ளப் பிராணிகளைப் பார்த்து தயையுண்டாகின்றதென அங்கீகரித்தால்—கருணையால் சிருஷ்டி, சிருஷ்டியால் காருண்யம்—என்ற அன்யோன்யாச்ரய தோஷம் சம்பவிக்கும்.

மேலும் கருணையால் தூண்டப்பட்டு ஈசுவரன் ஜகத்தைப் படைப்பானாகில் எல்லாப் பிராணிகளையும் சுகமுள்ளவர்களாய்ப் படைப்பரே யல்லாது விசித்திரமாய்ப் படைக்கமாட்டார். அந்தந்த ஜீவர்களின் கர்ம வைசித்திரியத்தால் ஜகத்சிருஷ்டியிலும் வைசித்திரியம் ஏற்படுகின்றதெனில், கர்ம சஹாயனான ஈசுவரன் வேண்டுவதில்லை; ஈசுவர ஸஹாயமற்ற கர்மாவினாலேயே அசேதனமான பிரகிருதிக்கும் பிரவிருத்தி ஏற்படலாம். மேலும் பிரகிருதியின் கார்யமான சரீரம், இந்திரியம், விஷயம் முதலியன ஏற்படாவிடில் துக்கமுமுண்டாவதில்லை என்றும் ஸாதித்து விடலாம். ஆகையால் ஈசுவரன் ஒருவன் வேண்டியதில்லை. பிரகிருதி அசேதனமாயிருப்பதால் அதனிடமுண்டாகின்ற பிரவிருத்திக்கு தனது கார்யஸித்தியோ, காருண்யமோ காரணமாயாவதில்லையானதுபற்றி ஈசுவரப்பிரவிருத்தியில் கூறப்பட்ட தோஷங்கள் சம்பவிக்காது. பாரார்த்யம் (மற்றவனின் பிரயோஜனத்திற்காக ஏற்பட்டிருத்தல்) என்பது மட்டும் பிரகிருதியின் பிரவிருத்திக்குக் காரணமாக ஏற்படலாம். ஆகையால் **वत्सविवृद्धिनिमित्तम्** என்றதாற் சொல்லியது மிக்க பொருத்தமுள்ளதாகவே இருக்கின்றது. (எ-று)

"स्वार्थ इव" इति दृष्टान्तितम्" । (कारिका ५६) तद्विभजते—

**औत्सुक्यनिवृत्त्यर्थं यथा क्रियासु प्रवर्तते लोकः ।**
**पुरुषस्य विमोक्षार्थं प्रवर्तते तद्वद्व्यक्तम् ॥ ५८ ॥**

"औत्सुक्य–" इति । औत्सुक्यमिच्छा, सा खल्विष्यमाणप्राप्तौ निवर्तते। इष्यमाणश्च स्वार्थः, इष्टलक्षणत्वात् फलस्य । दार्ष्टान्तिके योजयति–"पुरुस्य विमोक्षार्थप्रवर्तते तद्वद्व्यक्तम्" इति ॥ ५८ ॥

ननु भवतु पुरुषार्थः प्रकृतेः प्रवर्तकः, निवृत्तिस्तु कुतस्त्या प्रकृतेः? इत्यत आह—

---

58 (அ - கை) **स्वार्थइव** என்று திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டது. அதைப்பிரித்து உபதேசிக்கிறார்—

(ப - ரை) **औत्सुक्यनिवृत्यर्थम्**=ஆசை விலகுவதற்காக **लोकः**= ஜனம் **यथा**=எவ்விதம் **क्रियासु**=காரியங்களில் **प्रवर्तते**=பிரவிருத்திக்கின்றதோ **तद्वत्**=அவ்விதமே **अव्यक्तम्**=பிரகிருதி **पुरुषस्य**=புருஷனுக்கு **विमोक्षार्थम्**=மோக்ஷ மேற்படுவதற்காக **प्रवर्तते**=பிரவிருத்திக்கின்றது.

(தா - ம்) ஆசையானது விரும்பிய பொருள் கிடைத்தவுடன் நிவிருத்தியடைகின்றது. எது விரும்பப்படுகிறதோ அதுவே 'ஸ்வார்த்தம்' எனப்படும். ஆகவே ஜனங்கள் எவ்விதம் தனது கார்யஸித்திக்காக முயற்சிக்கின்றனவோ அவ்விதமே பிரகிருதியும் பரார்த்தமான மோக்ஷத்தையே தனது கார்யமாகக் கருதிப் பிரவிருத்திக்கின்றது. மோக்ஷம் ஏற்பட்டவுடன் ஒழிவை யடைந்து விடுகின்றது. (எ-று)

59 (அ - கை) சங்கை—புருஷார்த்தம் பிரகிருதிக்குப் பிரவிருத்தியை யுண்டுபண்ணுவதாக இருக்கட்டும். ஆயினும் பிரகிருதிக்கு நிவிருத்தி எதனால் ஏற்படுகின்றது? உத்தரம்—பதிலளிக்கிறார்.—

**रङ्गस्य दर्शयित्वा निवर्तते नर्तकी यथा नृत्यात् ।**
**पुरुषस्य तथाऽऽत्मानं प्रकाश्य विनिवर्तते प्रकृतिः ॥ ५९ ॥**

"रङ्गस्य" इति, स्थानेन स्थानिनः पारिषदानुपलक्षयति । 'आत्मानम्' शब्दाद्यात्मना पुरुषाद्भेदेन च प्रकाश्येत्यर्थः ॥ ५९ ॥

स्यादेतत्—'प्रवर्ततां प्रकृतिः पुरुषार्थम् । पुरुषादुपकृतात्प्रकृतिर्लप्स्यते कञ्चिदुपकारम्, आज्ञासम्पादनाराधितादिवाज्ञापयितुर्भुजिष्या । तथा च न परार्थोऽस्या आरम्भः'—इत्यत आह—

**नानाविधैरुपायैरुपकारिण्यनुपकारिणः पुंसः ।**
**गुणवत्यगुणस्य सतस्तस्यार्थमपार्थकञ्चरति ॥ ६० ॥**

---

(ப - ரை) **नर्तकी**=நர்த்தனஞ் செய்கின்ற ஸ்திரீயானவள் **रङ्गस्य**=சபையிலிருக்கின்ற புருஷர்கட்கு (**नृत्तम्**=நர்த்தனத்தை) **दर्शयित्वा**=காண்பித்துவிட்டு **यथा**=எவ்விதம் **नृत्यात्**=நர்த்தனத்தினின்றும் **निवर्तते**=நிவிருத்தியை யடைகின்றுளோ **तथा**=அவ்விதமே **प्रकृतिः**=பிரகிருதியானது **पुरुषस्य**=புருஷனுக்கு **आत्मानम्**=தன்னை **प्रकाश्य**=சப்தம் முதலிய பிரபஞ்சவடிவமாகவும், புருஷனினும் வேறுபட்டதாகவும் காண்பித்து **विनिवर्तते**=ஒழிவை யடைகின்றது. தான்செய்யவேண்டியப் பிரயோஜனத்தைச் செய்து முடித்துவிட்டபடியாலேயே பிரகிருதியானது விவேக ஸாக்ஷாத்காரமேற்பட்டவுடன் ஒழிவை யடைகின்றது என்று கருத்து.

60 (அ . கை) சங்கை—பிரகிருதியானது புருஷனுக்கு மோக்ஷமுண்டாவதற்காகப் பிரவிருத்தியை யடையட்டும். ஆயினும் ஆக்ஞைப்படி நடந்ததால் திருப்தியை யடைந்த யஜமானனிடமிருந்து வேலைக்காரி யாதானும் பரிசுபெறுவதுபோல் பிரகிருதியானது தன்னுல் உபகாரம் பெற்ற புருஷனிடமிருந்து யாதானு முபகாரத்தை யடையக்கூடும். ஆகவே பிரகிருதியின் பிரவிருத்தி பரார்த்தமல்ல, எனின் ? உத்தரம்—பதிலளிக்கிறுர்—

(ப - ரை) **अनुपकारिणः**=பதிலுபகாரஞ் செய்யாத **पुंसः**=புரு

"நானா-" इति। यथा गुणवान् उपकार्यपि भृत्यो निर्गुणे ऽतएव अनुपकारिणि स्वामिनि निष्फलाराधनः, एवमियम्प्रकृतिस्तपस्विनी गुणवती उपकारिणी अनुपकारिणि पुरुषे व्यर्थपरिश्रमेति पुरुषार्थमेव यतते न स्वार्थमिति सिद्धम् ॥ ६० ॥

स्यादेतत्—'नर्तकी नृत्यम्परिषद्भ्यो दर्शयित्वा निवृत्ता ऽपि पुनस्तद्दृष्टकौतूहलात् प्रवर्तते यथा, तथा प्रकृतिरपि पुरुषायात्मानं दर्शयित्वा निवृत்தா ऽपि पुनः प्रवर्त्स्यति'—इत्यत आह—

---

ஷனுக்கு **नानाविधैः**=பலவிதமான **उपायैः**=ஸாதனங்களால் **उपकारिणी**=நன்மையைச்செய்கின்றதும், **अगुणस्य**=குணமற்றவனாய் **सतः**= இருக்கின்ற புருஷன் விஷயத்தில் **गुणवती**=நல்லகுண முள்ளதாய் நடக்கின்றதுமான பிரகிருதி **तस्यार्थम्**=அந்தப்புருஷனின் பிரயோஜனத்திற்காக **अपार्थकम्** = தனக்கு எவ்விதப் பிரயோஜனமுமின்றி **चरति**=பிரவிருத்திக்கின்றது.

(கா - ட்) ஓர் சேகவன் நல்லகுண முள்ளவனாயினும், யஜமானனுக்குப் பல விதமான நன்மைகளைச் செய்கின்றவனாயினும், குணமற்றவனும், ஆனது பற்றியே பதிலுபகாரம் செய்யாதவனுமான யஜமானன் விஷயத்தில் எவ்விதம் பயனற்ற ஸேவையை (முயற்சியை) யுடையவனாயாவனோ அவ்விதமே யாவரும் பார்த்துத் துக்கிக்கக்கூடிய நிலையிலுள்ள இந்தப்பிரகிருதியானது, நல்லகுணம், பிறருக்குபகரித்தல் இவையுள்ளதாயினும், பதிலுபகாரத்தைச் செய்யாத புருஷன் விஷயத்தில் பயனற்றசிரம முள்ளதாகவே ஆகின்றது. ஆகவே பிரகிருதி, புருஷனின் பிரயோஜனத்தை யுத்தேசித்தே முயற்சிக்கின்றது; தனது பிரயோஜனம் யாதுமில்லை என்று அறியவேண்டும். (எ - று)

61 (அ - கை) நர்த்தனஞ் செய்கின்ற பெண்மணி நர்த்தனத்தை ஸபையிலுள்ளோருக்குக் காண்பித்துவிட்டுத்திரும்பிய போதிலும் மறுபடியும் அதைப் பார்க்கின்றவர்கள் விரும்பினால் அவர்களது அவ்வாசையை யனுஸரித்து நர்த்தனஞ் செய்வதில் பிரவிருத்திப்பது போலப் பிரகிருதியும் புருஷனுக்குத் தனது

प्रकृतेः सुकुमारतरन्न किञ्चिदस्तीति मे मतिर्भवति।
या दृष्टा ऽस्मीति पुनर्न दर्शनमुपैति पुरुषस्य ॥ ६१ ॥

" प्रकृतेः " इति। सुकुमारतरता अतिपेशलता, परपुरुषदर्शनासहिष्णुतेति यावत्। असूर्यंपश्या हि कुलवधूः अतिमन्दाक्षमन्थरा प्रमादाद्विगलितसिचयाञ्चला चेदालोक्यते परपुरुषेण, तदा ऽसौ तथा प्रयतते, अप्रमत्ता यथैनां परपुरुषान्तराणि न पुनः पश्यन्ति,। एवंप्रकृतिरपि कुलवधूतो ऽप्यधिका दृष्टा विवेकेन न पुनर्द्दृश्यत इत्यर्थः ॥ ६१ ॥

---

ஸ்வரூபத்தைப் பிரகாசப் படுத்தித் திரும்பிய போதிலும் மறுபடியும் பிரவிருத்தியை யடையக்கூடும் என்று சந்தேஹித்துப் பதிலளிக்கிறார்—

(ப - ரை). **प्रकृतेः**=பிரகிருதியைக் காட்டிலும் **सुकुमारतरम्**=அன்யபுருஷனின் பார்வையைச் சஹிக்காதது **किञ्चित्**=எதுவும் **नास्तीति**=இல்லை என்ற **मतिः**=புத்தியானது **मे**=எனக்கு **भवति**=உண்டாகின்றது. (**हि**=ஏனென்றால்) **या**=எந்தப் பிரகிருதியானது **दृष्टास्मि** = (அன்ய புருஷனால்) பார்க்கப் பட்டவளாக இருக்கின்றேன் **इति**=என்ற காரணத்தால் **पुनः**=மறுபடியும் **पुरुषस्य**=புருஷனுடைய **दर्शनम्**=பார்வையை **नोपैति**=அடைகிறதில்லையோ.

(தா - ம்) ஸூர்யனைக் கூடக் கண்டெடுத்துப்பார்க்காதவளும், மிகுந்த வெட்க முள்ளவளுமான குலஸ்திரீயானவள், தவறுதலால் கொஞ்சம் நழுவின வஸ்திரத்தை யுடையவளாயிருக்கும் பொழுது அன்ய புருஷனால் பார்க்கப் படுவாளேயாகில் அப்பொழுது அவள் எவ்விதம் மறுபடியும் கவனக்குறைவை யடையாமலிருப்பதற்கும்,பரபுருஷன் தன்னைப்பார்க்காமலிருப்பதற்கும் முயற்சி செய்வாளோ அவ்விதமே குலஸ்திரீயினும் மேன்மை தங்கியப் பிரகிருதியானது புருஷனினும் வேறு பட்டதாய் பார்க்கப்படுமே யாகில் மறுபடியும் தன்னை அவ்விதம் பார்க்கும் படியான நிலையில் வைத்துக் கொள்வதில்லை. ஆகையால் விவேக சாக்ஷாத் காரமேற்பட்ட பிறகு பிரகிருதியானது சேஷ்டிக்கிறதில்லை. (எ - று)

स्यादेतत्—"पुरुषश्चेदगुणो ऽपरिणामी, कथमस्य मोक्षः? मुचेर्बन्धनविश्लेषार्थत्वात्, सवासनक्लेशकर्माशयानाञ्च बन्धनसमाख्यानां पुरुषे ऽपरिणामिन्यसम्भवात्। अत एवास्य च पुरुषस्य न संसारः प्रेत्यभावापरनामाऽस्ति, निष्क्रियत्वात्। तस्मात् 'पुरुषविमोक्षार्थम्' इति रिक्तं वचः" इतीमां शङ्कामुपसंहारव्याजेनाभ्युपगच्छन्नपाकरोति ॥

**तस्मान्न बध्यते ऽद्धा न मुच्यते नापि संसरति कश्चित्।**
**संसरति बध्यते मुच्यते च नानाश्रया प्रकृतिः ॥ ६२ ॥**

---

62 (அ - கை) சங்கை—புருஷன் என்பவன் குணமற்றவனும், பரிணாமமற்றவனுமிருப்பானாகில் அவனுக்கு 'மோக்ஷம்' என்பது எங்ஙனம்? **मुच्** என்ற தாதுவிற்கோ பந்தத்தை (கட்டை) அவிழ்த்துவிடுதல் என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது. பந்தம் எனப்படும் வாஸனையுடன் கூடிய அவித்யை அஸ்மிதை முதலியவைகளும், புண்ணியபாபகர்மங்களும் சித்தத்திலிருக்கின்ற ஸம்ஸ்காரங்களும் பரிணாமமற்ற புருஷனிடமோ சம்பவிக்காது. ஆதலால் புருஷன் மோக்ஷத்தை யடைகிறான் என்பது எங்ஙனம் பொருந்தும். புருஷன் குணமற்றிருப்பதுபற்றி கிரியை யற்றிருப்பதால் பிரேத்யபாவம் எனப்படும் ஸம்ஸாரமும் ஸம்பவிக்காது. ஆகையால் **पुरुषविमोक्षार्थम्** (புருஷன் மோக்ஷத்தையடைவதற்காக) என்று கூறியதற்கு அர்த்தமில்லை என்று ஸந்தேகித்து அதை அங்கீகரித்துக் கொண்டு சாஸ்திரார்த்தத்தை முடிக்கல் என்ற வியாஜமாய் பதிலளிக்கிறார்—

(ப - ரை) **तस्मात्**=புருஷன் கர்மாதிகளற்றிருப்பதால் **कश्चित्**=ஒருவனும் **अद्धा**=உண்மையில் **नबध्यते**=பந்தத்தையடைவதில்லை **नमुच्यते**=மோக்ஷத்தை யடைவதில்லை. **नापिसंसरति**=ஜனனமரணத்தையுமடைவதில்லை. **प्रकृतिः**=பிரகிருதிதான் **नानाश्रया**=அநேகவிதமாக இருந்துகொண்டு **संसरति** = ஜனனமரணங்களை யடைகின்றது. **बध्यते** = பந்தத்தை யடைகின்றது. **मुच्यतेच** = மோக்ஷத்தையுமடைகின்றது.

"तस्मात्" इति। अद्धा न कश्चित् पुरुषो बध्यते, न कश्चित् संसरति, न कश्चिन्मुच्यते। प्रकृतिरेव तु नानाश्रया सती बध्यते संसरति मुच्यते चेति बन्धमोक्षसंसाराः पुरुषेषूपचर्यन्ते। यथा जयपराजयौ भृत्यगतावपि स्वामिन्युपचर्यते, तदाश्रयेण भृत्यानान्तद्भागित्वात् तत्फलस्य च शोकलाभादेः स्वामिनि सम्भवात् भोगापवर्गयोः प्रकृतिगतयोरपि विवेकाग्रहात् पुरुषसम्बन्ध उपपादित इति सर्वंपुष्कलम्॥ ६२॥

नन्ववगतम् प्रकृतिगता बन्धसंसारापवर्गाः पुरुषे उपचर्यन्ते इति। किंसाधनाः पुनरेते प्रकृतेरित्यत आह—

---

(தா - ம்) உண்மையில் ஒருபுருஷனும் பந்தத்தை யடைவதில்லை, ஒரு புருஷனும் ஜனனமரணங்களை யடைவதில்லை, ஒரு புருஷனும் மோக்ஷத்தையடைவதில்லை, பிரகிருதிதான் உண்மையில் பலவிதமாகப் பிரிந்திருந்துகொண்டு பந்தத்தை யடைகின்றது, ஜனனமரணங்களை யடைகின்றது, மோக்ஷத்தையு மடைகின்றது. அவ்வித மிருந்தபோதிலும் பந்தம், மோக்ஷம், ஸம்ஸாரம் இவைகள் புருஷனுக் கேற்படுவதாய் வழங்கப்படுகின்றன. உதாஹரணம்—ஜயம் பராஜயம் : இவைகள் உண்மையில் வேலையாட்களிடமிருந்த போதிலும் யஜமானனை யாச்ரயித்திருப்பது பற்றி வேலையாட்கள் ஜயபராஜயங்களை யடைவதாலும், ஜயபராஜயத்தின் பலமான துக்கம், லாபம் இவைகளை முடிவில் யஜமானனே யடைவதாலும், எவ்விதம் யஜமானனிட மிருப்பனவாய் வியவஹாரிக்கப் படுகின்றனவோ, அவ்விதமே போகம் மோக்ஷம் இவைகள் பிரகிருதியினிட மிருந்தபோதிலும் விவேக க்ஞான மில்லாமையால் புருஷ ஸம்பந்தத்தை யடைவதாய் வியவஹாரிக்கப்படுகின்றன வென்பதை முன்னமே நிரூபணஞ் செய்திருக்கிறோம்.

63 (அ - கை) பிரகிருதியினிடமிருக்கின்ற பந்தம், ஸம்ஸாரம், மோக்ஷம் இவைகள் புருஷனிட மிருப்பன வாய் வியவஹாரிக்கப்படுகின்றன என்று அறியப்பட்டது. பந்தம், ஸம்ஸா

रूपैः सप्तभिरेव तु बध्नात्यात्मानमात्मना प्रकृतिः ।
सैव च पुरुषार्थंप्रति विमोचयत्येकरूपेण ॥ ६३ ॥

"रूपैः" इति । तत्त्वज्ञानवर्जं बध्नाति धर्मादिभिस्सप्तभी रूपैः भावैरिति । "पुरुषार्थंप्रति" भोगापवर्गंप्रति "आत्मना ऽऽत्मानम्" एकरूपेण तत्त्वज्ञानेन विवेकख्यात्या विमोचयति, पुनर्भोगापवर्गौ न करोतीत्यर्थः ॥६३॥

अवगतमीदृशं तत्त्वम्, ततः किमित्यत आह—

एवन्तत्त्वाभ्यासान्नास्मि न मे नाहमित्यपरिशेषम् ।
अविपर்யயाद्विशुद्धं केवलमुत्पद्यते ज्ञानम् ॥ ६४ ॥

---

ரம், மோக்ஷம் இவைகள் பிரகிருதிக்கு எதை ஸாதனமாக வைத்துக்கொண்டு ஏற்படுகின்றன? வென்றால் பதிலளிக்கிறார்.—

(ப - ரை) प्रकृतिः = பிரகிருதியானது सप्तभिः=ஏழுவிதமான रूपैरेव=தர்மம் முதலிய பாவங்களால் மட்டும், आत्मना=தன்னாலேயே आत्मानम्=தன்னை बध्नाति=கட்டிக்கொள்ளுகிறது. सैवच=அந்தப்பிரகிருதியே एकरूपेण=ஒரு பாவத்தால் (தத்வக்ஞானத்தால்) पुरुषार्थप्रति=புருஷார்த்தமான மோக்ஷமுண்டாவதற்காக आत्मानम् =தன்னை विमोचयति=விடுவித்துக் கொள்ளுகிறது.

(தா-ம்) தர்மம், அதர்மம், க்ஞானம், அக்ஞானம், வைராக்யம், அவைராக்யம், ஐசுவர்யம், அனைசுவர்யம் இவ்வெட்டும் भाव எனப்படும் என்றும், இவைகள் புத்தியின் தர்மங்கள் என்றும் சொல்லி இருக்கிறோம். இவற்றுள் ஞானம் என்றதைத் தவிர்த்து மற்ற ஏழுவிதமான பாவங்களால் பிரகிருதியானது தன்னைப்பந்தப் படுத்திக்கொள்ளுகிறது. அதாவது பிரகிருதி புருஷ விவேகம் என்ற தத்வக்ஞானம் ஏற்பட்டுவிட்டால் பிரகிருதியானது மறுபடியும் போகம் மோக்ஷம் இவைகளைச் செய்வதில்லை. (எ - று)

64. (அ — கை) மேல் நிரூபணஞ் செய்தப்பிரகாரம் தத்துவங்கள் அறியப்படட்டும்; அதனால் என்ன ஏற்படுகின்றது என்றால் பதிலளிக்கிறார்—

"एवम्" इति । तत्त्वेन विषयेण तत्त्वज्ञानमुपलक्षयति । उक्तरूपप्रकारतत्त्वविषयज्ञानाभ्यासादादरनैरन्तर्यदीर्घकालसेवितात् सत्त्वपुरुषान्यतासाक्षात्कारिज्ञानमुत्पद्यते । यद्विषयश्चाभ्यासस्तद्विषयकमेव साक्षात्कारमुपजनयति,— तत्त्वविषयश्चाभ्यास इति तत्त्वसाक्षात्कारं जनयति । अत उक्तम् 'विशुद्धम्' इति ॥

कुतो विशुद्धमित्यत आह—"अविपर्ययात्" इति । संशयविपर्ययौ हि ज्ञानस्य अविशुद्धी, तद्रहितं विशुद्धम्, तदिदमुक्तम्—"अविपर्ययात्" इति ।

---

(ப - ரை) **एवम्**=இவ்விதம் **तत्त्वाभ्यासात्**=தத்வக்ஞானத்தின் ஆவிருத்தியால் **नास्मि**=என்னிடம் எவ்விதக்கிரியையுமில்லை **नाहम्**=நான் கர்த்தாவல்ல, **न मे**=நான் அவற்றின் பலத்தையனுபவிப்பவனல்லன் **इति**=என்ற வடிவமுள்ளதாயும், **अविपर्ययात्**=ஸம்சயம், விபர்யயம் இவற்றின் தர்மமில்லாமையால் **विशुद्धम्**=தோஷமற்றதாயும், **केवलम्**=மித்தியாக்ஞான ஸம்பந்தமற்றதாயும் **अपरिशेषम्**=அறியப்படாதவஸ்து வற்றதாயுமிருக்கிற **ज्ञानम्** = பிரகிருதி புருஷ ஸாக்ஷாத்காரம் என்ற க்ஞானம் **उत्पद्यते**=உண்டாகின்றது.

(தா - ம்) விஷயத்தைக் குறிக்கின்ற **तत्त्व** என்றபதம் தத்வக்ஞானத்தை கௌணீ என்ற விருத்தியால் கூறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டும். மேற் சொல்லியப்பிரகாரமுள்ளதும், தத்வத்தை விஷயீகரிக்கின்றதுமான ஞானத்தை அப்யாசஞ் செய்வதால்-மேற்சொல்லிய க்ஞானத்தை ஆதரவுடனும் (ஊக்கத்துடனும்) இடைவிடாமலும் வெகுகாலமும் பழக்கிவருவதால்—பிரகிருதி புருஷ பேதத்தைச் சாக்ஷாத்கரிக்கின்ற க்ஞானமுண்டாகின்றது. அப்யஸிக்கப்படுகின்றக் ஞானம் எதை விஷயீகரிக்கின்றதோ அதை விஷயீகரித்த ஸாக்ஷாத்காரத்தையே மேற்சொன்ன அப்யாஸம் ஏற்படுத்தும். அப்யஸிக்கப்படுகின்றக் ஞானம் தத்துவத்தை விஷயீகரிப்பதால் அது தத்துவஸாக்ஷாத் காரத்தையே உண்டுபண்ணுகிறது. இவ்வபிப்ராயத்தை மேற்கொண்டே **विशुद्धम्** என்றபதம் போடப்பட்டிருக்கிறது. தத்துவ ஸாக்ஷாத்காரம் தோஷமற்றதென்பது எங்ஙனம்? எனின், பதிலளிக்

